உ

சிவமயம்.

மேலகரம்,

திரிகூடராசப்பன் கவிராயமூர்த்திகள்

அருளிச்செய்த

# திருக்குற்றாலத்தலபுராணம்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கம் நூற்பரிசோதகர்

மு. ரா. அருணாசலக் கவிராயர்

எழுதிய

அரும்பதவுரையுடன்

மேறபடி

திருக்குற்றாலநாதசுவாமி கோவில்

தர்மகர்த்தா

ஸ்ரீமான் V. S. சண்முகநாத முதலியார்

அவர்களால்

தென்காசி, ஸ்ரீ மீனாக்ஷி பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1938.



இதன் விலை ரூ. 1—0—0.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவை.





மதுரைத் தமிழ்ச்சங்கம் நூற்பரிசோதகர்

# மு. ரா. அருணாசலக் கவிராயர் இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

---

அரியபெருங் காப்பியத்தி னிலக்கணங்கட்
இலக்கியமீ தாமென் றோதற்
குரியதிருக் குற்றாலத் தலபுரா
ணம்பாடி யுய்ந்தான் வண்மைப்
பெரியவே ளாளர்குல சிகாமணியாய்
மேலகரம் பிறங்குஞ் சீர்த்தித்
தெரியலணி திரிகூட ராசப்பக்
கவிராச செல்வன் மன்னோ.

---

உ

சிவமயம்.

## திருக்குற்றாலத் தலபுராணம்

# மூன்றாம் பதிப்பு முகவுரை.

---

சந்தனப் பொதியத் தடவரை முனிக்குச்
செந்தமி ழுணர்த்திய தேசிகற் பணிவாம்.

---

மூர்த்தி, தலம், தீர்த்தமாகிய மூன்று பெருமைகளையுமுடைத்தாயும், பாண்டிவள நாட்டுக்கு அணிகலமாயும், யாத்திரிகர்கள் சதா காலமும் வந்து நீராடித் தரிசித்து உடல் நலமும், உயிர் நலமும் பெற்று வருவதுமாகிய இத்திருக்குற்றாலத் திவ்விய க்ஷேத்திரத்தின் புராணத்தை மேலகரம், திரிகூடராஜப்பக் கவிராஜ மூர்த்திகள் சுமார் 220 வருஷங்களுக்கு முன்னர் இயற்றினார்கள்.

அவர்கள் கல்வியையும், சிறப்பையும் அவர்களியற்றிய பல பிரபந்தங்களிலிருந்து அறியலாம். அப்பிரபந்தங்களிலொன்றாகிய திருக்குற்றாலத் தலபுராணம் இற்றைக்குச் சுமார் 220 வருஷங்களுக்கு முன்னர் பாடியிருக்கவேண்டுமென்று குறவஞ்சி மேடைத் தாமிர சாஸனத்திலிருந்து ஊகிக்கவேண்டியிருக்கிறது.

இந்நூலியற்றிய காலத்திலும், அதற்குப் பின்னால் அச்சுவாகனம் உண்டாகும் வரையும் ஏடுகளில் எழுதிப் பலர் இந்நூலைப் படித்து வந்ததாகத் தெரிகிறது. சுமார் 60 வருஷத்துக்கு முன் முதற் பதிப்பும், 20 வருஷத்துக்கு முன் இரண்டாம் பதிப்பும் வெளியாயிற்று. அது முதல் இதுவரை வேறு பதிப்பின்மையால் புராணத்தைப் படிக்க வேண்டுமென்று ஆர்வங்கொண்ட பல தமிழபிமானிகள் இப் புராணத்தை அச்சியற்ற வேண்டுமென்ற தூண்டுதலாலும், சென்னை, இந்து மத பரிபாலன போர்டார் ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் ஸ்தல புராணங்களைச் சேகரிப்பதிலும், அவற்றை அச்சிட்டு வெளியிடுவதிலும் எடுக்கும் பிரயாசைக்குப் பலனாயும், திருநெல்வேலி ஜில்லா

தேவஸ்தான கமிட்டியார் அவர்கள் கருணையோடு ஸ்தலபுராணம் வெளியிட நாங்கள் கொண்ட அபிப்பிராயத்துக்கு அன்புடன் இசைந்து அனுமதி கொடுத்ததாலும் நாங்கள் இம்மூன்றும் பதிப்பை வெளியிடலானோம்

இப்புண்ணிய க்ஷேத்திரத்தை வந்து தெரிசிப்பவர்கள் மனதைக் கவரத்தக்க அனேக கண்காட்சிகள் அமையப்பெற்றிருப்பதால் அவற்றின் படங்களை (தேனருவி, செண்பகாடவி அருவி, வடவருவி, திருக்குறும்பலா, திருத்தரணி பீடம் முதலியன) இப்பதிப்பில் விசேஷமாகச் சேர்த்திருக்கிறோம்.

தமிழபிமானிகள் நாங்கள் பிரசுரித்துள்ள புத்தகங்களை ஏற்றுக் கொண்டு விரைவில் நான்காவது பதிப்பு வெளியிடுமாறு எங்களுக்கு ஊக்கம் காட்டவும், எல்லாம் வல்ல இறைவன் எங்கள் எண்ணத்தைப் பூர்த்தி செய்யுமாறும் வேண்டுகிறோம்.

V. S. ஷண்முகநாத முதலியார்,
தர்மகர்த்தா.

3—6—'38.

## இந்தலத்தின் பெயர்கள்.

பிதுர்கண்டந்தீர்த்தபுரம் முதல் குறும் பலா விசேடபுரம் என்ப திறுதியாக 21 பெயர்களுண்டு. இவற்றைத் திருக்குற்றாலத் தல மகிமைச் சருககம் 30-31-ஆம் கவிகளிற காண்க.

## தீர்த்தங்கள்.

சிவமதுகங்கை, செண்பகத்தடாகம, பொங்குமாசடல், வடவருவி, சித்திராநதி என ஐந்தாகும. வடவருவியிமேல நீராடினவர் கண்ணுக்கு அவ்வருவியிமேல இந்திரதநுசு தோனறுமெனவும், நீராடுவோர் பாவங் களெலலாம் கழுநீராகி யோடுமெனவும் கூறுவதை இற்றைக்கும் பிரத்தியட்சமாகக் காணலாம்.

## விருக்ஷம்.

பலாவிருக்ஷம்: இது குறும்பலா எனப் பெயர்பெறும். இதனை நான்கு வேத சொரூபமென்பார். இதற்கே ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமி களருளிய தேவாரப் பதிகமொன்றிருத்தலால் இது மகா விசேட முடைத்தாதல் பெறப்படும்.

## சித்திரசபை.

சித்திரசபையாகிய தெய்வசபை: இஃது ஆலயத்துக்கு வடபக்க முள்ளது; இச்சபையில் சிவபிரான் றிருநடனத்தில் உமாதேவியார் தாளம் அடித்துக் களிகூர்ந்தனர். நடன காலத்தில் அந்தர துந்துபி வாத்தியம் முழங்கும். இவ்விரண்டும் மிகுந்த ஆச்சரியமே

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நூலாசிரியர் வரலாறு.



இந்நூலாசிரியராகிய திரிகூடராஜப்பக் கவிராஜ மூர்த்திகள் பாண்டிவள நாட்டிலே சித்திராநதி யருகிலே தென்காசிக்கும், திருக் குற்றாலத்துக்கும் இடையிலுள்ள மேலகரம் என்னும் புண்ணிய நகரத் திலே விருந்து புறந்தந்து அருந்தவர்ப்பேணிச் சிவநேயச் செல்வத்திற் சிறந்துவிளங்கும் சைவவேளாளர் திருமரபிலே இற்றைக்கு இருநூற்று இருபது வருடங்கட்கு முன்னர் அவதரித்தருளினர். தமிழிலக்கிய இலக்கண சாத்திர முதலிய பல நூல்களையும் ஐயந்திரிபறவுணர்ந்து, சொன்னயம், பொருணயம், அணிநயம் முதலிய எந்நயத்தானுஞ் சிறப் பமைந்து படிக்கப்படிக்க இனிக்கத்தக்கசெய்யுளியற்றுந் திறமைபெற்று வாழ்ந்தனர். திருக்குற்றாலநாத சுவாமிமீது பற்பல அற்புதப் பிரபந் தங்களியற்றினர். அக்காலத்துத் தென்னாட்டை ஆண்டுவந்த முத்து விஜயரெங்க சொக்கநாத நாயக்கரவர்கள் இக்கவிராஜமூர்த்திகளியற்றும் செய்யுட் சுவைப்பெருக்கையுண்டு களித்துப் பற்பல மரியாதைகள் செய்து போற்றுவாராகி, திருக்குற்றாலக் குறவஞ்சி யென்ற நூலை அரங்கேற்றுவித்துப் பற்பல சிறப்புச்செய்து, முற்றூட்டாக நன்செய் நிலங் கொடுத்துள்ள விஷயம் இதனடியில் வரும் தாமிர சாஸனத்து வாக்கியங்களால் நன்கு தெளியத்தகும். இந்நன்செய் நிலங்கள் அக்கால முதல இக்காலம்வரை குறவஞ்சிமேடு என்னும் பெயருடன் இந்நூலா சிரியர் சந்ததியார்கள் ஆட்சியிலிருந்துவருகின்றது. இவர்கள் சந்ததி யார்கள் இற்றைக்கும் திருக்குற்றாலநாதசுவாமி கோயில் வித்வான் களாக ஆலயத்தும், ஏனையிடங்களிலும் முதல் மரியாதை பெற்று வாழ்கின்றார்கள்.

## குறவஞ்சிமேட்டுத் தாமிர சாஸனம்.

"சாலிவாகன சகாப்தம் 1640-க்குச் செல்லாநின்ற கொல்லம் 891-ம்ஞு தைமீ 11உ ராஜமானிய ராஜஸ்ரீ முத்துவிஜயரெங்க சொக்கநாத நாயக்கரவர்களோம் திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜ

ருக்கு பொறுப்புப் பட்டயம் எழுதிக்கொடுத்தபடி சுவாமி திருக் குத்தாலநாத சுவாமிபேரில் குறவஞ்சி நாடகம பாடி அரங்கேகதினை தறகு மேலச் செண்பககாவில் கருப்புகட்டி ஊத்துமேட்டில் கல் உ-ல் சஙகிலி அளவு ஹீ நுவ-யும், நிஉ-யும் விடடுக்கொடுத்தபடியினலே பொறுப்பு ஸு கக்கு தீர்வை வீதம் குடுத்து கையாடிக்கொண்டு சன்னதி பிரபநத விததுவாஞக நடந்துவருவாராகவும். இந்த நிலத் துக்கு வேறே வரி நாடடுச்சிலவு காவல்கூலி போர்நெல் கொடுக்கத் தேவையில்லை யென்று கட்டளையிட்டபடியினலே இந்தப்படிக்குக் கையாடிக்கொளளவும்"

(கையொப்பம் தெலுங்கில்) ஸ்ரீராமசெயம்

இவ்வாறெழுதி அக்காலதது முத்திரையும் போடப்பட்டிருக்கி றது. இந்தப்பட்டயததின் காலத்தைக்கொணடு ஊகிக்குமிடத்து இந் நூலாசிரியர் காலம இற்றைக்கு 220 வருடஙகட்கு மேலிருக்கலாமென பது தெளிவாம். இதிற்கண்ட குறவஞ்சி நாடகமே மற்றையோரியற றிய குறவஞ்சித் தமிழிறகெல்லாம் தலைமைப்பாடுற்றுப் படிப்பவர் மனத்தைத் தன் வசப்படுத்ததக்க நவரசங்களும் நிரம்பக் கொண் டுள்ளதாதல தமிழ்நாட்டு வாழ்வார் பலருமறிவர்.

இந்நூலாசிரியரியற்றிய பிரபந்தங்கள்.

1. குற்றாலக்குறவஞ்சி
2. குறறாலத்தலபுராணம்
3. ஷை மாலை
4. ஷை சிலேடைவெண்பா
5. ஷை யமகவந்தாதி
6. ஷை உலா
7. ஷை ஊடல்
8. ஷை பரம்பொருள்மாலை
9. ஷை கோவை [மாலை
10. குழல்வாய் மொழிகலிப்பா
11. ஷை கோமளமாலை
12. ஷை வெண்பாவந்தாதி
13. ஷை பிள்ளைத்தமிழ்
14. நன்னகர் வெண்பா

என்னும் பதினுன்கு பிரபந்தங்களென்று இப்போது வெளியாகின் றன. இவர்களியற்றிய நூல்களெல்லாம் கற்றுரும் மற்றுரும் புகழ்ந்து மகிழ்ந்து போற்றத்தக்கனவாதல் இபபுராணத்தைப் படிப்பவர் யாவ ரும் உணர்தல் கூடுமாதலின் இவண் விரித்தல் மிகையென்று விடுக்கப் பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குற்றாலத் தேவாரம்.



## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வம்பார்குன் றநீடுயர் சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள். (க)

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்
கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள். (உ)

செல்வமல்குசெண்பகம்வேங்கைசென்றேறிக்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றாலம்
வில்லினொல்கமும்மதிலெய்துவினைபோக
நல்குநம்பானன்னகர்போலுநமரங்காள். (௩)

பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றால
மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்து
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். (௪)

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். (௫)

மைம்மா நீலக்கண்ணியர் சாரன் மணிவாரிக
கொய்ம்மாவேன லுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மாவேழத் திருரிபோர்த்தகடவுளெம்
பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள் (௬)

நீலநெய்தறண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையொடாடுங்குற்றாலங்
காலனைறன்னைககாலாறகாய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள் (௭)

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றால
மூதூரிலங்கைமுட்டியகோனைமுறைசெய்த
நாதன்மேயநன்னகர்போலுநமராங்காள். (௮)

அரவின்வாயின்முள்ளெயிறேயப்பவரும்பீனறு
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றாலம்
பிரமனோடுமாலறியாதபெருமையெம்
பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள் (௯)

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தம்மேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தண்மேயநன்னகர்போலுமடியீர்காள். (௰)

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநறறமிழ்ஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



# திருக்குறும்பலாத் தேவாரம்.



பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ
ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. (௧)

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
பாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கிண்டுகிளைகிளையன்மந்திபாய்ந்துண்டுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே. (௨)

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
யாடலரவசைத்தம்மானிடம்போலுமந்தண்சாரற்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசும்பொனுந்திக்
கோடன்மணங்கமழுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே (௩)

பால்வெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீலமலர்க்குவளைகண்டிறக்கவண்டாற்றுநெடுந்தண்சாரற்
கோலமடமஞ்ஞைபேடையோடாட்டயருங்குறும்பலாவே. (௪)

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலுமுதுவேய்சூழ்ந்த
மலைவாயசும்புபசும்பொன்கொழித்திழியுமல்குசாரற்
குலைவாழைத்தீங்கனியுமாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே. (௫)

நீற்றேறுதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பி
லேற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலாவே. (௬)

பொன்றொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம்பெம்மானிடம்போலும்பிலயந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக
குன்றத்தருவியயலேபுனறதும்புங்குறும்பலாவே. (எ)

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரறசாரற்
பூந்தணறுவேங்கைக்கொத்திறுத்துமத்தகத்திற்பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. (அ)

அரவினணையானுநான்முகனுங்காண்பரியவண்ணல்சென்னி
விரவிமதியணிந்தவிகிர்தர்க்கிடம்போலும்விரிபூஞ்சாரன்
மரவமிருகரையுமல்லிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. (கூ)

மூடியசீவரத்தர்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைககாய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியபபாய்கடுவனீள்கழைமேனிருந்தஞ்செய்யக்
கூடியவேடுவர்கள்குய்விளியாக்கைமறிக்குங்குறுமபலாவே. (க0)

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ண
லம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாவதீவினைகள்போயகலுநல்வினைகடளாராவன்றே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குற்றாலத் திருப்பதிகம் - உ.

---

சுவாமி - குறும்பலாநாதர். தேவி - குழல்வாய்மொழியம்மை.



# சருக்க அகராதி.

பக்கம்.

# அரும்பதவுரையைப்பற்றிய விஞ்ஞாபனம்.

---

மதுரைத் தமிழ்ச் சங்கம் நூற்பரிசோதகர், ஸ்ரீமான் மு. ரா அருணாசலக் கவிராயரவர்கள் எழுதிய இந்நூலின் அரும்பதவுரையுள் சாமானிய பதங்கட்கும் உரை வரைந்ததெற்றுக்கெனின், தமிழ் கற்பார் சுருங்கிய இக்காலத்து சிற்றறிஞர் பலர்க்கும் அப்பதங்கள் அரும்பதங்களாகக் காணப்படுதலின், அவர் பொருட்டு வரையப்பெற்றது. ஆகலான் நுண்ணறிவாளர்கள் இவ்வுரையில் மாறுபாடாகக் காணப்பட்டவுரைகளுளவேல் அவற்றை எடுத்துக்காட்டி வேறுரைகள் கூறுவார்களாயின் நன்றியறிதலோடேற்று நான்காம் பதிப்பில் வெளிப்படுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

பதிப்பாளர்.



உ

கணபதி துணை

சிவமயம்

# திருக்குற்றாலத் தலபுராணம்.



## முதலாவது தானவைபவ காண்டம்.

### காப்பு.

புயல்காட்டும் பனிவரையின் பிடிதழுவுஞ் சிவவேழம் பொருப்பில் வானி, லியல்காட்டு மிருபிடிசேர் முந்நாலு துதிக்கையன்முன் னீன்ற ஞானச், செயல்காட்டு மொருகோட்டி னிருகோட்டு வெண்பிறைவாழ் செக்கர் வானை, மயல்காட்டுந் திருமேனி மழைமதச்செண் பகக்களிற்றை மனத்துள் வைப்பாம்.

## கடவுள் வணக்கம்.

### திருக்குறும்பலாவீசர்.

பூமேவு சதுர்முகத்துப் புத்தேளு மவனையுந்தி பூத்த தேவுந், தேமேவு நிலமேவி வான்மேவித் தினந்தேடத் திரிகூடத்துக், கோமேவு பழம்பொருளைக் குற்றாலப் பரஞ்சுடரைக் குறும்ப லாவின், மாமேவு மறைக்கொழுந்தைப் பிறைக்கொழுந்தை வளைந்தானை வணக்கஞ் செய்வாம். (க)

### குழல்வாய்மொழியம்மை.

இமையவரைக் குலக்கொழுந்து கயிலைவரை மேருவரைக் கிறைவி வேதச், சிமையவரைத் திரிகூடச் சிவக்கொழுந்து மணக்குமொரு செழும்பூங் கொம்பு, கமையவரைப் புரக்கவருட் கடல்சுரந்து மடைதிறந்த கண்ணா ளென்னுஞ், சமையவரைத் தலைவிகுழல் வாய்மொழியம் பிகைதிருத்தா டலைமேற் கொள்வாம். (உ)

### சித்திரசபை நடராஜர்.

வானாகி வளியாகிக் கனலாகிப் புனலாகி வளர்பா ராகி
யூனாகி யுயிராகி யொன்றாகிப் பலவாகி யுலகம் யாவுங்

தானாகிப் புறமாகி யகமாகி யறம்வளர்த்தா டான மேந்தக் [ற்றி
கோனாகி நடம்புரியுஞ் சித்திரப்பொற பொதுவுடையான் கோலம்போ

சேண்பகப் பூங்கோதையம்மை

அம்பரத்தி னிடைத்தோன்று மாருதம்போ லம்பரத்தி லருளாய்த் தோன்றி, யம்பரத்தி னம்பரனா ளொருதனுப்போ லிருதனுவுமமைந்தொன் றாகி, யம்பரத்தின் விசிகரம்போ லத்துவித மாகியண்டமனைத்து மீன்று, ளம்பரத்தி னமர்கடந்த வருள்விழிச்செண் பகக்கோதை யடிசார்ந் துய்வாம். (௪)

திரிகூடநாதா

பொன்பூத்த நறையிதழிப் பூமாலை பொன்னரிய மாலை யாகக், கொன்பூத்த புயங்கவெள்ளிக் கொடிவேய்ந்த சடைப்பவளக் கொடியாம் வீடு, மன்பூத்த மணவறையா மதிவிளக்கா மலர்கண்மகத் தாரை வார்ப்பத், தென்பூத்த நதிமாதைச் சீரவேட்குந் திரிகூடச் சிவன்சீர் வேட்பாம். (௫)

ஞான பராசத்தி

வேறு.

பூதபல பேதவுயிர் தேககர ணாதிமுறை போகபுவ னாதிகளெலா, மாதியுமை வாணிதிரு வாயகில லோகநிறை வாகவருள் கூருமொருதாய், நாதர்கயி லாசகிரி வாசர்திரி கூடநட ராசருட னாத வடிவாய், வேதமொழி யோதிவிளை யாடுகுழல் வாய்மொழிமெய்ஞ் ஞானபரை பாத நினைவாம். (௬)

தக்கிணாமூர்த்தி.

வேறு.

ஆலவருக்கந் தனிலுயர்ந்த வடதிருக்கே தென்முகங்கொண் டுறவோராய, நாலவருக்களிருவருக்கு மொருவருக்கு நவினறாரிளநகிலொணாத, நூல்வருக்க மொருவருக்கு நுவலாம லுவன்றானை நுதற்கண்ணானைப், பால்வருக்கைக் கனியையருட் பசுந்தேனைப் பரவமறப் பரவல்செய்வாம். (எ)

விநாயகக் கடவுள்.

கங்கையா ராம்பலைப்பூங் கவுரிநுதற் சிந்தூரத்தைக் காரிலே யாளி, செங்கையார் மாதங்கத் திருமுனியைத் தேவேந்தர் திக்கு வேந்தர்,

பங்கயா சனர்முதலோர் முடிமலர்த்தும பியைவலவை பருவப்பாரக், கொங்கையார் களபத்தைச செண்பகக்குஞ் சரதனைமனக் கூடஞ் சேர்ப்பாம் (அ)

## சண்முகக் கடவுள்.

வேறுமுகந் தொறுந்தோறும் பிறந்துழலுஞ் செனனவிடாய் விடுப்ப மூலச், சேறுமுக மாயைமலங் கழியவிரு வினைப்பழைய தீட்டுந் தீரச், கூறுமுகந் தொறுமகரக் குழைதாவி வள்ளிதெய்வக் கொடிகட் சேல்பா, யாறுமுகம் பெற்றகொற்றத் தானந்தக கடலபரவி யாடல் செய்வாம். (௯)

## சரசுவதி இலக்குமி

எண்கமலக் கரஞ்சலிப்ப வொருகமலத் தயன்பிறப்பி லெழுதா வண்ணந், தண்கமலப் பதஞ்சிறமேல் வைத்தருள்வார் குற்றுலைத் தமிழ்நூல் வாய்ப்பக், கண்களொறுங் கருங்கமலங் கரங்களொறும் பசுங் கமலங் கவினப்பூத்து, வெண்கமலத் திருந்தாளைச் செங்கமலத் திருந் தாளை வேண்டல் செய்வாம் (௰)

## திருநந்தி தேவர்

நேத்திரங்க ளொருமூன்றும் புயநான்கும் விழிமணியு நிரை நூன் மார்புஞ், சாதகுபுலித தோலுடையும் வெண்ணீறும் விரி சடையுஞ் சடைமேற் பாம்புங், காத்திரள்கைம் மான்மழுவுங் கண்ணு தலா மெனத்தோற்றிக் களங்கார் மாற்றி, வேதநிரத்திண் படை தரித்த விடைமுகதெய்ம் பெருமானை வேண்டல் செய்வாம். (௧௧)

## சண்டேசுரர்.

தான்பிறந்த தந்தையையு மினிப்பிறக்கு நிந்தையையுந் தடிந்து சேயென், றுனபிறங்கு மழுவிடைமே லொருவரமைழத் திடவிருவ ரயிர்ப்ப வேகிக், காண்பொலிதா ரரிபிரமா தியர்கருமெய்தா விருக்கை யெய்திக் கடவுட் சேடம், வான்புலவர் பெறுபபேறு பெறறவனை நற்றவனை வழுத்தல் செய்வாம். (௧௨)

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

மதுரேசர் திருநாட்டு வந்தசமண கழுவேற மாமுச்சைவஞ்
சதுரேற மனுநீதி தழைத்தேறத் திருவேடு தமிழ்சேர் வைகை

யெதிரேறத தொண்டர்குழா மீடேறப் பரசமய விருள்வீட வோடக்
கதிரேறு மணிச்சிவிகை யேறினை சரணமந்தக கரணருசேர்ப்பாம்()

## திருநாவுக்கரசு சுவாமிகள

திருநீறறை மெய்யழுத்தி யஞ்செழுத்தை நெஞ்சழுத்திச
சிலைக்கை மாற, னுருநீறறும் பெருமானை யுறவழுத்திச் சமணரென
மொன்னூர் மூட்டும, பொருநீறறுக குடவறையுங் கடகரியும் விடவரா
வும் புறங்கண் டாழிக, கருநீத்தங் கடப்பவொரு கறகுணி யுகைத்
தானைக் கருத்துள் வைப்பாம. (௧௪)

## சுந்தரமூர்த்தி சுவாமிகள.

புவியாசைக் களைகளிந்து தலைவரா வணக்கூடம் புகுந்து
பொறபூண், டவிராத கொம்பிரணடு மேவியொரு வலலிதொடர்
தளையை நீவிக, குவியாரம் புனைபரவை கொங்கையா னையினைபொருட
டுக், குழைதோய் சங்கச், செவியானைத் தூதுவிட்ட களியானை
தனைத்தினமுஞ் சிந்தைசெய்வாம. (௧௫)

## மாணிக்கவாசக சுவாமிகள்.

சொன்னவனைத் துளகலையும் பயிலாமாத தியர்குலத்துத் தோன்
றியாங்கோர், தென்னவனை யரசுரிமைத் திறலசெய்யுமந் திரியாக்கித்
தென்னர்க்கெல்லா, முன்னவனைப் பின்னுசடை முடியின்மேற் பொன்
னின்முடி சூட்டி யாண்ட, மன்னவனை மதுரையிலே குதிரைவிற்கச
சொன்னவனை வணக்கஞ் செய்வாம் (௧௬)

## அகத்திய மாமுனிவர்.

கிளையேந்து மணிநிலவு விரிகூடத் திரிகூடக் கிரிக்கே யாயும்,
விளையேந்து புனறகரகங் தண்டேந்திப் படைத்தபிரான் விதித்துநேமி,
வளையேந்துங் கரத்துமழு மானேந்திப் பரந்துளவை மவுலிக்காடு, முளை
யேந்து மதியேநதத துதியேந்துந் தமிழ்முனிதாண் முடிமேற் கொள்
வாம். (௧௭)

## அறுபத்துமூவர் முதலிய நாயன்மார்.

தில்லைவா ழந்தணர்பொய் யடிமையிலாப் புலவர்சிவ பத்த ராதி
வலலவரெம் பெருமான்க ளெழுவரடி பரவியயன் மாலுங் காணு

நல்லசீர் மலர்ப்பாதங் கண்டதிருத் தொண்டரெனு நாயன்மார்க
ளெல்லைதீர் பெரும்புகழா ரறுபத்து மூவர்பத மிறைஞ்சல் செய்வாம்.

## திருக்கோயிற் பணிவிடைக்காரர்.

காவார்ந்த திரிகூடத் தானுவுக்கும் வேணுமொழிக் கவுரியாளுக்குந், தேவாரப் பணிபுரிவா ருழவாரப்பணிபுரிவார் சேவை செய்வார், பூவாசத் தொடைதொடுப்பார் புகழ்வாசத் தொடை தொடுப்பார் பூசை செய்வா, ராவாகனை முதலாய வடியார்கட் கடியார்கட் கடிமை செய்வாம். (௧௯)

## திரிகூடச் சிவநாம கீர்த்தனர்.

நடந்தாலு மிருந்தாலு நின்றாலும் வளர்ந்தாலு நவிற்றாலுங், கிடந்தாலு மயின்றாலும் பயின்றாலுந் துயின்றாலுங் கிரிகடாவிப், படர்ந்தாலும் விழுந்தாலு மெழுந்தாலுந் திரிகூடப் பரம னாமந், திடந்தாலு வுறவழுத்துந் தொண்டரடிப் பாதுகைகள் சென்னிசேர்ப் பாம. (௨0)

## வாழ்த்து.

சீதமழை முகில் பொழிக தேசமெலாம் பயிர்விளைக செல்வமோங்க, மாதர்குழா மக்கள்குழா மனையறங்க ளுடன்பொலிந்து மலிந்து வாழ்க, மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி தழைத்தோங்க மேலுமேலும், பூதலமேற் சிவபெருமா னாலயங்கள் பூசனைகள் பொலிக மாதோ. (௨௧)

கடவுள் வணக்கம் முற்றிற்று.

---

# முதனூல் வழி.

காரணமுங் காரியமுங் கற்பனையுங் கடந்துதனிப்
பூரணமாய் நின்றபிரான் புவனமெலாம் படைத்தருளி
யாரணமு மாகமமு மருங்கலையும் விரித்தருளி
நாரணற்கு நான்முகற்கு நவிலுவன நவின்றருளி. (௧)

செப்பரிய கயிலையின்மேற் றிருநந்தி தேவனுக்கு
வைப்பரிய பொருளைவிரித் துபதேசம் வைத்தருள
வொப்பரிய சனற்குமாரற் குண்மையா வவனுரைப்ப
மெய்ப்பொருளை யுணர்ந்தவனும் வியாதமா முனிக்குணர்த்த. (௨)

சூதனுக்கு வியாதமுனி சொன்ன தொகை மூவாறின்
மாதவறக்குக காருடநா ரதமவிண்டு பாகவத
மாதவனுக்குயர்பிரம கைவர்த்த மழுலோறகு
மேதகுசீ ராகனேயம் விதிக்குயாபற் பம்பிரமம். (௩)

இசைபெறு நாலவருக்கு மிருநான்கு வகைபோக
மசசம்வா மனங்கூர்மம் வராகமாற கண்டேய
மெசசுபவி டியங்காந்தம் வியனிலிங்கம பிரமாண்ட
மச்சைவ மெனசசிவபு ராணங்க ளாயிரண்டில். (௪)

காந்தமெனு மகவீடத்திற் கடலேழி னுவர்கழித்துச
சார்ந்தகட லாறனைய சனற்குமா ரனுசூதங்
கூர்ந்தசிவ மாலபிரமன் குமரமெனப் பெயர்குலவு
மார்ந்தபெருஞ் சங்கிதைக ளாறுக்கு மாங்கவையில். (௫)

கிளர்ந்தபெருஞ் சங்கரசங் கிதையென்னும் பாற்கடலும்
வளம்பெருகுஞ் சனற்குமர சங்கிதையா மதுக்கடலு
முளந்தனிலொன் றுப்பெருக்கி யுயர்மதிமந் தரமாகக்
குளந்தருகட புனிதர்திரி கூடமான மியவமிர்தம். (௬)

முனிசூதன் கடைந்தெடுத்து முதுநாவாந் தருவிகொடு
நனிமேவு மாதவத்து நைமிசா ரணியத்தோ
ரினிதாகச் செவிவாயா லிசைத்தருந்தப் பரிமாறிப்
புனிதமாக் கதிநிறைக்கும் புண்ணியமாக் கதையிதனை. (௭)

## நூல் செய்தற்குக் காரணம்.

வடமொழியைத் தென்மொழியா வகுத்துரை யுணர்த்துகெனத்
திடமொழியா லத்தலத்துச் சிவமறையோர் பணித்தருள
வுடனுறைவை திகமறையோ ருறுபொருளை விரித்துணர்த்தக்
குடமுனிபோற் றியபெருமான் றிருவருளாற் குறிக்கொண்டு. (௮)

## நூல் செய்த விதம்.

சித்திரநதி நாடுநகர் புராணமூலஞ் சிகரிதல மருவிமது கங்கை மூர்த்தி, சத்திருறும் பலவுமந்தா நிலத்தின் பான்மை தக்கன்மக மகமழிதல் வானோர்பாவம், புத்தேளிர் பவந்தீர்தல் சம்புவேடன் புரி

யும்வலங் கடகளிறு புரியுமபூசை, வைததபெருஞ் சஙகாசங் கிதை சோதான வைபவகாண டஞசருககம பதினெட்டாக. (கூ)

தேவிதிரு வவதாரம் பரமனவேட்டல செங்கண்மால சிவனுதல் பூசைபபானமை, பாவிவன சரன்பேறு வாணோர்கும்பன பணிவிடை வா சுகிதவஞசிற பரமனுட, ருவிலபொருட் கண்டகசே தனன்கவுற சன் சமையமிகழ புட்பகந்தன றருமசாமி, மேவுகதி யூாறடயனற சனறகுமாரம விளங்குசிவ ரகசியததினை விரிவீரேழா. (கo)

ஒருமைபெறு சிவநெறியே வடிவமாக வுமையகாண் டமுங்கரு ணைப் பார்வையாக, வருமைதெரி தருசருகக முறைமை யெலலா மவயவஙக ளாகமதி யணிந்த பெம்மான், கருதுகீர்த தனங்களணி கலன்களாகக கற்பவர்கேட் பவர்கிருமைக கதியுமவீடு்நந், திருவருள் செய் குற்றாலச் சிவபுராணச் செலவிகலவி யுருமகிமை தெரிககின் றேனால. (கக)

## அவையடக்கம்.

தோடடகத் தளிகள் பாயுந் துணர்த்தபூங் கடுக்கை வேய்ந்தா
ரேட்டகத் தெழுதா வேத மேத்தரும் வரமபில சீர்த்தி
நாட்டகத தறிஞர் முன்னர் நாவெடுத் தியம்பும் பான்மை
கோடடகக கமல நாப்பண் கொட்டிபூத தலர்வ தாமால். (கஉ)

புகழதரு மறைக்கு மேலோன் புடார்சுன புரத்தின் சீர்மை
நிகழ்தா நிகழ்தத வல்லே நீகொலென றெனது நெஞ்சே
யிகழ்தர வெழுந்த நாணு மிச்சையுந் தினம்போ ராடி
யகழ்தர நாணந் தோற்ற தாசையே வென்ற தம்மா. (கங)

தேககிய கடுவை மூக்கிட் டேவனுக கமுதமாக்கும்
பாக்கியச் செல்வி ஞானப் பாவைசெண் பகப்பூங் கோதை
யாககிய கருணை போற்றி யமலனைப் பரவ லாலென்
வாககினில் வழுச்சொ லெல்லா மங்கலச் சொற்க ளாமால். (கச)

செறிந்திலன் சிந்தை யேனுந் தெளிந்திலன் கல்வி கேள்வி
யறிந்திலன் புகலா நின்றே னதியார் திரிகூ டத்து
மறிந்தவான் கங்கை திங்கள் வனைந்தபூ முடிமேல் வேழ
மெறிந்தநீர் தவிருங் கொண்டா ரென்பது தெளிந்து மாதோ. (கரு)

கவையடி விலங்கின் வல்லூண் கணணப்பன் களிவா யேறி
பவிகனி னமிழ்தின மிககா வமலனுக் காளுற் போலக
குவிதரு நெறியொன் றிலேனை குறைமொழி நிறைசொன் மேலோர்
செவிபுகிற் றிரிகூ டத்தரச செலவனுக கினிய தாமாக. (கரு)

வேலையில வீழ்தத கல்லு மெனகுடம் புகுத்த வென்பு(ந்)
சாலையிற் கொளுவுந் தீயுந் தரங்கநீர் வைகை யாறுந்
சோலையாண் பணையும வேதக் கதவமுந் தொழும்பு கொண்ட
வாலையாந் தமிழ்ப்பூஞ் செல்வி வளர்தமிழ்ப் பாண்டி நாடுன். (கசா)

வேரியஞ் சுரும்பூ டாடா வெயிலபுகாக் காவிற கோடி
சூரியர் திரண்டா லெனனச் சுடர்கள்விட் டெறிப்ப மனறி
லாரிய னுடு சேர்த்தென் னுரிய நாடு சொல்வாம்
வாரிநீ ரருவித் தெய்வ வரநதி முதலா மனனே (கஅ)

ஆகத திரு விருத்தம் ஙகூ.

---

## முதலாவது திருநதிச்சருக்கம்.

தேர்கொண்ட வசந்த வீதிச் சிவபிரான திருவெண் ணீறறி
னேர்கொணட வடியார் சங்க மெனப்பரந் தேகி வேலை
நீர்கொண்டு தன்பால் வெண்பா னிறங்கொண்டு தரங்க மேகக்
கார்கொண்ட கடலின் மேனி கைக்கொண்டு மீண்ட மேகம். (க)

பைந்தரக் குரிவை பூண்ட பரமர்சித் திரப்பூ மன்றி
னந்தரப் பேரி போல வதிர்தர முழங்கி நீண்ட
சுந்தரச் சடைபோன் மின்னிச் சுகந்தர வரைமே லங்கை
மந்திரத தபயங் காட்டி வரதம்போற் பொழிந்த மாரி. (உ)

கிரிமிசை மழைநீர்த் தாரை கிரீசனெம் பெருமான றன்னை
யரியவா னவர்க ளாட்டு மமுததா ரைகளா மன்றிச்
சொரிமதத் தும்பி யாட்டுந் துதிக்கைநீர்த் தாரை போலுஞ்
சரிதரு மின்னுத தோற்றந் தனிரருச் சுனைபோ லாமால். (ங)

துளிதரு துளியா வானந் தூவுநீர் திரிகூ டத்துத்
தெளிபுனற் றிரள்கா லாறாய்த் திசைதொறும் பரந்த தம்மா
வொளிர்விடைப் பெருமா னெம்மை யுடையவ னடியார்க் கீயுங்
குளிர்பொரு ளொன்று நூறு கோடியா யனந்த மாம்போல். (ச)



செண்பகாடவி.

முத்திரச் சிகரம் வானை முயங்கிநாளை டௌிசுரூற கொண்டு
பைந்திரள் சொடிக ளெனனும் பசுநரம பொடி நீடி
யதநிர ளகடு விம்மி யாகமும விளாதது வால
சித்திர கங்கை யெனனுஞ செலவியைப் பயநத தனறே (ரு)

வேறு.

கோடனைத்தும் பலகோடி நதிவருதல பதினெருமுக கோடி தேவுந்
தேடரிய திரிகூடப பரனபணிககு வானிழிந்து சேறல் காட்டு
நீடருவி திசைதோறுங குதிபாய்ந லெண்டிசைக்கு நிருப ராவா
ராடல்பெறு சேனையொடு மண்ணலா விழாககாண வண்ணலாமால் (கூ)

மொய்யலைத்தெண் டிரைக்கடனமேல் வானீட்டி முதுதரைமேற
படிவங் காட்டிச், சையமுடி தொடுததனந்த மணிமுடிகள் கவித்ததலை
யருவி போனள், வையகநதாங் கியசேடன வானகந்தாங் குறநிமிர்ந்த
வகையா மன்றி, வெய்யமருந துடனிகலி யோருவின்மேன் முடிகவித்த
விமையப பாரால். (எ)

போராளி வனத்தெநழி புனலைமை வாமனஞ்சேற் பொலிவு
காட்டி, யாபாம ரபிராம மிசைந்துசங்கி ராமம்விளைத் தாயர்பாடிப்,
போரவி னினந்தொடர்ந்து வாங்குதிரை யெனததாவும் பெருமை
யாலே, போர்பத் தவதாரச் செங்கணெடு மால்போலுந் தெய்வவாரி ()

பொருந்துபெரும் புண்டரிகப்பொகுட்டினிட மருவியரும் புவன
மீன்று, பருந்திகிரித் தண்டுகமண் டலமுகந்து மூலமறை பலவுமோதி,
யருமபெறலுந் தியந்தடத்து வந்துதிசை முகமாகி யன்னமூர்ந்து,
விரும்புபா ரதிமேவிப் பூவியன் போலாகும் விமலதீத்தம். (கூ)

மாமலையின் மிசைப்பிறந்து திரிகூடச் சிவபெருமான் வலப்பான்
மன்னித, தேமருவு மஞ்சனககண் களிகூரத் திருமேனி திளைத்து
மேவித், காமமிடு மணக்கோல முகநதருளி யறம்வளர்க்குந் தகைமை
யாலே, பூமலர்செண் பகவனத்து நமையாளு முமையாளைப் பொருவும்
வாரி. (கo)

பொங்குமா கடலிடத்துத் தெள்ளமுதிற் பிறந்துசெழும் பூமே
லாகிச், சங்கமா நிதியினெடு மணியினெடுந் தருவினெடுந் தகவாய்த்

தோன்றி, யெங்குமே யடுத்தவாகுகு வாழவருளி யாககமதா மியமகை யாமில, செஙகணடா னுரதனுறையும் திருமாளி வருமாறுங் பெயவா வாரி (௧௧)

வெண்கமல மேவியுயர் வெணபடிக மணிகறவெள்ள மேனி வாய்ந்து, தண்குமுத வாய்சிவப்புந் தடங்குவளைக கணகறுபபுந் தழைப்பத தோனறி, வெண்கலைபோ தகடபயினறு மாருக சொல வளர்த்து மலரே டேந்திப், பண்குலவத் தாலமிசை நடித்துநா மகள் பொருவும் பாம நீததம். (௧௨)

வேறு.

ஆணிப்பொன வயிர முத்த மைவனந தோகை யெனவ
மாணிகக நறுங்கே ஞதி வரைத்திர வியங்க ளெல்லாம
பாணிககே திரளா வேந்திப் பணிதலாற குமர வேடருங
காணிகளை குறிஞ்சி மாக்க ளெடுத்தது கடுக்கும் வாரி (௧௩)

குயிற்றிய குரவஞ் சாத்திக குமரிதாள் பணிந்து வேடர்
பயிற்றிய கணைவாள் கொண்டு பறிபொருட் கூறை யாடி
யெயிறறியர் குறும்பு சாய வெழுநதது செழுநதண் கங்கை
தயித்தியர் குறும்பு சாய்க்குஞ் சதமகன சேனை மான. (௧௪)

கொன்றையங் குழல்வாய்க் கொண்டு கோவினந் தொடர வேகிக்
கன்றினுல் விளவெ றிந்து பாலைமுன் கவர்ந்த வாறுமுன்
முன்றில்வாய்க் குரவை யாடி முல்லைமா தரைம யககி
மனறன்மா மருதத் தூடு மாலெனத் தவழநத தாறு. (௧௫)

மையுலாங் குவளைக் காடா யிடையிடை வனசம் பூத்து
மெய்யெலாம் விழியா நோககி வெள்ளைவா ரணந டாத்திச்
செய்யவா யரம்பை மேவிச் செழுநதரு நீழன் மன்னிய
சையமார் சிறைக ளீர்ந்த சதமக னிகர்க்கும் வாரி. (௧௬)

பாதிய ருணககு மீனு மளத்தியர் படுதத வுப்புந்
திரைககடல் கொழித்த முததும் பவளமும திரள்சேர் சங்கு
நரைதிரைக கரத்தால வாரி நானிலப பொருளு மீந்து
நுரைககடற பொருள்கொள் வார்போ னுழைந்தது நுளையர்சேரி (௧௭)

சொலையங் குறிஞ்சித் தேனுங் குடத்தியர் மிடவுப் பாலு
முல்லையார் ததியு நெய்யு முதுபணைக் கரும்பின் சாறுந்
தொலைவுவாக் கேணி நீருந் தொகுத்தெழு நீத்த மெம்மா
னெல்லைமா மதுரை யிட்டு மெழுகடல் பொருவு மாதோ. (கஅ)

நால்வகை மலர்சே ரைம்பா னதியெனும் பருவக் கன்னி
காலவழிக் கலிங்க மார்பகக் கனதனம் பணைப்பப் பாங்கின்
பாலவளைத் திரைக்கை வீசிப் பனமலர்த் தொடைகள் சூடிச்
சேல்விழி களிப்ப வேலைச் செல்வனை மணந்த தன்றே. (க௯)

கம்பமீ னுப்புத் தப்புச் சங்குதண் டரளந் தனபாற்
பைம்பொரு ளனைத்துங் கொண்டார் பான்மைவா னேறி நோக்கி
யிம்பர்மே றூவி யைம்பா லிடந்தபல் பொருளுங் கொண்டு
கம்பமார் கடல்போந் தென்னப் போந்தது கடவு ணீத்தம். (உ0)

கோளரி மிடங்க ராகக் குரைதிரைக் கரகந்தூண்டி
வாளைவா ளாக வீசிக் கமடமாம் பரிசை வாங்கிக்
காளமா நாரை யார்ப்பக் கணவரை விடுத்த சேனை
நீளமார் கடன்மேற் சென்று பொருவது நிகர்க்கு நீத்தம் (உக)

அரிசனந் தகர மாஞ்சி யகிற்றுணி கோட்டஞ் சாந்தந்
திரிபலை சுரிகைகோ டார மயிற்பீலி தேவ தார
மரகதம் பவள நீலம் வயிரநித் திலங்கண் மற்று
நிரைநிரை கூலமேற்றி வணிகரை நிகர்க்கும் வாரி. (உஉ)

வேறு.

திங்கள் சூடிய தேவ னொருவனே
பொங்கு பல்சம யப்பொரு ளாதல்போ
லங்கங் கேபகுத் தாயிர மாமுகக்
கங்கை போன்றது சித்திர கங்கையே. (உ௩)

பள்ளத் தாழ்வொடு மேடுறப் பாய்புன
லுள்ளற் பாரெங்கு மார்த்தது வார்கடல்
வெள்ளத் தாசினன் மேகலை யார்ப்பதாம்
புள்ளினார்ப்பவன் போர்வையி னார்ப்பரோ. (உ௪)

நீடு கோபுர நீண்மதிற கோயில்பூங்
காடு மூருங் கயலவெடி தாவுவ
நாடு பலவளம் பார்க்கு நதிமகள்
கோடி கோடி விழிபெறுங் கொளகையாம (௧௬)

கோலு மைடந்திணை கூடி யொழுகியுங
காலை வாரி கலக்க மறுமையான
மேலு மேலும் விளைபொருள் வாருகை சேர்
சேலுண கணணியர்க் குள்ளந் தெளியுமோ (௧௭)

எங்கு மேவினு மீசனெம் மானரு
ளங்க மாமடி யாரிடத தாதல்போற
சங்க நீர்நதி யைந்திணை தாவினும்
பொங்கு சீர்மரு தம்பொலிந் தோங்குமே. (௧௮)

1·வது திருநதிச் சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் ௧௮.

---

## இரண்டாவது திருநாட்டுச் சருக்கம்.

ஆறுதுறை தோறுநிரை யாயணை வகுப்பார்
சீறுகட லூடணைசெய் சீதர னிகர்ப்பா
ரேறுபுனல் வாவிகுளம் யாவையு நிறைப்பார்
வீறுகடல் வேறுசெய் வியன்சகர ரொப்பார். (௧)

கொம்புகிளை கோடுகுழ றக்குழுமி மள்ள
ரம்புநதி வாவிதட மாரகழி யாகத்
தம்படைசெ யுந்தொழில்கள் வென்றிநிலை சாரப்
பைம்பயி ரரண்புரி படைத்தலைவ ரொத்தார். (௨)

சைவவிசை யம்புரி சயம்புதிரி கூடத்
தெய்வநெறி யிந்திரன் முதற்பரவல் செய்து
கைவரு படைத்தொழி லுடன்களமர் சென்று
ருய்வரு புனற்கழனி யேர்வளமை யொன்றே. (௩)

தேமடை மலர்க்கழனி தேன்வடிய மள்ளர்
பாமடை செறித்தவயல் வாயமடை திறந்து
தாமடை வளைக்குவை சரிததுமரை காவி
யாமடை மிதித்துழு படைக்கணி வகுப்பார். (௪)

உழவர்திர ளார்ப்பொலியு மோங்குபுன லார்ப்பு
முழவுகிணை யார்ப்பொலியு முத்தமிழ்செய் நாடர்
விழவுமண மார்ப்பொலியு மோடபடலி னன்றே
பழையகட லார்பபொலி பயப்படுவ தம்மா. (ரு)

வேறு.

வேலையிற செல்லும் போதும் வேலையுண் டெழீஇய போது
மாலையொப் புடைய சேவு மயிடமுந திரளாய வைகற
காலையிற பகலோ டெலவி கலநதெனத தரைமான் பூண்ட
நீலநித் திலததின் கோவை நிரைவடம் புரையப் பூட்டி. (சு)

கார்நிறக் களமா ரீட்டங் கவின்பெறு படைவாள் சேர்த்தி
யேர்பல நிரைத்து நாளிட் டிசைத்துழு சாலக டோறுங்
கூர்வலம் புரிகூன் முறறிக் கொழிக்கின்ற தாள ராசி
பார்தனை யுழுத பணைடைப் பனறியை நகைத்தன மாறும். (எ)

பாலிகை பாத்தி யாக வுழுதெருப் பரப்பி யெங்குஞ்
சாலிவாழ செனவே மளளர் தண்மூளை தெளிப்ப வாரி
போலெழு குரவை யிட்டம புதுபபுனற கொழுநன் வேட்ட
வேலிசூழ் பழனக் கன்னி விதிமணச் சடங்கு போலும். (அ)

முத்தென முளைத்துப் பொன்னின முகிழ்தம் விளைத்துக் கால்கள்
வித்துரு மம்போ னீட்டி மரகதம் விரித்து நீல
மொய்த்தசிர் நாறு நாறு முறைகண்டு சேறு நாறச்
செய்ததலை யுழுது சீர்ப்பத் தெளிசெய்து தெய்வம் போற்றி. (கூ)

அரித்தலும் பெயர்த்து வெவ்வே றமைத்தலு மமைதத நாறு
பரித்தலுங் கழனி தோறும் பதித்தலும் புரியுமள்ளர்
பிரித்தலும் பிரித்தார் தம்மைப் பேணலும் பேணிப் பின்னர்ப்
பொருத்தலுஞ் செயும மைச்சர் போல்வர்மன் பொருவும் பண்ணை()

குவவுநீ றணிந்த தென்னன் கூனென நிமிர்ந்து மாணி
தவமென வளர்ந்து மூவர் தமிழெனத் தழைத்து மன்னோர்
பவமெனக் கருவாய் நல்லோர் பலமென வீன்றி யாவுஞ்
சிவமெனத் தெளிந்தோர் முத்தித் திருவென விளைந்த செந்நெல். (கக)

நறபொதி கருவாம்போது நாடகக் கணிகை மாரின்
முற்பட மறைந்து தோன்றி முகமெடுத் தாடிப் பின்னர்
விறபொலி புருவங் கோட்டி விளைந்துநெட் டிலைமுகங் காட்டின்
கற்புடை மடவார் நாணங் காட்டுவ கதிர்ச்செஞ் சாலி (கஉ)

சீதர னயனு மாணர் சிவதிரி கூடம் போற்றிக்
காதல்சேர் களமர் நன்னுட் கதிர்செய்து களித்தாண் டாடல்
பூதர மெறிந்த செவ்வேள் புரந்தரன் மகளை வேட்டு
மாதர்மா மணத்துத் தெய்வ மகளிருண் டாட்டு மானும் (கங)

கூறுகள் பகுத்துச் சாலி கொய்யுநாட் செய்பிற சேல்க
ளேறுநீர்க் கேணி தாவு முடனிருந் துணங்குங் காவி
பேறுகண் டுவப்பர் வாழ்வு பிரியுநாட் பிரிவர் சீரோர்
வீறுநாட் கூடி வாழ்ந்து மெலியுநாண் மெலிவர் மேலோர். (கச)

வேறு.

வாள்வகுத்த படையிரும்பு போசாயக் கிளைத்துழுது வளர்க்குஞ் சாலி, யாள்வகுத்த கூனிரும்பு தாள்பணிதல் போலடியூ டிரிந்த வாறுறுற், கேள்படைத்த மனத்துயோர் பகைமையா ராட்டுகினுங் கேண்மை நீங்கார், தாள்பிடித்து முடிவணங்கித் தனதுபா ராட்டு கினுந் தடிவார் தெவ்வர். (கரு)

வீறுகொண்ட கதிர்த்தொகைகள் வரைத்தொகைபோற் களத்தி னிடை வேய்ந்து மேதி, யேறுகொண்டு போர்சரித்துச் சிறைபோலும் வைகளையிற் றிரண்போலீர்த்துங், கூறுகுன்ற மெனப்பொலிசுள் கயமு கனைத் தொழுதளந்து குவிக்குந் தோறு, மாறுகுன்று சிறையரிந்த மன்னனெதிர்ப் பாசறைபோல் வயங்குமாதோ. (கசு)

முறைவகுத்த பொற்பொருப்போ பதுமரா கக்கிரியோ முத்தார் வெற்போ, துறைகொழித்த செழும்பவளக் குன்றமோ நீலவரைத்

தொகையேயோ வென்ன, நிறைகளத்து நெற்பொலிகள் வகையுரைத்த லரிதுதொகை நிகழ்த்துங் காலை, யுரையிடற்கு மாற்றுவாந் திகிரிவரை முதலாய வோங்கல் யாவும். (கஎ)

பெறுசண்டி களிற்றாக களமாமுத லோர்க்குதவிப் பெருமை வேந் தற், காறிலொன்று கடமைகொடுத் தைந்திலொன்று தேவரா லயங் கட் கீந்து, கூறுகொண்டு நெல்லொருபாற் கொழித்தமணி முத்தொரு பாற் குவைகள் செய்வார், வீறுகொண்ட திருமகளு மருமகளு மரசி ருக்குமிடம் விபுலம் போல. (கஅ)

திருவிருந்த வீடுகடை திறந்ததெனக் கொட்டார நிறைந்துதிங்க, ளொருவிருந்த சடைப்பெருமா னடியவர்நா வலர்மறையோர்க் குதவி மேனமேல், வருவிருந்து வழிபார்த்துச் செலவிருந்து முறையோம்பி வரையா தியார்க்குந், தருவிருந்த தெனவளித்துத் தங்கள்கிளை தழைப்ப வளந் தழைப்பர் யாரும். (கக)

வேறு.

சூல்குதிக்கும் வலம்புரிகள் புழங்குதொறுந் துறைதாவிக்
கால்குதிக்கும் கருமேதி மடைதிறக்குங் கடல்வாவிப்
பால்குதிக்குஞ் சிலைமதவேள் படங்குதிக்கும் படிகோடிச்
சேல்குதிக்கு மலர்ச்சோலை தேன்குதிக்கு நான்குதிக்கும். (உ0)

வரம்புவயற் செந்நெலுக்கு வாழ்வேலி வான்கரும்பு
கரும்பினுக்கு நறுங்கதலி கதலிகட்குக் கமுகவனம்
பெருங்கமுகுக் குயர்தாழை யணிவேலி யதன்புறத்துக்
குரம்பையுடை நீர்க்கரும்புங் கொங்குவளை செங்குவளை. (உக)

தாவிவனத் திடைப்பசும்பூந் தாதாடி வருவதனைக்
காவிமலர் கண்காட்டக் கடிக்குமுதம் வாய்விள்ளப்
பூவனசங் கதவடைப்பப் பேட்டளிக்குப் புன்மாலை
வாவியிடைத் துனிதீர்ப்பான வண்டிசைக்கு மெண்டிசைக்கும் (உஉ)

வானூறு தலைமடுக்கு மாளிகையுஞ் சூளிகையுங்
கானூறு குன்றம்போற் கார்மறுகுந் தேர்மறுகு
பானூறு கரும்பிசைக்கும் பணைநாறு கரும்பிசைக்குந்
தேனூறு கரும்பிசைக்குந் தேங்காவிப் பூங்காவி. (உங)

காமாரி திரிகூட வரைச்சாரற் கடுங்குளிரா
ஞமாரியி ருக்கவென நடுங்கோடுங் கொடுங்கோடை
தேமாரி புயல்பொழியுந் திங்கடொறு மும்மாரி
பூமாரி தருமருவிப் பொனமாரி தருமருவி. (௨௪)

முருந்தநகை யார்கூந்தன முகிற்புகையு மகிற்புகையும்
விருந்துபுறந் தருவாரகள் விரும்புகையில வரும்புகையுங்
கரும்புபா லடும்புகையுங் கடும்புரவி மகப்புகையும்
வரம்பிலாத் திசைதோறு மயிலாட மயிலாடும் (௨௫)

தேன்குளிக்குந் தேன்வாவி நிரைகுளிக்குந் தூவியனங்
கான்குளிக்கும் பசுந்தென்றல் கரைகுளிக்கு மெறிதரங்க
மீன்குளிக்கும் புனலயாறு மிசைகுளிக்குங் கருமேதி
வான்குளிக்கும் விரிபாளை மடல்குளிக்கும் வரிவாளை. (௨௬)

வண்டாடு மலர்க்கூந்தல் வாராடுங் களபமுலை
கண்டாடு மாதரிதழ்க் கனியாடு மதுரமொழி
விண்டாடுங் கிளிப்பிள்ளை வியந்தாடு மடப்பூவை
கொண்டாடுங் குயிற்பேடை கூத்தாடும் பசுந்தோகை. (௨௭)

வள்ளைப்பா டலின்மடவார் வளரிசையை மலர்க்குழன்மேற்
கள்ளைப்பா னஞ்செயல்போற் கறங்குமளி யளியிசையைப்
பிள்ளைக்கோ கிலம்பயிலுங் குயிலிசையைப் பெருஞ்சோலைக்
கிள்ளைப்பே டைகள்பயின்று பூவையுடன் கிளக்குமால். (௨௮)

பண்ணுணு மொழியாரைப் பகர்நாணுஞ் செயவேண்டிக்
கண்ணுன கொழுநர்புணர் கலவிமொழி குளறியதில்
விண்ணுண மமையாதான் மிகநாணும் பசுங்கிள்ளை
பெண்ணுர்தஞ் சின்னநடைக் கன்னநடை பேதுறுமால். (௨௯)

பிறங்காவித் திருமலரும் பிரிந்தார்வாயத் திருமலரு
மிறங்காது பாசடையிட் டிருந்தாலும் பாலனங்க
ளறங்காவல் பூண்டிருப்பா ரகந்தோறு மகந்தோறு
முறங்காது மும்முரச மொருகாம னெழுமுரசின். (௩௰)

தேம்பழுக்கு முப்புடைக்காய் தேமாவின் மிசைத்தூங்கு
மாம்பழத்தின் குலைசனத்து வருக்கைகளுஞ் சுளைபிதிர்க்குங்
காம்பழுத்து முட்கனியாற் கமுகமடற் கழுத்தொசியும்
பூம்பழுக்காய்க் குலைசாய்ப்பத் தலைசாய்க்கும் பொற்கதலி. (௩௧)

அருந்தளவ மூரலிட வம்புயம்பா சடைவிரிப்பக்
கரும்புதிம பால்வார்ப்பக் கதலிநறு நெய்வார்ப்பச்
சுரும்பினங்கள் விருந்தூட்டுஞ் சொலவரிதா மந்நாட்டில்
விருந்துபுறந் தருவாரே வியப்பாரைந் தருவாரே. (௩௨)

மெய்வளர்க்குந் திரிகூட மிசைவளர்க்கு மதுகங்கை
சைவமது கங்கைபல தடமவளர்க்குந் தடவாவி
செய்வளர்க்குஞ் செய்கழனி பொழில்வளர்க்குந் தேம்பொழில்கண்
மைவளர்க்கு மைமேக மாரிதனை வளர்க்குமால். (௩௩)

கொல்லைவா யேனலுக்குப் பொன்கொழிப்பர் குறமகளிர்
நெல்லிலா ரங்கொழிப்பர் நீலவிழிக் கடைசியர்கண்
மெல்லியார் பாலளப்ப மீனளப்பர் நுளைமாதர்
முல்லையார் மோரளப்ப முத்தளப்ப ரளத்தியரே. (௩௪)

பந்தரிடும் பொதுவியர்பூ முல்லைபசும் புனக்கொல்லைச்
சந்தனமேற் படருமது தாவிமலர் கொயுந்தோறு
நொந்தவிடைக் கொடிச்சியர்தா மணியொடுவா னுழைந்தேறி
யந்தரமே லந்தருவுக் காறுதரு வெனவளரும். (௩௫)

வேறு.

கோடைதொறு மாவிலொரு கோடிகுயில் கூவு
மேடைதொறும் வானமுகின் மேவமயி லாலு
மோடைதொறும் வால்வளை யுலாவிமணி யீனும்
வாடைதொறு மாடுகொடி மாகநதி மானும். (௩௬)

கோபுர வுயர்ந்தநிலை கோபுர மிசைப்போய்
நூபுர மலம்பவிடை நோவவர மாதர்
மாபுர வலனசபையில் வந்துநனி யாட
மீபுர மிசைந்தநட சாலையின் விளங்கும். (௩௭)

ஆறுபுனல் பாய்வனகண் ணாறுபனை தோறு
நாறுமலர் தேனொழுக நாறுநிறை சாலி
யூறுதட வாளைதெற வூறுபடு பாளை
சாறொழுகும் வீதிபல சாறொழுகு மாதோ. (௧௮)

வேறு

முடிபுனைந்தசீர் மன்னவர் நெறியினான் முன்னவர் தவத்தாற்
பைந், தொடிமடந்தையர் கற்பினான் மதிதொறுஞ் சொரிதரு மும்
மாரி, வடிபெருந்துளி மாரியாற் பலபயிர் வளந்தரும் பயிர்தமமாற்,
குடிவளந்தருங் குடியினான் மன்னர்செங் கோன்முறை தழைத்
தோங்கும். (௧௯)

முன்னி வானெலா மசுரர்கோ னழிகருநாண் முழுதினு மழியாத
கன்னி நாடுசெந் தமிழ்வள நாடெனக் கருதிவா னவர்கோமான்
சென்னி வானுறு முயர்திரி கூடத்துச் சேர்ந்தநாள் வளமேய
பொன்னி னாடுதென னாரிய நாடெனப் போந்தநா டிந்நாடு. (௨௦)

ஆடலாயிர விழியினா னருஞ்சிறை யரிந்திடப் புகுநாளி
லோடவேறிட மின்மையா லெம்பிரா னுறைதரு மிந்நாட்டின்
மாடமாளிகை மண்டப முபரிகை மன்றநா டகசாலை
கூடகோபுர மெனக்குடி புகுந்தன குலவரைக் குலமெல்லாம். (௨௧)

செந்நெ லாரமே சிற்றிலாச் செழுஞ்சிலைக் கடங்க ளப்பாகக்
கன்னன் மாமணி பரிசிறாய் வைப்புரிசு கடங்கள்பெய் துலையேற்றிச்
சொன்ன மாமண லமிதத்திரள் சொரிந்துசெந் தாமரைசன லமையூட்டி
யன்ன மார்வயற் பாவையர் பாவைகட் கருத்துவர் சிறுசோறு. (௨௨)

வேறு.

கொல்லையங் குறிஞ்சி யேனல் வரகின்மேற் குவல்க ளிட்டு
முல்லையின முதிரை சாலி வேலிமேற் குலைகள் பொய்க்கு
மெல்லையங் கழனி வாழை பந்தரிட் டிலைக ளேந்தத்
தொல்லைநீர் நெய்தற் கைதை சோறுகள் சொரியு மாதோ. (௨௩)

குறிஞ்சியந் திணையுந் தேனும் பெயினர்பாற் கூட்டி வேட
பெறிந்தவெஞ் சிலையைக் கோலா விடையர்கட் குதவி யாயர்

கறந்தபா னள்ளர்க் கீந்து மள்ளர்கட் குடதத் தினோடு
மறிந்தநெற் குவையை யாரி வலையர்கட் குதவும் வாரி. (சச)

ஆறெலாங் குதிக்கும் வாளை யலையெலாங் கொழிக்குஞ் செம்பொன்
சேறெலா முழக்கு மேதி செய்யெலா முகிழ்க்கு நீல
நாறெலாம் வளர்க்கும் பூந்தே னடையெலாம் வளர்க்குஞ் செங்கோல்
சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கு மன்றம். (சரு)

மைந்தர்தம் புயமுந் தாரு மாதரார் கொங்கை யார்க்குங்
கொந்தலாங் குழலு மின்னார் கோலமு மெழிலி னீட்டங்
கந்தமார் கழுநீர் வண்டின் கமலமு மிரவி னோடும
விந்தைசேர் முலையுங் கண்ணும் விரைதரு குழைக டாமும். (சசா)

அன்னவா ரிசமும் யாறு மம்பொனு டரங்கங் காட்டும்
பொன்னணி மறுகும் வாணர் புலமையுஞ் சங்க மேயு
மன்னுயிர் விழாவு மாதர் வதனமுந் திங்க ளார்க்கு
மின்னனார் தனமுஞ் சோலை மேவியு நரந்த நாறும். (சஎ)

காவிகள் கிளைக்கு மாலை கமழ்குழற் கிளைக்கு மாலை
யேவுநீர்ப் பழனந் தோட்ட மிடந்தொறும் பழனந் தோட்ட
மாவிவாய்க் கமட மோங்கு மறங்கள்வாய்க் கமட மேயுந்
தூவிய மடப்பா லன்னந் துறைதொறு மடப்பா லன்னம் (சஅ)

புயல்களைக் கோட ரங்கு லாவும பொழில்கள்கோ டரங்கு லாவும்
கயல்கணமா தரங்க மேவுங் கலங்கணமா தரங்க மேவு
மியலிசை கொழிக்குஞ் சங்க மினமணி கொழிக்குஞ் சங்கம்
வயலெலாம் பொருங்கா லாறு மலரெலாம் பொருங்கா லாறு. (சகூ)

அலைபடுங் கொடியும் யாறு மவிபடு முனைவுந் தெவ்வு
முலைபடுங் கனியும் பொன்னு முடைபடு ததியுந் தூசு
மலைபடு மலரு மஞ்சும் வளைபடுந் தனுவுஞ் செய்யுங்
கலைபடு மதியு மன்றுங் கரைபடுந் தடமுஞ் சாந்தும். (ருO)

வேறு.

செய்காட்டுந் தாமரையாத் தேன்காட்டுங் கழுநீரா
மொய்காட்டு நறுந்தளவா முருகாட்டு மாந்தளிராக்

கைகாட்டி முகங்காட்டிக் கண்காட்டி நகைகாட்டி
மெய்காட்டித் திருமடந்தை விளையாடுந் திருநாடு. (௫௧)

பண்ணவருங் கடவுளரும் பரவுசரா சரமாகக்
கண்ணகன்சீர்த் திசைதோறுங் காதலா லுறைகுவதே
லணணலார் நன்னகர்தன்னை ஞாலியநாட டணிபுகழ்தல்
விண்ணவர்க்கே யரிதாமேல் மேதினியோர்க் கெளிதாமே. (௫௨)

வேறு.

பூவினுக் கிறைவர் களரப் பூமகட் கிறைவா தங்கட
ளாவிகட் கிறைவர் வாழுதென் ஞாலிய நாடு பொருநட
பாவினிற பயனிற சொல்விற பண்ணினிற பயிலுந தோறு
நாவினுக் கினிய தான நகரினைப் பகர்தல் செய்வாம். (௫௩)

2-வது திருநாட்டுச் சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் ககக.



## மூன்றாவது திருநகரச் சருக்கம்.

அகில காரண னகிலமேலா கமும்படைத் தளித்தரு ளிடமாகிச்
சகல காலமு மழிவிலாத தலமெனுந் தகைமையாற் சதுர்வேதன்
பகலி ராத்தொறுந் தவிர்படு பலபருப் பதங்களுங் கடல்யாவும்
புகலி டம்பெற வந்திடம் பிடித்ததாம் புரிசையு மகப்பாவும். (க)

பூமிக் கோரர சிருக்கைதென் புடார்ச்சுன புண்ணிய புரமாகு
நேமிக் குன்றமே நகர்ப்புறஞ் சூழ்தரு நெடுங்கிலப் பெருஞாயில்
வாமக் குன்றெலா மாடங்கள் வரைக்கொரு மருகனார் திருக்கோயி
லேமக குன்றுசூழ நாறகிரி கோபுர மெண்குலக் கிரிமாதோ. (உ)

இஞ்சி சூழ்வது நாற்றிசைப் புறமெலா மிடந்தொறுந் துளிதுங்க
மஞ்சு சூழ்வது மணிமதிற் புறமெலா மங்கைய ரடிசேர்செம்
பஞ்சு சூழ்வது மைந்தர்பொன் முடியெலாம் பயிலுமங் கலநாத
மஞ்சு சூழ்வது மனையெலா மணிகொழித் தாறுசூழ் வதுமூதூர். (ங)

நாட்டம் போல்வது தன்மமகட் கந்தகர் நாடொறு மளகேசன்
றேட்டம் போல்வது திரள்பெறு மிருநிதி திரிபுரை செழுங்காமக்

கோட்டம் போல்வது குளிரறச் சாலைநற் குறுமுனி பெரும்பான்மை
நீட்டம் போல்வது நிகழதரு பதிதொறு நிறைதரு பெருஞ்செல்வம். (௪)

நீல மாடமு நித்திலத் தெற்றியு நிரைததன தெருத்தோறுங்
கோல மோதிம மாகியொவ் வோருருக கொண்டுபெற பலகால
மால முண்டவ னடிமுடி தேடுவா ரணிவிழாத் தொறுங்காணபான்
ஆல மானபற் பலவுருக் கொடுநகர் சூழ்ந்துநிற் பதுமானும். (௫)

வேறு

முந்தை மாமறை யோர்முது வீதிவாய்
விந்தை நாரியா மேடையின் மேற்கிளி
சிந்தை வேதச் சிறுரயாப் பாயினுஞ்
சந்தை சொல்லுந் தனிதத்னி மாடங்கள். (௬)

விரும்பு கைக்குல மேகத துளியெலாங்
கரும்பு கைகுங் கனிமொழி மாதரார்
சுரும்பு கைக்கு மலர்ச்குழல் சூட்டகில
வரும்பு கைக்குளிர் வாசனை வீசுமால. (௭)

வேறு

விடமுந் தூயதெள் ளமுதமு மின்னனார் விழிகளி னிடைத்
தோனறுங், கடவு தண்டமுங் கருணையு மனுநெறிக காவலரிடைத்
தோனறுந், கூடிற காய்வமுங் குளிர்நளி பொழிவதுஞ் சூரிய
ரிடைத்தோனறு, மடைவு சேர்பெருந் தவத்தர்பாற சாபமு மநுக
கிர கமுந்தோனறும். (௮)

கறைகொள் கந்தரக் கடவுளைச் சேர்ந்தபின் கறைதவிர் மதி
யோங்கிப், பிறைகளாயிர கோடியாய்க் கிளைததுமேற் பிறழ்வதோ
பெருவானத், துறைகொள் கங்கையின் பெருக்கமோ புரந்தரன சுடர்ப்
படை தனிமீர்நத, சிறைகள் குன்றெலா முளைததவோ மாடமேற்
செழுமணிக் கொடியீட்டம். (௯)

பின்னல் சேர்நதி வேணியார் முத்தலைப் பிறங்கலி லயனுகி,
முன்னெ லாமிருந் துலகெலாம் படைத்தநாண் முகிலெலா மதியெல்
லாம், பொன்னெ லாநவ மணியெலா மணங்கமழ் பூவெலா முயர்வா
னின், மின்னெ லாங்கொடு சமைத்ததா மிந்நகர் மின்னனார் கூடி
வெல்லாம். (௧௦)

வேறு

விளர்தரு மதியின்பாலோ வெள்ளிவள் ளத்தின் பாலோ
கிளர்வதென் றுணராப் பிள்ளைக் கிள்ளைகண் முகப்ப வேகித்
தளர்வது கனக மேடைத் தளந்தொறுந் தேய்ந்து திங்கள்
வளர்வது தவள மாடம் வடிம்புதோய் சுதையான் மன்னோ. (கக)

பயிலுமே னிலைக டோறும் பந்தடித் தாடு வாளை
மயிலெனக் குயிலைபின் காட்ட மழலைவா யிசையா லஞ்சிக்
குயிலெனை மயில்பின் காட்டக் குழைகளா லளகக் கொத்தால்
வெயிலொடு புயலுங் காட்டி மீட்டுமீட் டழையா நிற்பார். (கஉ)

பச்சையாற் பவளக்கொத்தாற் பதுமரா கத்தான் முத்தால்
வச்சிர வயிடூ யத்தான் மற்றுள மணிகளாலு
மச்சினில் வார்த்தா லென்ன வணிகிளர் மாட வீதி
நச்சர வுச்சி யாட்கு நவமணி மாலை மானும். (கங)

வேறு

தெளிகுமணி வளையார்ப்பச் சிலம்பலம்ப வானுயர்ந்த
பளிக்குமணி மேடையின்மேற் பந்தாடப் பயிலவாரை
யளிக்குலஞ்சேர் பூந்தடத்தி லன்னமெனப் பொன்னாட்டுக்
களிக்கும்வா நதிக்கரையிற் கன்னியன்னஞ் சூழுமால். (கச)

வண்டாடுஞ் சோலைகளு மயிலாடுஞ் சாலைகளும்
விண்டாடு மேடைகளுங் கண்டுகண்டு மேதினிமான்
பண்டாடுங் கரங்களன்றிப் பயில்கோடி கரமெடுத்துக்
கொண்டாடு வதுபோலு மணிமாடக் கொடியெல்லாம். (கரு)

குவவுதம ணியசிகரி கோலவட வரைகாட்ட
விவருமணி மேனிலைக ளெழுபுவன முறைகாட்ட
நவமணிக ளழுத்தியது நவக்கிரக நிலைகாட்ட
நுவல்கணித நூலோர்க்கு நூன்மயக்கங் காட்டுமால். (கசு)

ஒண்மணிமண் டபந்தோறு முயர்கொடிகள் வானளவித்
திண்மையுற நின்றுடல் செங்கதிரோன் றேர்த்துகளும்
வெண்மதியிற் படாமாசும் விண்மீது படாமே
மண்மகள்செய் சாந்துப கொண்டுதுடைப் பதுமானும். (கஎ)

அருமபடிக நிலத்தாடு மணங்காரை யாடவர்கள்
விரும்படிக ளெனபபரவ வியன்முடிமே லதைதகங்கள்
வரும்படிகண் டலர்விழிபபாரா வருகாலை மருமாலைச
சரும்படிக ளடிசசுவடு தோன்றுமன் மறைததிடுமால. (௧௮)

வேறு

பொதிர்படக் ககனந்தாவும் பொலனமணி மாடகோடிக்
கதிர்கள்கண் வழுககித திங்கள் கனககோ புரத்தின்மோதிப்
பிதிர்படு மதனு லனமோ பிறையதாய்க் குறையா வெங்கும்
விதிர்படு நாளாய்க கோளாய் மீனகளாய்ப் பரம்பும் வானம். (௧௯)

விண்டருங் கொடிஞ்சித் திண்டேர் விழாவறா வசந்த வீதி
யெண்டரும் புயத்தெம் மாணை யெனறுமே நினறு போற்றுந்
தொண்டர்தங குழாங்கள் போலுனு ந்தைநெடு மாட மெல்லா
மண்டர்தங் குழாங்கள் போலு மம்பொனு டரங்க மெல்லாம் (௨௦)

வேறு.

தாயின் மிக்கவன் றொழு தூச்சகங்
கோயில் புக்கு வருபெருங் கொள்கையாற்
சேயின மிக்குல குண்டுமிழ் சீதரன
வாயின் மிககது கோபுர வாயிலே. (௨௧)

வேறு.

வாடைவந் துலவிய படிக மாமணி
மோடையி லுடிக்குழாத துலவும் வெண்பிறை
யோடைநீர்ப் பெருந்தட மதனி லோதிமப
பேடைதன் பார்ப்பொடும் பெயர்தல் போலுமால். (௨௨)

ஏகமா மரகதத் தியற்று மாளிகை
மாகமார் சூளிகை தொடுத்து மாடெலாம்
பாகமேற் பதிந்தொளிர் பதும ராகங்கண்
மேகமேற் பரந்தொளிர் மின்கண் மானுமே. (௨௩)

சேடக முயர்நிலை தீட்டுஞ் சித்திர
நாடகப் பத்திசேர் நடத்தை நாடொறும்

பாடகக் கால்களாற் பயின்ற தாலன்றே
வாடலி னுயர்ந்தன நமரர் மாதரே. (உச)

பளிக்குமா ளிகையின்மேற் பவளத் தூவிகள்
குளிக்குநீர்க் குளங்கண்மேற் குமுதம் பூத்ததாங்
துளிக்கரு முகிலினஞ் சூழ்ந்து லாவரல்
களிப்புறு சிறையளிக் கணங்களேய்க்குமால். (உரு)

இந்திர நீலத்தி னியன்ற மாடமேற்
சந்திர காந்தத்திற் சமைத்த தூவிக
ளந்தர மதிக்குநீ ரளித்தல் வேனிலுங்
கந்தரம் பொழிதுளிக் காலங் காட்டுமே. (உசு)

வேறு

சாந்தரைக்கு மடவார்கள் வீதிதொறுஞ் சவைதொறுஞ்சென்
மாந்தரைக்குங் குமச்சேறு மனுநாளும் வழுக்கெடுக்குந்
தேந்தரைக்கு ளுழவோர்க்குந் தெய்வநிலை போற்றுது
காந்தரைக்கும் பிடுவோர்க்குங் கைகூப்புங் கதிர்ச்சாலி. (உஎ)

வேறு

காமர்பொன் மாளிகைக் கவினி ரண்டுபொன்
மாமணி வயிரத்தான் முகப்பு வாய்ந்திட
லேமமால் வரையிரு பாலும் பௌவநாட்
சோமனு மிரவியுஞ் சுடர்தன் மானுமே. (உஅ)

திங்களை முகமெனச் செய்து நான்முகன்
பங்கய முகிழினைப் பதித்த தாலன்றே
நங்கையர் குவிமுலை நாளும் வெய்யவ
னங்கதிர் பரப்பினு மலர்ந்தி டாததே. (உகூ)

துன்னிய கொழுநர்பாற் சுரத நாரியர்
முன்னிய புலவியின் மொழியை மேடைமேற்
பன்னிய பசுங்கிளி பயிலும் பான்மைவான்
கன்னியைப் பயிற்றுவ காம நூலரோ. (௩0)

வேறு.

சிறுகாலை யட்டில்புக லருத்தியுறச் சமைத்தல்சுவை திருத்தி
யூட்டன, மறுகாலை யெனவுறு விருந்தமைத்தன மகப்பெறுதன்
மடநாணச்சம, பெறுகாலை யின்புறுதன முன்னுறங்கப் பின்னுறங்
கல பின்னெழாத, லுறுகாலை தொழுதெழுதல் பனிரண்டு மந்நகர்க்
கற் புடையோர் செய்கை. (௩௧)

ஓதுமறை யாற்பிரம முதகுழலாற் றெய்வமுயர் பலியாற் பூதம்,
பேதமா னுடமதிதி பூசையாற் றருப்பணத்தாற் பிதிர்க்கள் யாக,
மேதகுமை வகைவேள்வி யிவ்வகைசெய் தறுதொழிலும் விதியா
லாற்றிப், போதநெறிக் கொருதுணையாய் மறைக்கொருவித் தாயு
றைவர் புரிநூற் செல்வர். (௩௨)

மூலமறை மனுவேதி முறைபெறுசை வாகமத்தான் முதல்வர்
பூசை, காலமுற நித்தியநை மித்தியகா மியங்களினுற் கருத்தி
னுற்றி, யாலமமு துண்டபிரா னடியர்குழாத் திருந்தமுத மருந்தி நா
தன், சீலமல துணராதே யுணர்ந்திருப்பா முப்பொழுதுஞ் சிவநூற்
செல்வர் (௩௩)

காலைதொறு முறைமையரொடு நூலாய்ந்து குடிமுதலாஞ் சாப்புப்
போற்றி, மேலைநூற பாவலாகரும் வேதியர்க்கு மீந்துபல வேள்வி
வேட்டுச், சாலைதனிற் சிவபெருமான் றமர்களொடுந் தமர்களொடுந்
தகவா யுண்டு, மாலைதொறு மொற்றுய்ந்து துயிலிடத்தும் பார்காப்
பர் மனுநூற் செல்வர். (௩௪)

புங்கமா மறையோதி வாணிகந்தொட் டறுதொழிலாற் பொருள்க
ளாக்கிப், பிங்கலற்குங் கருகூலம் போலிருப்ப சொருகூலம் பிரியாச்
செல்வர், கங்கைமர பினிலுதித்துக் கலைபயின்று பொருள்வளர்த்துக்
கலிகளாய, வெங்களைகட்டியா தருமவேளாண்மை புரிந்திருப்பர் மேழிச்
செல்வர். (௩௫)

வேறு

மருவுறுநன் னெறிநிலத்து வாய்மையெனும் விதைதெளித்துப்
பெருகுகுண நீர்பாய்த்துப் பிறங்குசினக் களைகடிந்து
தருமமெனும் பயிர்வளர்த்துச் சகலபோ கமும்விளைக்கும்
பொருவருஞ்சீர்த் திருநகரம் புடார்ச்சுனபுண் ணியபுரமே. (௩௬)

மாமணி மண்டபமாட மாளிகைக ளுறுப்பாகக்
கோமதிய முகமாகக் கொங்கைகோ புரமாகக்
காமருதே ரல்குலாக் கடிமதின மேகலையாகப்
பூமகளா ரரசிருக்கும் பொன்னகர மிந்நகரம். (௩௭)

இல்லறமுந் துறவறமு மிடைவிடா வெறுக்கைவிடார்
பல்பயிர்க்கும் யோகியர்க்கும் பதந்தொறுங்கொண் டூப்பொழியு
நல்லவரும் விளையாட்டு நயந்தவருஞ் சூழ்கெறியா
ரல்லவரு மெல்லவரு மாதரிப்பா ரிரவலரை (௩௮)

வேறு.

பன்னகர் பதியா மென்கோ பாதலத் தரசின் வாழ்வாற
பொன்னக ரென்கோ புத்தேட் பொலிவினுன முனிவர் சித்தர்
கின்னரர் பதியா மென்கோ வாங்கவர் கிளைக்கு மாத்தா
லிந்நகர்க் கிணையா வேறொ ரிசைக்கலாந் தகைமைத் தாமோ. (௩௯)

பன்னக சயன னாட்டிற் பங்கய னுலகிற் றேவர்
மன்னகர் சுவர்க்கந் தனனில் வளமிகு நகரை யாரு
நன்னக ரெனவே யிந்த நகர்பெய ரிடுவா ராலு
மிந்நகர்ப் பெருஞ்சீர் கூற வெம்மனோர்க் கெளிய தாமே. (௪௦)

இந்தமா நகரை யாளு மிறையவ னிமய மீன்ற
செந்துவர்க் கனிவாய்ச் செல்வி செண்பக வல்லி பாக
னந்தமோ டாதி யில்லா னயினு மெவர்க்குந் தாயாய்த்
தந்தையாய்த் தலைவ னவான் சரிதையைப் பரவல் செய்வாம். (௪௧)

மூன்றாவது திருநகரச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௧௭௦.

---

## நான்காவது புராண வரலாற்றுச் சருக்கம்.

விரைசெய் தாமரை வியன்கலை மானுடன் மேவி
முருகு யிர்த்ததுநால் வாயுறு வாரண முழங்கி
யரச மைந்தபூந் தவிசுக மண்டல மசைத்துப்
புரையி லாவனந் திசைமுகக் கடவுளைப் பொருவும். (௧)

துளவ ணிந்துவே யிசைதந்து சுரபபுடைப் பாலுங்
களவு செய்துகாற் றளையுண்டு காவிளங் கனமுல
விளவெ றிந்துநீள் குருந்தமே லிவர்ந்துவிண் ணெடுபா
ரளவு செய்தலா லாழிமால் பொருவுமவ் வனமே. (உ)

வேள்வி பறபல புரிந்துவான் றருநிழன் மேவித்
தாழ்வி லாமுகி லூர்ந்துநீள் வச்சிரந் தரித்து
வாழ்வு சேர மகவிரா டலினக மலர்ந்து
சூழ்குலா வனம் பொன்னகர்க் கிறையெனத் தோன்றும். (ங)

துன்னு தாதணிந் தெழிலிநீர் மஞ்சனஞ் சொரிந்து
வன்னி பாதிரி மாதவி கூவிளம் வகுளம்
பன்னு சூதமேற் றவிர்மல ரருச்சனை பயின்று
கன்னி நீள்வனஞ் சிவபிரா னடியவர் கடுக்கும். (ச)

முறைப ழுத்தமெய்ம் மனத்துடை முனிவரர் வேண்ட
மறைப ழுத்தவாய்த் திசைமுகன் குசையினால் வகுத்த
நிறைப ழுத்ததோர் நேமியி னகத்ததாய் நிரம்பி
நறைப ழுத்தது கங்கைசேர் நைமிசா ரணியம் (ரு)

வாவி தாமரை வாண்முக மலர்ந்துநன் மருங்கிற்
காவி சாத்தியுற் பலமெனுங் கண்மலர் முகிழ்த்து
மேவி மாதவர் நிகர்ப்பது மின்னனார் குழல்போ
லாவி மாமணங் கமழ்வது நைமிசா ரணியம். (சா)

தேனுந் தும்பியு மெடுத்தபண் ணிசைசெவி மடுத்து
மானும் வேங்கையு மொருதலைத் துயில்வது மயில்கள்
கான நாடகம் பயிறரக் காணமா மறைகண்
ஞான யோகிகள் பயில்வது நைமிசா ரணியம். (எ)

ஆல முண்டவர்க் கன்பரா யறிஞரா யழியாக்
கால மூன்றையு முணர்ந்தவ ரிருப்பது கருதுஞ்
சீல மூன்றின்மேற் றெரிந்துமெய்த் தவங்கள்செய் வார்க்கு
ஞால மூன்றின்மேற் கதிதரு நைமிசா ரணியம். (அ)

வேறு

அவ்வனஞ் செய்ய தாக வருந்தவ ருழுவர் யாரு
மெய்வரும் விதியேர் பூட்டிச் சநிதைவித் தெறிந்து வேறாக
கைவரு பருவை மெய்யாம் புனல்சொரிந் தநேக காலஞ்
சைவமை திசுவே ளாண்மைச் சத்திர மகங்கள் செய்தார். (௯)

பண்ணிய தவங்கடானம் பரிவுற புரிவார்க் கன்றிக்
கண்ணிறைற் கண்டுளார்க்குங் கதியெனும் விதியை யோர்ந்து
நண்ணிய கலைகள் யாவு நவின்றருள் சூத னன்றோ
புண்ணிய வேள்விச்சாலை புகுந்தனன் முனிவர் சூழ. (௰)

பொருந்தவச் சூதர் சூழாப் புலன்மகத் தேர்க டாவி
யிருந்தவச் சூதர் போனுமிருடியர் வருடி யேத்தி
வருந்தவச் சூதன் றன்னை மாதவ வியாத னென்னும்
பெருந்தவச் சூதஞ் சேர்ந்த பேரிசைக் குயிலைச் சூழ்ந்தார். (௧௧)

ஆசனத் திருத்தி வாழ்த்தி யருக்கிய முதல நல்கிப்
பூசனை புரிந்தி யாங்கள் புரிமகந் தொடுத்த சாலை
வாசனை முகுர்த்த மனமேற வந்தனை பெரியோ யென்று
நேசனை வினவிக் கேட்பார் நிறைதரு புராண மெல்லாம். (௧௨)

பண்ணியல் பலபு ராணம் பகர்ந்தபின் பதினா லென்ன
வெண்ணியல் சிவபு ராண மீரைந்தி விலக்க மாக
நண்ணிய காந்தந் தன்னி னன்னகர்த் திருக்குற றாலப்
புண்ணிய புராண மெங்கள் புந்தியி னுவட்டா தென்றும். (௧௩)

அன்னதைச் சுருக்க மாக வறைந்தனை யடுநோய் தீர்ப்பான்
முன்னுமந் திரதத்தை யோதி மூலம்வித் தறியார் போல
பன்னரும் பலநூல் கேட்டுந் தவிர்ந்திலம் பதிமேற் றாகு
நன்னகர்ப் புராண மின்னு நங்கெமக் கருள்வா யென்றார். (௧௪)

மோனரீ துரைப்பச் சூதன் மொழிகுவான் முக்க ணார்க்குந்
தானமே யனந்தமாகு மவைகளிற் றவப்பூ வின்பத்
தேனமர் திருக்குற் றாலஞ் சிவாக சியமா மீது
ஞானபக் குவத்தார்க் கன்றி யாவர்க்கு நவிலொ ணாதால். (௧௫)

தன்மகனை முதலோ ராறு தகையானூற குரிய ரேனு
முனைவர் களிய ராதி மூவைந்து திறததாக கோதா
சொன்னநா லிருவ ருள்ளுந் தூயவர் நால்வர் தம்மி
லன்னமே யனைய ராளீர பாலபிரித தறிந்த வாறருள். (கசு)

அதிகாரந் தேவ ராலு மறிவதற கரிதா முளைமை
யதிவலி நிலைத்தி ஞானில வினவுதல் வல்ல ராளீர
பதிமுத லுரைதத தூன்றிற பரமெனும் பொருளைச் சேரும்
விதிவலி யுடையீர் நீரே யெனறுமேல வியந்து சொல்வான. (கஎ)

வேறு

சீர்பெருகு காந்தமெனுஞ் சிவபுராண மெழுஞ்சங் கிதைகளாறிற, கார்பெருகு குழலுமையாட் கெம்பிரா னுரைத்தருள்சங் கரசங்கிதை, யேர்பெருகுந் திருமுடிமே லிருந்தருளிக குமரதே சிகனெனு கோமா, னேர்பெருக வுணாந்துகும்ப சம்பவனுக குபதேச நிகழத்தி ஞுறல். (கஅ)

மாதவரி லுயர்மலய மாமுனிவ னதையுணர்ந்து வகைமை சாலப், பூதலத்தி லுணர்த்தியதா லகத்தியசங் கிதையெனவும் புகல்வர் மேலோ, ரீதலது சனற்குமர சங்கிதையுந் தருபொருளா மெழிற் செவ் வான, மீதிலெழு மதிபோலுங் குற்றமில மகிமையென வியந்து போற்றி. (கக)

விரிகூடக் கம்பகும்பக் களிறுபிளி றிடவுரித்து விரித்து வேங்கை யுரிகூட வுடுத்தருளி நடித்தருளுஞ் சிவபெருமா னுலக மீன்றாள் புரிகூடுந் திருமணத்தின பொருட்டாகக் குறுமுனிக்குப் புகன்ற காதை, திரிகூடத் தலமகிமை திரிகூட வரைமுதலாச் செப்பு கின்றான். (உ0)

நான்காவது புராண வரலாற்றுச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஅ0.

# ஐந்தாவது திரிகூடமலைச் சருக்கம்.



கீத யாழிசைக் கின்னரர் கானமுங்
காதல் விஞ்ஞையர் பண்ணிசை கானமுஞ்
சீத மால்வரைத் தீங்குயி றகானமும்
வேத கானமு மிக்கது திக்கெலாம். (க)

முழைக டோறு முனிவர் குழாங்களே
யுழைக டோறு முயாமகச் சாலையே
கழைக ளேவுங் கதிர்மணி முத்தமே
மழைக ளேவு மறுவியை மானுமே (உ)

பந்தி பாய்முகில் பாய்மத மாவெனத்
தந்தி பாயுமத் தந்தியை வெற்பென
மந்தி பாயுமம் மந்திகள் பாய்தல்போ
லுந்தி பாயு முயர்வரைச் சார்பெலாம். (ங)

கான யாறுங் கடிமலர்ச் சோலைவாய்த்
தேன யாறுந் திசைபொரு மைமலைத்
தான யாறுந் ததைவன சோலையும்
வான யாறும் யமுனையு மானுமே. (ச)

செருவி லார்த்தெழு தேனபொரத் தேனிழி
லருவி யார்த்திட வார்த்திடு மைமவன
மிருவி யார்ச்சும புனத்தினு மெண்ணிலாக்
குருவி யாப்பக் குரல்பரந் தார்க்குமே. (ரு)

குமுத மொத்த விதழ்க்குறக் கோன்கொடார்
கமுக கெற்றிக் கறிபடர் முன்றில்வாய்
விமுதி னைக்கு விலையென நேர்க்குமே
ரமுதி னைக்கூ ரமாத ரளபபரால். (சு)

வேறு

சீர்மலி படிகப் பாறை பத்தியாச் செல்வான் மீனை
நீர்தரு கயல்போற் கொத்து நிறைதரு படப்புள்ளிட்ட

மூர்மணிச் சுடிகைப் பாந்த ளுறுகையென நாதி யூதிக்
கார்மலி குளிர்கருத் தீப்போற் காயவன கிழகசூன மந்தி (௭)

நகிலெழும் புகைபார்க் கெனன நணிகெழு பொருப்பின் மாத
ரகிலெழும் புகையும் வேட ரடுபுனத தகருச் சாநத
மிகிலெழும் புகையும் வேத வேள்வியின புகையும் விண்மேன்
முகிலெழும் புகைபோன் மொய்பப முகிழ்ப்பாவா னவரு நாட்டம் (அ)

ஆழபுன லருவி யாாபபு மநதண வைரநது நாறு
வேள்வியினார்பபு மேலை விணணவ ராாபபு மாதர்
வாழபுனக கவணகல லாாபபு மணிவரை யார்பபு மாங்கே
யூழ்வலி கடக்கின் றூர்போ லுருமொலி கடக்கு மாதோ. (௯)

மழைதரு முதததும் வான மதிதரு முநது நீண்ட
புழைதரு பணைககை நீலப பொருபபினமா மருபபின் முததுங்
கழைதரு முதது மேனக் களிறுகோ டுருத்த முததும
விழைதர வொளிருஞ சாரன் மிஞ்ஞெளிர் வான மேய்க்கும். (௧௦)

வேறு.

சோலை காட்டுந் துறைதயிரு ளாலிரு
வேலை காட்ட விலாமையின மெய்ததவர்
காலை காட்டிவ வாளிக் கமலங்கள்
மாலை காட்டு மலர்தரு காவியே. (௧௧)

மாக மேனகை மங்கை யுருப்பசி
மோக நாடகம பார்ப்பதின மொய்ததெழார்
தோகை மாமயி லாடலைச சோலைவாய்
மேக மேனின்று பார்ப்பர்விண் ணோரெலாம் (௧௨)

மலைக டாவு மநவிகள் வானதித
தலைக டாவுந் தலைமதி மானின்மேற்
கலைக டாவுங் ககனத்து மேடைமே
னிலைக டாவு நிரைவரை யாடரோ. (௧௩)

கோல மாங்குயில் காவினிற் கூவுத
லால முண்டவ னிங்குள னதலாற

றலமு வான்ந் தடவப் பெறீரென
மால யன்றனைக கூவுதன மானுமே. (௧௪)

அருவி யாடிக் கரைபுகு வார்க்கண்டர்
தருவி மானமொப் பாமலர்ச் சணபக
மருவி மாருதத் தானுகு மாமலா
பொருவில் வானவர் பூமழை போனுமால். (௧௫)

சால மாநற வம்பணை சாதியே
சால மாநற வம்பணை சாதியே
யேல மார மிலவங்க நாறுமே
யேல மார மிலவங்க நாறுமே (௧௬)

கானத் தும்பி கடாங்கவிப் பாலெழு
கானத் தும்பி கடாங்கவிப் பாலெழுத்
தானத் தும்பர் களிறனொடுந் தாக்குகைத்
தானத் தும்பர் களிறனொடுந் தாககுமே. (௧௭)

கனமு ழக்குவ கான மடங்கலுங்
கனமு ழக்குவ கான மடங்கலுமா
வனம டுத்துறை மாகய மொன்றுமே
வனம டுத்துறை மாகய மொன்றுமே. (௧௮)

வண்டி னங்கண் மலர்வன சம்பதில்
வண்டி னங்கண் மலர்வன மாதரார்
கண்டு ளக்கு முகத்தலங் காட்டுமே
கண்டு ளககு முகத்தலங் காட்டுமே. (௧௯)

மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
மாவி ருப்பை மகிழ்தரு வன்னியே
நாவி னிதத நவிற்றுவ வாசகம்
நாவி னிதத நவிற்றுவ வாசகம். (௨௦)

கோட ரங்குயி லொடுங் குலமாக்
கோட ரங்குயி லொடுங் குலமாயி
லாட ரங்க மறையு மருவியே
யாட ரங்க மறையு மருவியே. (௨௧)

வான ரமபையின் மாவிற பலவின்மேல்
வான ரமபையின மாவிற பலவின்மேல்
வான ரமபையின மாமயில யாழ்செய
வான ரம்பையின் மாமயி லாலுமே (உஉ)

பூண்ட வாது புணர்முலை யார்நகை
பூணட வாது புணாமுலை யாாபடா
ராணட சோக மமாரு நீழலவா
யாணட சோக மமாரு மெய்துவார். (உ௩)

வேறு.

மன்றலயர் பெருவளங்க ளிவ்வகையால வளர்ந்தோங்கி
மினறலைய சடையாாக்கு முமைக்குமிவிய ஞடரங்காய்த்
தன்றலையில மந்தமதோர் தவம்வளர்தரூச் சிவம் வளர்சகுந்
தென்றலையும் வளர்ககுமது செணபகபபூந தடங்காவே. (உ௪)

மற்றூரும் புகழ்கயிலை வடமலைவிட டெம்பெருமான
முற்றூத களபமுலை முதல்வியுட ஞறையுமிடங்
குறறூலத திருககருன குளிர்மலர்சசெண் பககாவுந்
தெற்றூக வுடையமலை திரிகூடத திருமலையே. (உ௫)

பூவருகக முதலாய புவனமெலாம படைத்தளிககு
மூவருக்கு முளைக்குமிட மாதலான் முதுமறைகண
மாவருக்கை யாய்முளைத்து மாதவஞ்செய் மகிமையினூற்
றேவருககுந தெரிவரிதாந் திரிகூட வரைமூலம. (உ௬)

வேறு.

தெய்வ முத்திரைக் காவென வளிபடாச் செண்பகப் பொழி லென்னுங், கைவ சப்படத் தகைந்துபைந் தாதினூற கமழ்திரு நீரு ட்டி, மைவ னத்துறை நாளின்மேற் கோளின்மேல் வானின்மேல் வானோர்மேற், சைவ முத்திரை சாதருமுத் தலைக்கிரி தண்டமிழ்த் திரிகூடம். (உஎ)

ஈன்று காப்பது மழிப்பது மறைப்பது மிதற்குமேல் விளையாட்டு
மான்ற பல்வகைக் காரண காரிய மவையெலா முறைதோன்றத்

தோன்று காலமுங் கணிதமுங் கடந்ததோர் சுடர்முளைத் திடுநாளின்
மூன்று காலமுந் தனனிடை முளைத்திட முளைத்தது திரிகூடம். (உஅ)

தம்மை யேதமக் கறியொணு திருவெனச் சமைந்தமும் மலமோடச்
செம்மை யேமுதன் முச்சுட ரெறிபபது சென்னசஞ் சிதமேய
வெம்மை யேதொடுத் திம்மையே மறுமையே பயங்கு முப்பவ நோய்க்கு
மும்மை யேய்மணி மந்திர மருநதெ்ன முளைத்தது திரிகூடம். (உகூ)

பின்னு செஞ்சடை யெம்பிரா னெத்தலம் பிரியினும் பிரியாதே
துன்னு கின்றமால் வரையெனத் தமைப்பிரி தொறும்பிரி வாறுமே
மன்னு மாடக வரையிர சதகிரி மந்தர மெனமூன்றும்
பொன்னின்மூவகைககொடுமுடி யாமெனப்பொலிந்தது திரிகூடம் (௩0)

கவன நான்முக நாரணப் பிரளய கற்பகா லந்தோறு
மெவன மாகவித் தலத்திடைச் சிவபிரா னிருந்ததலா லழியாமற்
புவனம் யாவையு மொருதலை யந்தர மொருதலை புரையில்லாப்
பவன மோர்தலை யாகநின றெடுத்தருள் பழமலை திரிகூடம். (௩க)

ஊற்றி ருந்ததேன் கமலமே லுவரிமே லோங்கன்மே லனம்புள்ளே
றேற்றி ருந்துமுச் செயல செய்வான் மூவடி வெடுப்பவர்க் கிடமாக
மாற்றி ருந்தபொன் மேகலை மூன்றெடும் வயங்குதெக் கணமேவி
வீற்றிருந்ததோர் வடநெடுஞ் சயிலமே விரிதமிழ்த் திரிகூடம். (௩௨)

பொன்ம லைக்குமோர் முதுமலை புதுமையாற் புதுமலை கயிலாய
நன்ம லைக்கொரு துணைமலை புவரிசூழ் ஞாலமேல வளர்ந்தோங்கும்
பனம லைக்குமோர் தலைமலை திசைதொறும் பசுந்தமிழ் மணநாறுந்
தென்ம லைக்கொரு வடமலை சிவபிரான திருமலைத் திரிகூடம். (௩௩)

வேறு.

ஆமையெழுத் தானுலகை யருள்செய்வார்க் கிடமாகி
மாமையெழுத் தூடாடா மறைநானகின் முதறபகிடந்த
வூமையெழுத் துருவாகு முயர்சயில மவ்வெழுத்தின்
சேமவெழுத் தொருமூன்றின வடிவமே திரிகூடம். (௩௪)

ஆடலொரு மூன்றாகி மூவுருவு மமைந்தாாக்குக்
கூடமொரு மூன்றாயுங் கூடமே யிருக்குமறைப்

பீடமொரு மூன்றாயும் பேரெழின்முத் தேவியர்க்கு
மாடமொரு மூன்றாயும் வயங்கியது திரிகூடம். (௩௫)

எக்குணமோ வெப்பொருளோ வெச்செயலோ வெனமறையு
மிக்குணரா வகையுணர்த்த யான்மாட்டேன் மெய்யடியா
ரக்குணமே யச்செயலே யப்பொருளே யானபிரான்
முக்குணமோ முச்செயலோ முப்பொருளோ திரிகூடம். (௩௬)

வேறு.

பொன்னின்மா மணியருவிப் பூமாலை கரதலமேந்தி
வன்னிசேர் கரத்தார்க்கு மணம்பூட்ட வருமிமையக்
கன்னிபோல் வதுகருணைக் காசினியா மடமகட்குச்
சென்னிபோல் வதுகனகத் திருமவுலி போல்வதால். (௩௭)

முந்தையார் நதிசூடி முத்தலைவே லையுமேந்தி
விந்தையார் கோடீர மதிவளைந்து விடையேறு
மெந்தைபோல் வதுகுலத்தி லுலகின்ற பெருமாட்டி
தந்தைபோல் வதுகருணைத் தாய்போல்வ துலகினுக்கும். (௩௮)

வேறு

பூமடந்தை தனமிசைந்து பாரிடந்து வானளந்து பொனனை மேவி
மாமணியி னிறம்படைத்து வானரம்புள் ளேறியலை வாரி மேவித்
தாமரைமா மலரிலஞ்சி தளிர்ப்பூத்துச் செழுந்திகிரி சங்க மேந்தி
காமமா யிரம்படைத்த மால்போலுந் திரிகூட ஞானக் குன்றம். (௩௯)

உந்திமிசை வந்துதடப் பாணியாற் குவலையங்க ளுவப்பி னீன்று
விந்தைசே ரம்புவனம்பலபடைத்துத் திசைமுகங்கண் மேவி வாணி
யிந்திரற்கு மிடர்நீக்கி யெண்கிரியின் வாகுமிகுந் திருந்த லாலே
முந்துபது மத்தயனை நிகர்காட்டுந் திரிகூட முருகார் குன்றம். (௪௦)

எத்தலமு மேகலிங்க முளதாகும் பஞ்சலிங்க மிசைப்பர் மேலு,
முத்தாகா சியிற்பதிட்டை கோடிலிங்கம் வடவருவி யுவரி மேய்ந்து,
மைத்துளிபெய் திரிகூடச் சிலையெலாஞ் சிவலிங்க வடிவமாகி, யத்
துணையுஞ் சிவமாகி லெத்துணையென் றெடுத்துரைப்போ மதன்சீ
ரம்மா. (௪௧)

திரிகூடத் திருமலையை வலஞ்செய்தார் தீராத வினைக டீர்ந்தார், திரிகூடத் திருமலையைத் திசைநோக்கிப் பணிந்தவருஞ் சிவத்தைச் சேர்ந்தார், திரிகூடத் திருமலையின் கீர்த்தனங்கள் கேட்டவருந் தேவ ராணுர், திரிகூடத் திருமலைசார்ந் திருப்பவர்கண் மகிமைதுதி செய்யற் பாறரோ. (௪௨)

வேறு

என்றிவை பகருங் காலை யிவ்வகை நானகிறு
நன்றிசேர் கதிகள் பெற்றார் நற்கதை நவில்வா யென்ன
வொன்றிய முனிவர் கேட்ப வுளமகிழ் சிறந்து சூதன்
குன்றினை வலஞ்செய் தான்சீர் முதற்கொண்டு கூறலுற்றான். (௪௩)

பொதியமே விமைய நீங்கிக் குறுமுனி போதுங் காலை
யெதிர்தொழான் றவமால் பூண்ட விந்திரத் துய்ம்ம னென்னு
மதிகுல நிருபன் றன்னை முனிந்துநின் மதத்தி னாலே
யதிர்குரான் மதமா வேழ மாகெனச் சாபஞ் செய்தான். (௪௪)

நின்வர வுணரா வென்னை நெறிகொலோ சபிப்ப தென்ன
மன்னவன் வணங்கிக் கூற மலயமா முனிவன் முக்கண்
முன்னவ னடியா ராகக் காணின முகந்துற வெழுந்து தாழ்ந்து
பொன்னடி வணங்கார் யார்க்கும் புகல்வதிச் சாபமென்றான். (௪௫)

முனிவர சரணஞ் சாப மோசனம் புரிவா யென்னத்
தனிதொழு மரசைக் கும்ப சம்பவ னோக்கி யெங்கோ
னனிவரைத் திரிகூ டத்தை நண்ணிநீ வலஞ்செய் காலம்
புனிதமுற் றிடுவை தென்கீழ்ப் புறத்தொரு தடத்தி லென்றான். (௪௬)

பாயிர மறைதேர் கும்பப் பண்ணவ னருளாற் பின்ன
ராயிரங் கரிக்கு வேந்தா யடற்கயேந் திரப்பேர் பெற்றுப்
போயது குணிப்பில காலம் புனம்பல சூழ்ந்து வேழ
மேயது தவத்தா லோர்நாள் வியன்றிரி கூடச் சாரல். (௪௭)

உலவுதென் றிசையிற் கொண்ட லுலாப்பிடி யெனப்போய் மேல்பாற்
குலவுவெள் ளருவிக் குன்றைக் கோட்டுமா வெனப்போ யாடிச்
சுலவிய தடபாற் சோலை முக்கனி சுவைத்துக் கீழ்பா
னிலவுவெண் கவள மென்று சென்றது பனைக்கை நீட்டி. (௪௮)

வேறு.

சோதி மால்வரை சூழ்ந்துதென குணதிசைச் சுனையின
மோது தண்புனல் பருகையி லொருகையை முதலை
காதி வெங்கய மிழுத்திடக் கயங்கரை யிழுபட
வாதி னாசலொத் தாயிரம யாண்டுபோர் மலைந்த (௪௯)

தால மீதில்வின் னுயர்புடார்ச சுனந்தனைச் சார்ந்து
கூல மேவிதின றமாசெய்குஞ் சரங்குறை திரையி
னூல மேயெனப் பொருவலி முதலையா லயர்ந்து
மூல மேயென வோலமிட் டதுதனி முதலை. (௫௦)

ஓல மென்றலு முயர்பெரும் புடார்ச்சுன புரத்தின்
மூல மொன்றதாய் மூவடி வெடுத்தருண முதல்வ
னீல விண்டுவா யுறையுநா ணேமியம் படையாற
கால வெங்கரா மடர்த்ததுநீள் கடகரி காத்தான. (௫௧)

முத்த லைக்கிரி வலம்வரப் பெறுமுது தவததான
மைதத லைக்கரி வடிவுபோய் வானவ வடிவாய்
மெய்தத லைப்பெருஞ் சுவர்ககநா டெய்தினன் வேந்த
னத்த லைக்கிரி மகிமைகேட் டவனகதி யகறைவாம். (௫௨)

வேறு.

பார்குட ரண்டம் வேர்வாய்ப் பகர்தரு தோறற நாணகி
னேரெழு பிறபபிற றெய்வ மீரேழு மகக ளொனபா
னீரின விலங்கு புள்ளு பப்பத்து நிலைநா லைந்தாங்
கூர்வன பதினொன் றாக யோனியெண பத்து நானகே. (௫௩)

இன்னவா மிலக்க மியோனி யெய்திய வுயிர்கட் கெல்லாம்
பன்னுபுண் ணியமே பாவம் பாவபுண ணிய முச் செய்கை
பொன்னகர் நிரையம் பூமி புவனமாப் பொசிககும் போக
முன்னது குறைவு மேறற முயன்றது பின்னு மாக. (௫௪)

தாங்கரும் பாவ மிககான் றருமமுஞ் சிறிது செய்தான்
பாங்குசெய் தருமபாவப் பயனுண்டு பாரை நீங்கி
யோங்குசீர்த் தரும போக முண்டனன் சுவர்க்க மேவி
யாங்கது தொலைவின் வானோ ரகற்றவந் தரத்து வீழ்வான். (௫௫)

விஞ்சையர் திரிகூ டச்சீர் விண்ணிடைப் புரியுங் கான
மஞ்செவி குளிர்ப்பக் கேட்டா னகன்றது தொடர்ந்த பாவ
மஞ்சன மறலி தூதர் வருமுனம் வந்து வானோர்
தஞ்செனு விமான மேற்றித் தமனிய வுலகஞ் சேர்த்தார். (௫௬)

வரைத்திரு நாமங் கேட்ட மகிமையாற் சுவர்க்க மேவித்
திரைக்கட லமுத மாந்தித் தேவரோ டிருந்தா னினனம்
பருப்பதச் சாரல் சார்ந்தான் றிசைநோக்கிப் பணிந்தான் செய்கை
சருக்கமே லரிக்கு நாதன் சாற்றிய கதையிற் காண்மின். (௫௭)

ஒன்றெனப் பொருந்தா வேறு பிரிந்திடா வுற்ப வத்தி
னென்றுமுட் புகுதா நீங்கா விறையரு ளான்மா மூன்றுந்
தொன்றுதொட டமைந்த சுத்த சொரூபமே வடிவென் றோர்ந்து
மன்றலந் திரிகூ டத்தி னுறையுமா மறைகண மூன்றும். (௫௮)

வெதிர்தரு தரள ராசி வெண்மையாற் கயிலைமானுங்
கதிர்மதி வலத்தாற் பொன்னன் மேருவே கடுக்குங் கண்டோர்
மதிவலி யிரும்பைத் தன்பால் வலித்தலாற் காந்த வெற்பாம்
புதியசீர்த் திரிகூ டத்தை நிகர்வதோர் பொருப்பு முண்டோ. (௫௯)

வம்பரும் பதும ராகம் வளர்வெயில் விரித்தலானும்
வெம்பரா மணியின் சோதி விரிதரு செக்க ரானு
மும்பரா னுகுத்த வேயி னொளிமணி நிலவி னானு
மெம்பிரான் றிரிகூ டத்துக் கிராப்பக லில்லை மாதோ. (௬௦)

சித்தராய் விஞ்சை யோராய்த் தேவராய்த் திகழ்வோ ரெல்லாம்
பத்தராய்த் தருவாய் மாவாய்ப் பறவையா யுறைவர் மேன்மேன்
முத்தராய்க் கதிகட் கெல்லா முதல்வராய் விடுவ ராகு
லத்தனார் திரிகூ டத்தி னதிசயம் விரிக்கற் பாற்றோ. (௬௧)

வேறு.

குவிப்பாக வுரைத்ததெனச் சூதனெடுத் துரைப்பமுனிக் குழாத்
தோ ரெல்லாம், புவிப்பாக மறைவேள்வி தருமுன்னே யெங்களுக்குன்
புராண வேள்வி, யவிப்பாக மெனவளித்தாய் திரிகூட வரைமகிமை
யமுத வாரி, செவிப்பாகம் பெறறுகாந்து தவிப்பாகுஞ் செனனவிடாய்
தீர்ந்தோ மென்றார். (௬௨)

ஆன்ருண்மை யுயிராகி யுயிர்க்கெல்லா முணர்வாகி யறிவுக் கெல்லாஞ்
சான்ருகி முப்பொருளுந தாஞகி வாஞகிச் சகங்கள் யாவு
மீன்ருனுக் கிடமாகுங் கயிலாயஞ சிவலோக மிரண்டென் பார்கரு
மூன்ருகுங் குறருலத தலைகிமை மொழிகவென மொழிவான் சூதன.()

ஐந்தாவது திரிகூடமலைச் சருக்கம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம ௨௪௩

## ஆருவது திருக்குற்ருலத் தலமகிமைச் சருக்கம்.

கூரேறு மழுப்படையார் தலங்கண்மகி தலத்தனந்த கோடியேனுஞ்
சீரேறு மூர்த்திதலந் தீர்த்தமெனு மூவகையாற் சிறந்த தான
மீரேழு தலமாகு மெந்தையார்க் கதிகதல மிவற்றி னுள்ளு
மோரேழு தலமதிக மிவையிலொரு தலமதிக முணர்த்தக கேண்மின்.()

வரமேவு திருவாரூர் காளத்தி யருணைதில்லை மதுரை காஞ்சி, புரமாதி பலதலததும் போந்துறைத லொவ்வொருவர் பொருட்டே யாகும், பரமான தனிமுதலவ னூழிதொறு முலகமெலாம் படைத்துங் காத்துந், திரமாக வரசிருக்கும் பரமரக சியததானந் திருக்குற்ருலம். (௨)

வேறு.

பூதல விலாசந் தன்னிற் புதுமைசேர் தலங்கள் யாவும்
பேதமாங் கறபந் தோறும பிரளயத் தொடுங்கித் தோனறு
மாதனு மழிவு மில்லா வநாதியே திருக்குற் ருலங்
காதலி னறிவு மிக்கீர் காரண முணர்த்தக் கேண்மின். (௩)

பொருந்திரைக் கடல்களேழும் புடைபடு தீவுந் தாவிப்
பெரும்புறக் கடலு மீணமிப் பிறங்கல்கால் சாயப் பாய்ந்து
வருந்திரண் மேரு வாதி வரைகளுந் திசையும் பாரு
மொருங்குற வொருக்கி மேல்கீ ழுலகெலாம் புகுந்து தாக்கி. (௪)

பரந்தெழு புவன மெல்லாம் படர்ந்தயே ருகாந்த வாரி
துரந்தெழு மண்ட மூலத் தங்கியின் சுடரான் மண்ட
வுரங்கெழு சண்ட வாயுக் கனலெலா மொடுங்கி வான
நிரந்தரித் துலோகா லோக நெடுவெளி யாய காலம். (௫)

ஆருநீர் கனலகா லண்ட மழிக்குநா ளழியா தாகிக
கூருமால் வரையும் யாறுங் குறிகமொண்டு திசைக டோறு
நேருறு குரோச மைந்தாய் நின்றது திருக்குற் றால
மேருவி லேநதிக் கங்கை மிலேந்தநம் பரனே போல. (சு)

அப்பெரும் புவன மெல்லா மழியுநா ளழியா தாகி
யிப்புரங் கிரியும் யாறு மிருந,தவா றெவ்வா றெனனின்
முப்புர மொடுங்குங் காலே மூவர்வீ டென்ன மூன்று
மொப்புற நினற தென்று மொருவன தருளான் மன்னோ. (எ)

அரவணி சடையா னெங்கு மமர்கினு மருநதேன் கங்கை
கரைபொரு திரிகூ டத்துக் கலையெலா நிரம்பா நிற்பன்
விரவுபே ருலக மெல்லாம் வெயில்விரித் தெழுந்த தேனு
மிரவிதன கிரணங் காந்தத் திசைதரு பொலிவு போல. (அ)

தருமமே கருதித் தானந் தவம்பல புரிந்தா ரேனுந்
திருவளர் திருக்குற் றாலச் சிவபிரான சனனி தானந்
துருவினர் பணிவார்க கனறித் தொலைந்திட லரிது பாவம்
பரிதிசன் னிதியி லன்றிப் பஞ்சினைச் சுடுமோ காந்தம். (கூ)

வேறு.

ஆல வாய்திருக் காளத்தி காசியண் ணாமலை திருவாரூர்
மேல மன்றகந் திருவிரா மீசசூரம விடுபஞைக் கவராகச்
சூல பாணியார் மற்றுள தலமெலாந் துணர்ததகைஞ் சினையாக
மூல மாகவே யுலகெலாந் தழைத்திட முளைத்தது குற்றாலம். (கo)

உடைய நாயகி திருமணக் குழுவின்மூ வுலகமு மொருங்கேறி
வடத னிப்புலந் தாழ்ந்துதெற குயர்ந்தநாள் வானவர் தொகைக்கெல்
கடமு னிப்பிரா னொருவனே நிலைபெறக் காசினிப் பெரும்பார [லாங்
மெடைத னக்கொரு தட்டெதிர் நின்றதா லிறைதிருக் குற்றாலம். (கக)

சங்க வீதிபொற் கந்தரந் திருமுகந் தமனியப் பெருங்கோயி
றுங்க வார்குழல் சண்பகா டவிபெருஞ் சொர்க்கமே திரிகூடம்
பொங்கு மாகட லுந்திபொன் மேகலை பொருந்துசித் திரகங்கை
நங்க ணாயகன் மருவுகுற் றாலமா ஞாலநா யகியார்க்கே. (கஉ)

மேவ ராவகி லாண்டமு மொடுக்கிமேல் விதித்தரு ளொருதேவன்
மூவ ராகவித் தலத்திடை முளைத்திட மூலமா நகராகி
யாவ ராகினு முணாதர வரியதா லிந்நகாப் பெரும்பானமை
தேவ ராசிய மென்பனோ பாமரா சியமென வுரைக்கேனோ. (கங)

வேத மாகிய குறும்பலா நீழலின் விரிஞ்சனமால் வடிவாகிப்
பூத நாயக னெனவரு சிருப்பவன புவனநா யகி காண
நாத மாகிய விண்முர சதிர்தர ஞானசித் திரமன்றிற்
காத லாய்த்திரு நடம்புரி வதுதல மகிமையாற களித்தனரே. (கச)

இந்து வானிடை யிழிந்து நீழ் வழிக்கென வெழில்வரைத் திரிகூடம
வந்து பாய்தரு திரையரு வித்துறை வரதனமஞ் சனசாலை
நந்து வீதிசூழ் சினகரந் திருவுரு நண்ணுபா தலமாதி
யைந்து வாய்தனு மைம்பொறி வடிவமா மாடலம்பர ஞர்க்கே. (கரு)

ஆர்த்த மூலமு மீறுமில் லாதவ னண்டமூ லமுந்தேறுக
கீர்த்தி மூலமே கிளாக்கென னனகர்க் கிரித்தலை யலைமோதுந்
தீர்த்த மூலமுந் தலத்தின்மூ லமுமுயா சிவலிங்க வடிவான
மூர்த்தி மூலமு முணர்வரோ வுலகொரு மூனறையு முணர்ந்தாரும்.(கசு)

மனித ரோபெருந் தேவரோ வளர்மது கங்கையோ வானோரே
புனிதர் சண்பகச் சோலையோ கற்பகப் பொதும்பரோ புவிபோற்று
மினிய குன்றமோ சிவலிங்க வடிவமோ வென்றுபே தாபேதந்
தனையுணர்த்துவ தெம்மனோர்க ளெளியதோ சதுர்மறைக்கரிதாமேல். ()

வேறு.

புந்தியுற நினைந்தார்க்கே யருணகிரி தரிசனைக்கே புலியூர் பேறு நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு நல்கும் காசி யெந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு மிறந்தார்க்கு மெதிர்கண்டார்க் குஞ், சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந் திருக்குற றாலம். (கஅ)

பிறந்தவர்க்கு முத்திதருஞ் சிவமுரசஞ் செவிகேட்கப் பெறலாற காட்சி, சிறந்தவர்க்கு முத்திதரு மெவ்வடிவுந் தெய்வவடி வாதலாலே, யிறந்தவர்க்கு முத்திதரு மிறைதிருமந் திரஞ் செவியி லிசைக்கு மாற்றாற், லறந்தழைக்குங் குறறாலமறிந்து நினைப் பவாக்குமுத்தி யரிதோ வம்மா. (ககூ)

எத்தலத்தி லெவர்புரிந்த பாதகமு மித்தலத்தி லெய்தத் தீருங்
கைத்தலத்தின் மழுவுடையார் குற்றாலந் தனிற்புரிந்த கடிய பாவ
மத்தலநால் வகையிலொரு மித்தலமவி டகன்றே லவனி யாதி
முத்தலத்திற் சென்றாலு முடியாது முடியாது முடியா தன்றே. (உ0)

வன்னிதா னம்புகுமுன் மானதத்தா னந்தோய மாட்டா ரேனுஞ்
சென்னிதானந் தொடுத்துத்த திகழுமிரு வகைத்தானந் தேவ தேவன்
சன்னிதா னமுனியண்டு சதுட்டையத்தா லகன்றோடுஞ் சகல பாவ
மெந்நிதா னமுநிதியும் பெற்றாலுங் குற்றால மிகவார் மேலோர். (உ௧)

உம்மையுறு பாதகங்கள் பஞ்சுபோற் பறக்குமந்த வூதை யாலே
யம்மைதரு மலச்சேறு கழுநீராகக் கழுவும்வட வருவித் தீர்த்த
மிம்மைவினை யிருமோட்டுந் திரிகூடப் பரஞ்சுடரை யிறைஞ்சுவார்க்கு
மும்மையுந் தீர்ந்தந்தியத்தி லருட்டருஞ் சனனிதியழியா முத்திநல்கும்.()

மந்தமா ருதமீர வாளோச்சி வீசுநெடு வரைத்தண் சாரல்
சிந்துநீர் வடவருவி சிலைபூட்டி யம்பிறைகளுஞ் செழுந்தேன் பில்கும்
பைந்தளிர்ச்சண் பகச்சோலை பாரதண்டங் கொடுபுடைக்கும் படர்
திக்கெல்லாம், மிந்தநக ருறைவார்மேல் வந்தவினை தரித்துநிற்ப தெந்த
வாறே. (உ௩)

வேதாளம் பாடவொரு வெளியிலா டியபெருமான் வேதம் பாடப்
பாதாள வாய்தலுறை பணியரசுங் குறுமுனியும் பணிசெய் தேத்த
மாதாள முமைபயிற்ற வரிபிரமர் முடிதாழ்ப்ப வானோர் போற்றி
யாதாளி புறநடிக்குஞ் சிறபொதுவுஞ் சிறபரையு மதனபாலன்றே.(உ௪)

இந்திரனூர்க் காதாரங் கருவூர்க்கு நமனூர்க்கு மேட்டாத் தூரஞ்
சந்திரசூ ரியர்முதலோர் பதங்களுக்குத் துருவபதந் தனிவேற் கந்தர்
கந்தமா தனமாதிக் கணபதிக்குக் கயிலாயங் கயிலை யார்க்குச்
சிந்தைசேர் சிவலோகந் தெளிந்தார்க்குப் பரமபதந் திருக்குற்றாலம்(உ௫)

புவலோகத் திருப்பவர்கள் சுவலோகம் விரும்புவர்மேற் போகம்
வேட்டுச், சுவலோகத் திருப்பவர்சத் தியலோகம் விழைந்திருப்பர்
தொலையா வேதன், றவலோகத் திருப்பவர்கண் மாலுலகம் விரும்புவரித்
தனைக்கு மேலாஞ், சிவலோகத் திருப்பவருந் திரிகூடத் திருக்கும்வாஞ்
சிந்திப் பாரே.
(உ௬)

கயிலாயத் தினிலுறையுஞ் சீகண்ட பரமனுயர் கயிலை நீங்கி
மயிலாய சாயன்மட மங்கைகுழல் வாய்மொழியை மணந்து மேருச்
சயிலாதி பொதியில்வரைத தலங்களழி யினுமழியாச் சங்கக் கோயி
லெயிலாக விருப்பதனாற் பூலோக கயிலாய மிதுவே யனறே. (உஎ)

சிவமதுகங் கையுங்கடவுட் செண்பகத்த டாகமுமேற் சித்தர் வானோர், தவமுனிவ ருவநதாடும வடவருவித் திரிகூடச் சயிலச் சார்பு, நவநீதியுந திரைகொழிததுக கதிகொடுக்குஞ் சித்திரமா நதியுங் காண் பான், புவனமிசை பிறக்கவின்னந தவமபுரிவர் பொனனுலகிற் புகுந்து ளோரும். (உஅ)

பொங்குமா கடலருவிப புணணியதீர்த தமுங்கடவுட் பூட்டா வில்லுஞ், சங்கவீ தியுந்தாணு மாலயதொொட் டிலுமாதி சத்தியான, நங்கைபீ டமும்வேதக குறும்பலவு நனனகரு நயபபா லன்றே, வெங் கணு யகர்பிரமா வாகிநெடு மாலாகி யிருந்தா ரென்றும் (உகூ)

பிதுர்கண்டந் தீர்த்தபுரஞ் சிவததுரோ கந்தீர்த்த பெருமை மூதூர்
மனுவெண்டா னுயிர்மீட்ட புரம்பவர்க்க மீட்டபுரம் வசந்தப் பேரூர்
முதுகங்கை வந்தபுரஞ் செண்பகா ரணியபுர முத்தி வேலி
நதிமுன்றின மாநகரந் திருநகர நன்னகர ஞானப் பாக்கம். (௩0)

வேடன்வலஞ் செய்தபுரம வேழம்பூ சித்தபுரம் வேத சத்தி
பீடபுரஞ் சிவமுகுந்த பிரமபுர முனிக்குருகும் பேரூர் தேவ
கூடபுரந திரிகூட புரமபுடார்ச் சுனபுரம்பொற குறும்ப லாவி
சேடபுர மெனவிருபத தொருநாமம் பெறறபதி திருக்குற்றாலம். (௩க)

வற்றாத வடவருவி படிந்துசங்க வீதிதனில் வலங்கொண் டேகிப்
பறறாத பிறைமவுலிப பரமனையுந் தேவியையும் பணிந்து போறறிச்
சறறோர்க ளுடன்கூடிக கண்ணுதல்சீர் பாடியொரு கடிகைப் போது
குற்றாலத் திருந்தவர்கள் கயிலாயத் திருப்பர்கற்ப கோடி காலம் (௩உ)

பாவரா கிலுங்கொலைசெய் பழையரா கிலும்வேதப் பலவி னீழன்
மூவராய் முளைத்தபிரான் குறறால மென்றொருகான் மொழிவ ராகி
லேவரா கிலும்புவன வேந்தரா யுலகாள்வ ரிருகாற் சொல்வார்
தேவராய் வீற்றிருப்பா மூன்றுகா லுமெடுத்துரைக்கிற் சிவமேயாவர். (௩௩)

குற்றால மென்றொருக்கா லினைப்பவர்களுடைய பாவமொரு கோடி தீரும், குற்றால மென்றொருக்கா லுரைப்பவர்களுக்குப் புண்ணியங்கள் கோடி சேரும், குற்றாலந் தனிலிருந்து செய்யுமொரு தவமனந்த கோடி யாகும், குற்றாலங் கண்டுதொழுக கூடினாக்கே பரமபதங் கூடு மாதோ. (௩௪)

வேறு

முத்தராய் விடுத லாலே முக்கண்ணா திருக்குற் றாலம்
பத்தராய் மேவு வார்க்குப் பரிசன வேதியாகு
மித்தரா தலத்திற் காண்போ ரியாவரு முயர்சங் கற்ப
சித்தராய் விடுத லாலே தெரிசன வேதி யாமால். (௩௫)

ஓரிடைப் பன்னீ ராண்டு ணுறக்கமற் றிருந்தான் பேறு
சீருடைத் திரிகூ டத்திற சிவநிசி யொனறே நல்கும்
வாரிசூழ் நிலததிற கோடி வளர்சிவ நிசியா லெய்தும்
பேரியற் பேறு மீங்கோர் பின்னுவாத் திங்க ணல்கும். (௩௬)

ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண் ணாடி
யோதுவார்க குணவு தண்ணீ ருறுபந்தா மடநத டாகங்
கோதிலா வுரிஞசி சுண்ணங் கொலையுயிர் விடுதத லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணேய மருந்துநன மகப்பால் சோறு. (௩௭)

அறுசமை யத்தோர்க குணடி யழிந்தோரை நிறுத்த லட்டுண்
பிறாறங் காத்த லையம் பெண்போக மகப்பே றுய்த்த
னறியதின விலங்கூண் வண்ணா னவிதன சிறைமசோ றுதி
மறுதலத் தறமெண் ணனகு மனையறத் திவ்வூர் நலகும். (௩௮)

சிலபல தலத்தின் மாதப் பட்டினி விரதஞ் செய்வோர்
பலனெலாந் திரிகூ டததிற பகலுண வொழித்தார்க் கெய்துஞ்
சமைறப் பிறவூர் மேவிச் சாந்திரா யணஞ்செய் தோர்க
ணலமொரு நிசியூண் விட்டுநன னக ருறைந்தார்க் கெய்தும். (௩௯)

ஒருபொழு தருந்தி யோராண் டொருங்குநோற றிருந்தார் பேறு
மிருபொழு தருந்தி யோர்நா ளித்தலத திருந்தாரக் கெய்தும்
பருவமொன் றயலூர் நோறகும் பலபல விரதப் பேறு
தருமொரு சோம வாரந் தன்னிலித் தலத்தின் மாதோ (௪௦)

காமர்பூங் கொடியார் மோகங் கடிந்துடை காவி சாத்தி
மாமனத் துறவு பூண்டு மறுதலத் திருந்தார் பேறு
தேமலர்ச் சயன மேவித் தெரிவைய ருடனே யிவ்வூர்ப்
பூமனை வாழ்க்கை யெய்தும் புண்ணியர்க் கெய்து மாதோ. (சக)

ஐவகைக் கனலி னாப்பணைம்புல னடக்கி யோராண்
டெய்வகைத் தவங்க ளாற்றி யொருதலத் திருந்தார் பேறு
கைவரை மழுவ லாளன கருணையஞ் செழுத்தை யுன்னித்
தெய்வமாப் பலவி னீழற சிறுபொழு திருந்தார்க் கெய்தும். (சஉ)

அடைதர வரிய கானு மருவரைப் புறமு நாடும்
புடைபடப் பல்யாண் டோடிப் பூவலம் வருவார் பேறு
சடைமிசை மதியஞ் சூடுஞ் சண்பக வனத்தி லெம்மை
யுடையவன் சங்க வீதி யொருவலம் வருவார்க் கெய்தும். (சா)

பூதானம் பரிதேர் யானை பொன்வெள்ளி விளைவு கன்னி
காதானந் தயில மெள்ளுக் கலைபணி யடிமை யில்லங்
கோதான மன்ன தானங் கூறுமெண் ணிருதா னத்தி
னே தான பலனு மன்ன மிட்டுண்பார்க் கருளு மிவ்வூர். (சச)

சொரிதழ லங்கிட் டோமஞ் சோதிசேர் சோதிட் டோமம்
புரிதரு மிராச சூயம் பொங்கழற் சோம யாகம்
பரிமக முதல வேள்வி பலதலத் தியற்றும் பேறு
பெருகுறித் தலத்து மாதுர் பிறர்யாகஞ் செய்வோர்க்கெய்தும். (சரு)

எண்பல வனங்க டோறு மிலைதின் றுங் கனிகாய் தின்று
முண்பன வொழிந்துந் தீமே லூசிமே லொருகான் மேலா
வண்பல கால மெல்லாம் வருந்தினர் தவஞ்செய் பேறு
செண்பக வனத்தி லோர்நாட் செயுந்தல வாச நல்கும். (சசு)

பத்தராய்ப் பணிவார்க் கேனும் பலதவம் புரிவார்க் கேனு
முத்தர வயன மெல்லா மொருதலந் தருமே பிவ்வூர்ச்
சித்திரை விழவே நலகுந் தெக்கிணா யனப்பே றெல்லா
மத்தர்தந் திருக்குற் றாலத் தைப்பசி விழவே நல்கும். (சஎ)

அத்தனங் கிருந்து நீங்கா தகிலமு மியறற லாலே
யெத்தலம வதிந்தார் பேறு மெத்தவம் புரிந்தார் பேறு
முத்தர கங்கை யாதி யுயர்நதி படிந்தார பேறுஞ
சித்திர நதிசூழ் சைவத தெய்வமாத தலமே நலகும். (சஅ)

திருவளர் திருககுற றாலந் திரிகூட மெனஹு நாம
மருவியங் கிரிககுண் டாகி யருட்பெருந் தலததுக காகி
மருவுபே ருலக மீன்ற வல்லிபா லெம்மை யாரு
மொருவனுக் குரிய தென்று வுணாத்துதற் கெளிய தாமே. (சகூ)

வேறு.

என்னனு மிநநகர்க் கிசையு நாமங்கள்
முன்னர்மு வேழென முறையிற கூறினே
யன்னவை விரித்துரைத தருளு வாயெனச்
சொன்னமா முனிவர்க்குச் சூதன் சொல்லுவான். (ருo)

தொன்மையாந் தீவினைத் தொடர்ச்சி குவ்வதாந்
தன்மையாப் போழ்ந்தெரி தழனுத் தாலமா
நன்மையா ரியந்தமிழ் நாமம் பெற்றது
சென்மநோ யறுப்பது திருக்குற் றாலமே. (ருக)

கடாக்கயம் பூசைசெய் கடவுள் வாழ்பதி
நடாத்துசீர் நற்கதி யெவர்க்கு நல்கலால்
விடாப்பெரு நன்னகர் நாம மேவுமாற்
புடார்ச்சுன புரத்தியல் புகலக கேண்மினோ. (ருஉ)

வேறு

பராசர னருளாற் கந்தி பரிமள கந்தி யாகித்
தராதலம் புரக்கு நீதிச் சந்தனு ராசன் வேட்ப
நராதிப னரசுக்கேற்ப நன்மக வீன்று ளனனே
னராகமுற் றொருங்கு வேட்டா னம்பியம் பாவி தம்மை. (ருந)

பேட்டன நடையார் மக்கட் பெறுதன்முன் றலைவன் வீந்தான்
வீட்டும னரசு வேண்டான் வியாதனை வரித்தாள் கந்தி
கோட்டமின் முனிபா லன்னோர் குணமுறுப் புணர்ச்சி யாலே
நாட்டமி லரசைப் பாண்டு வேந்தனை நல்கி னாரே. (ருச)

நோக்கிலான் மனைவி தாருத தழுவி நூற றுவரைத் தநதா
ளாக்கமாம் பாண்டு பாரி யைவருக கைவ ரீன்ருண்
மாக்குலத் துணை வராயு மகிதலம் புரககு மாசை
தாக்கிநூற் றுவரோ டைவர் தங்களிற் பகைவ ராளுர். (ருரு)

வசுமக ளுகி நந்தன் மனைபுகூஉப் புள்ளுஞ் சோகும்
விசைபெறு சகடு மாய்தது வெறிமரு திடநது வேழ
மசைவுற மல்லர் வீழக கஞ்சனை யடாதத கண்ண
னிசைவிளுற பாண்டு மைந்த ரிகலினு மிளையா ரென று. (ருசு)

நூற்றுவர் சூதால வென்று நுவலருங் கானி லேவச்
சாற்றுபன் னீராண் டைவர் தணந்துபின வளநா டெய்தப்
போற்றலன் புயங்க கேது பொருநதில ளுத லாலே
யாற்றுதல சமரென் றெண்ணி யணணல்பா சுபத முன்னி. (ருஎ)

செவ்வளர் திசைநா லங்கி சேணெழு சுடரோன் ருக
வைவகைக் கனலி னுப்ப ணடியொன்றின் விரலொன ருலே
குவ்விடை யூன்றி யோர்தாள் குறங்கிடைச் சேர்த்திப் பார்த்த
னவ்விழி துண்டந் தாக்கி யதிலெழு தீப நோக்கி. (ருஅ)

பூதமைம் பொறியி லாகப பொறிபுலன் கரணத தாகச்
சேதனத் தவையாய் மாரன் றேவாகோ னிடருமா றறி
யாதவம் பனிகார் நீக்திச் சிதலரித் தாகம புறருய்ப்
பாதவ முளைப்ப முக்கட் பரமனைப பரவி நினருன. (ருகா)

மிக்கவன் றவஞ்சோ தீப்பான் வேட்டுவக கோல மாகித
திக்கெலா மன்னங் கோலந் தொடருமோர் தேவ தேவர்
மைக்குழ லன்னம் பின்னே தொடரமற் றெருகோ லத்தைப்
புக்குறத் தொடர்வார் போலப் புகுந்தனர் பொருவில் லேந்தி. (சுo)

வரிசிலைப் பரம வேடன் வலியஞ்சிப் புகல்போற் பன்றி
குரிசிலை யடுங்கா லெம்மான் கொலைசெய்த துணரான் பார்த்த
னொருசிலை யுயிர்பெற றென்ன வுருததன னிருவர் தாமும்
பொருசிலை குனிததுக் கார்போற பொழிந்தன ரம்பு மாரி. (சுக)

அல்லினூர் களத்து வேட னருந்தவ வேடனா னானோன்
கல்லினான மல்லி னாற்கை கலந்தனர் வீழ்ந்தார் மேல்வீழ
புல்லினா ரணங்கு பார்த்தன் புறங்கண்டு நகைத்தா னன்னோன்
வில்லினாற் புடைப்ப நாதன் விண்ணிடை மறைந்தா னன்றே. (௬௨)

தேவியுந் தானு மாகச் சேணிடை மறைந்த தேவைப்
பாவியே னுணர்ந்தே னல்லேன் பழுதுகொல் விளைத்தே னென்னக்
கூவியே தொழுதான் முக்கட் குழகனே மழுவ லானே
யாவியே யுமையோர் பாகா வபயமென் றழைத்துங் காணான். (௬௩)

தீர்த்தனை யருச்சித் தேத்தித் திருவடி காண்பே னென்ன
வார்த்தமாந் தேவு மேவு மவ்வுளிச் சென்றான் கொன்றை
சார்த்திய மவுலி யானைச் சம்புடத் துடனுங் காணான்
வேர்த்துடல் சோர்ந்தா னாவி விடுப்பனென் றெடுக்கு மெல்லை. (௬௪)

சேணுயர் விடைமேல் வந்து சம்புடந் திரிகூ டத்திற்
காணுக கடவுட் பஞ்ச தெரிசனத் தென்று காட்டித்
தாணுநா யகர்தாம் பாசு பதங்கொடுத் தருளிப் போந்தார்
கோணிலா மனத்தன் போற்றிக் குறும்பலாச் சாரல் சேர்ந்தான். (௬௫)

கோதிலாத் திருக்குற் றாலங் குறுகினன் பணிந்தான் சங்க
வீதிவாய்ச் சென்றான் முன்செய் வியன்குருத் துரோகந் தீயச்
சோதிவெண் கதிர்பூ சித்த சோமசே கரனைக் கண்டா
னேதுபங் குனியாந் திங்க ளுத்திரத் தருச்சித் தானே. (௬௬)

மேற்றிசை முகமா மீசன் விநாயகன் சிகரங் குன்றந்
தேற்றுதே னாறே டைந்து தெரிசனம் பரிவாற் பெற்றுத்
தோற்றிய வைந்தோ டாறுஞ் சோதிசம் புடமுங் கண்டா
னாற்றற வெடுத்தானக மாவிகண் டெடுத்தா னென்ன. (௬௭)

ஆதிநாட் சம்பு டங்கண் டருச்சுன னெடுத்த வாற்றாற்
பூதிசா தனத்தோர் போற்றும் புடார்ச்சுன புரமா மிவ்வூர்
மீதுள நாமச் செய்கை விளம்புறு சருக்கந் தோறுங்
காதைகள் விரிக்குந் தெய்வக் காரண வகையிற் காண்மின். (௬௮)



குற்றுலம் நீர்விழ்ச்சி.

பொருவருந் திரிகூ டத்துப் புடார்ச்சுன புரம்போ லெங்கு
மொருதலம புவனத் தில்லை யும்பர்வா னகத்து மாங்கே
பெருகுமித தலத்தை நீங்கிப் பிறதலம் புகுவா ரில்லின்
றிருவிளக் கிருக்க வூரிற் சென்றுதீக் குழல்வார் மன்னே. (௬௯)

பாயிர மறைக ளாலும் பகரரி தான சங்கக்
கோயிலுந் தலமுந் தெய்வக குழாங்களின பெருக்கு நானோர்
வாயினா லுரைக்கற் பாற்றோ மகிதலந் தாங்குஞ் சேட
னாயிர நாவி னாலு மசைக்கினு மசையா தென்றான. (௭௦)

வேறு

தில்லையிலுஞ் சேதுவிலுங் காசியிலும் வாசிபெறுந் திருக்குற் றாலஞ், சொல்லையிலு நாவூறுங் கேட்கையிலுஞ் செவிதிறக்குந் துறக்கம் போலு, மெல்லையினில் வளர்தீர்த்த மகிமைகூ றெனமுனிவ ரிளம்பூங் கன்னற், கொல்லையினின் மேயந்தசெழுங் கனறுகள்போற சிந்தையவர் கொண்டார் மன்னோ. (௭௧)

கனிமூல சாதமெனு மமுதநுகர் மாதவத்தோர் கருதிக் கேட்ப
முனிமூல நதிமூல முரைப்பதரி துரைத்தாலு முக்கண் ஞானத்
தனிமூலப் பொருளிருக்குஞ் சாரல்சூழ் திரிகூடச் சயிலக் கங்கை
நனிமூல முரைப்பதரி தவனருளா லுரைப்பனென நவில்வான் சூதன்.()

ஆறாவது திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௧௫.

---

## ஏழாவது வடவருவிச் சருக்கம்.

பரையிடத்தி லிருந்துபுடார்ச் சுனபுரத்தி லுலகமெலாம் படைக் குங் கால, முரையிடத்து முணர்விடத்துங் கடந்தானை யுருத்திரமா கணத்தோ ரெல்லாந், தரையிடத்தி லுவந்தாட்டப் புனல்வேண்டிப் பரவுதலுந் தனிமுக் கோட்டு, வரையிடத்தி லவனருளால் வருமூல தீர்த்தம்வட வருவித் தீர்த்தம். (௧)

கடலேழு நதியேழுந் தோன்றுமுன் வரையிலெழு கடலாய்த் தோன்றத், தடமேவு நதிமகிமை பாடியுருத்திரகணத்துத் தலைவராடி,

யுடனமேவு நந்திகணத் தவராடிச் சிவகணத்தா ருவப்பி னோடி
யடலேறுந் திரிகூடப் பெருமானை யுவந்தாட்டி யருள்பெற் றாரால். (௨)

குடிலைதா மேவிவரு மாயைகா ரணமாகக் குளிர்வா னோதி
நெடியபே ருலகனைத்து மபடைப்பதற்குக கமண்டலநீர் நிகராய் முக்க
ணடிகளா டலுககுரிமை யாதலாற் றிரிகூட வசலக் கங்கை
சடிலமேற் கங்கையினு னூறுமடங் கதிகமெனத் தக்க தாமால். (௩)

பவமதுகங் கையகலாச் சகரருய்யப் பகிரதனாற் பண்டு தோன்
றுங், தவமதுகங் கையுஞ்சுருதி விரிகூடத் திரிகூடச் சயில மேவி
நவமதுகங் கையிற்சொரிந்து நாதனைப்பூ சனைபுரிந்து நவைக டீர்ந்த
சிவமதுகங் கையுநதனகோர் துறையாக வுடையதுசித் திரப்பூங்
கங்கை. (௪)

மவுனநெறித் தாபதர்கண் மாறாது தவம்வேள்வி வளர்ப்ப தாலே
கவனவெறித் தானவராற் பிரளயத்தா லழியாமற் கற்பந் தோறுஞ்
சிவனயன்மா லானபிரான் றிருவருளால வரைகாத்துத் தேவி வாலை
யுவனைதிரி புரையாவா ளினிதுறைசன் பகதடமோர் புறத்த தா
மால. (௫)

கங்கைநரு மதையமுனை சிந்துகோ தாவரிகா வேரி யாதி. மங்கலமா
நதிகளெலாம் வறறியகா லங்களினும் வற்றா தாகிச், சங்கமறு
குடையபிரான் றிருவருளாற புதுவாரி சயில மீதிற், பொங்கி
யெழு மாதலினாற் பொங்குமா கடற்றுறையும் பொருந்து மோர்
பால். (௬)

தடமாகு நதியாகுங் கடலாகும் வரையருவி தானே யாகு
மிடமாகுஞ் சேய்ததாகு மெத்தலத்தும் வளர்தீர்த்த மிமைய மீன்ற
மடமாதி னிடத்தார்க்கு வமைாகி யணித்தாகி வானோ ராட்டுங்
கடமார்மஞ் சனமபோலுந் திரிகூட வடவருவிக் கடவுட் டீர்த்தம் (௭)

கூவறட மொருகோடி சொடுத்தபலன் கொடுக்குமொரு குவளை வாவி
வாவிசுனை யொருகோடி வழங்குபல னொருநதியே வழங்கா நிற்குந்
தாவுநதி யொருகோடி தருபலமோர் வரையருவி தானே நல்கு
மேவருவி யொருகோடி யுதவுபலன் வடவருவி விளைக்கு மாதோ. (௮)

திரிகூடந் தொறும்பாயு நதிக்குயர்ந்த தூதரவா கினியே யென்று
விரிகூட விரிததுமறைச் சுருதிமிரு திகள்யாவும் விளம்பு மாறு
லரிகூட மயன்கூடஞ் சிவகூட மெனமுனிவ ரமர ரார்க்குந்
திரிகூட வரைபாயும் வடவருவி மகிமைதுதி செய்யற் பாற்றே. (௯)

பாவமொடு புண்ணியத்தின் வகைபிரிக்க மாட்டாவாம் பலவாந் தீர்த்தம், பூவையுங்கிள் ளையும்பாலின் புனலபிரிகக மாட்டாமை போல மேலாந், தூவியனம் பிரிப்பதுபோற் சுகிர்தமெனும் பால்பிரித்துத் துலங்கக் காட்டித், தீவினையைக கழநீராப் பிரித்தெறியுந் திரிகூடத் தெய்வக் கங்கை. (௧0)

மேலேறிச் சுவர்க்கபதம் புகுவார்க்கும் பிரமபத மேவு வார்க்கு
மாலேறு வைகுந்தம் பரமபதஞ் சேர்வார்க்கும் வரம்பில் காலங்
காலேறிச் செலவரிய பதந்தோறுஞ் செலுததுதலாற கதிகட் கெல்லா
நூலேணி நிறுத்தியதாந் திரிகூட வடவருவி நுவலுங் காலே. (௧௧)

சத்தரா கினுங்கொலையார் புவிமீதிற பிறந்துபா தகங்க டீர்ப்ப
சித்தாணி தனிறபிறந்தார் பாவமெலாங் கங்கைதனி லெய்திந் தீர்ப்பா
ருத்தரகங் காநதியின் பாதகமு மிதுநீக்க வுரிய தானாற்
சித்திரகங் காநதியை யொத்ததொரு நதியுளதோ செகங்கண் மூன்றில்.

வேறு.

மொழிபடர் கலைநூல் வல்லீர் முழுத்தபா தகங்க ளெல்லாஞ்
சுழிபடர் கழுநீ ராகத் தொலைத்திடுந் திரிகூ டத்திற்
செழிபடர் நதிக்கு நாமந் தெய்வமாக் கதைகள் கூறி
லொழிபடா வனந்த மாகு மவைபிலொன் றுணர்த்தக் கேண்மின். (௧௩)

கணத்தினு மோரூர் வைகான் கடிநகர் பதியொன் றில்லான்
பணத்தர வல்கு லாரைப் பாவைபோற் பார்ப்ப தல்லான்
மணபபதில் விரகில் லாதான் வறுமையாற் சிறுமை பூண்ட
குணத்தினன் சிகைநூன் முஞ்சிக் குறியினன் மறையோ னேகன். (௧௪)

பந்தியாம் பதிதோ றேற்றும் பசிக்குண விலாது தேம்பிக்
கந்தையே துகிலாச் சுற்றிப் புற்கயிற் றரைஞாண் பூண்டு
சிந்தைவேட் டதற்கே மாந்து திரிந்தனன் மெலிவா னந்தோ
முந்தையே தவஞ்செய் யாதா ரிம்மையின் முயன்று முண்டோ. (௧௫)

கடுங்கதிர் வேனிற் காலங் கையினுன் மெய்யைப் போர்த்தான்
குடங்கையுங் குளிர்கா லத்துக குறங்கினிற் புதைத்தான் வாடை
யடும்பனிச் சிசிர கால மருங்குளிக் காறரு ணகி
நடுங்கின னெடுங்கி யாங்கோர் நம்பரா லயத்துட சென்றான். (கசு)

தாலமே லடிச்சூ டஞ்சித தழலிடைக் குதித்தான் போல
வாலும்வெங் குளிரா லஞ்சி யாலயத்திலிங்கஞ் சாத்துஞ்
சேலையைக் கவர்ந்து போர்த்தான பாதகச் செந்தீ யந்தக்
காலையில் வளைப்ப மேனி கருகிக்கன் மாட னானன். (கஎ)

அற்றைநாள் வரலா றீச னுலயக் களவா லென்று
பிற்றைநா ளுணர்ந்தான் சோரம் பிறரிடைப் புரிந்தார்க் கெல்லாம்
பற்றுவ தொன்றே பாவம் பரனிடைப் புரிந்த வாற்று
லுற்றதே சிவத்து ரோக மொன்றினுக் கிரண்டா யந்தோ. (கஅ)

திருந்திழை வாம பாகத் தேவினு லன்றி யிந்தப்
பொருந்துபா தகங்க ளியாண்டும் போக்கரி தென்று தேறி
யிருந்தொரு தலததே முகக ணிறைவனை தியானித் தேத்தி
வருநதின னிரங்கு காலை வள்ளலா ரிரங்கி யாங்கு. (கசு)

வானமே லெழுந்த வாக்கு வடபுலந் தொடுத்துத் தென்பா
லானதீர்த தங்க ளாடி னகலுநின் பாவ மாங்கோர்
ஞானமார் நதியி லென்று நவிற்றலுங் கவற்சி தீர்ந்து
கானமார் பொழில்சூழ் சிந்து கங்கைகா ளிந்தி யாடி. (௨௦)

நன்னரு மதையே கோதா வரிநறுங் கண்ண வேணி
பொன்னியே வையை சேது பொருனைமற் றுளவாந் தீர்த்தங்
கன்னியந் துறையு மூழ்கிக் கனவரை வலங்கொண் டேகிச்
சென்னியின மதியம் பூண்டார் சிவகிரி கூடஞ் சார்ந்தான். (௨க)

கன்னியங் கொன்றை வேய்ந்தார் கமழ்திரி கூடச் சாரற்
புண்ணிய நதியி லாடும் போதினின் மறையோன் செய்த
திண்ணிய பாவ மெல்லாந் தீர்ந்துடன் மாசு நீங்கி
விண்ணிருன் கிழியத தோன்றும் விரிசுட ரொளிபோ லானன். (௨௨)

அருவியந் திரிகூ டத்தி லந்நதி படிந்து பாவ
மொருவினன் வறுமை நோயு மொழிந்தனன் மறையோன் வாழ்வும்
பெருகொளி வடிவும பெற்றன பெற்றவாச சரிபத தாலே
திருநதி தனக்கு நாமஞ் சித்திர நதியா யிற்றால். (உங)

வேறு.

கங்கைபிர யாகைவட சிந்துகோ தாவரிகா வேரி வாணி
துங்கநரு மதையமுனை கண்ணை நவு தமைசரயு சோணை யாதி
யெங்குமுள நதிகளும்புண் ணியநதிசித் திரநதியென் றிதனபால் வந்து
தங்கியுவந் தாடுமொரு பாகமதி மாகமதி தனனின் மாதோ. (உச)

முற்காட்டும் பலதலத்து மூன்றரைக்கோ டியதீர்த்த மூழ்கும் பேறுங்
கற்காட்டி யெறிதிரையின் கவண்காட்டிப் பாவமெலாங் காகம் போலப்
பிற்காட்டி யிரிந்தோடப் பிறவியெனும் பகையோடப் பெரிதாந் தெய்வ
விற்காட்டுந் திரிகூட வடவருவி நல்குமென விளம்பும் வேதம். (உரு)

பூநாறுங் கற்பகத்தின் போதாடிச் சண்பகத்தின் பூந்தா தாடி
வானாறு தலைமடுத்து மதிசூடுந் திரிகூட வரையெம் மானைக்
கானாறு மலர்சொரிந்து கங்கைபூ சித்தமது கங்கை யாறுந்
தேனாறு தனிற்படிந்தார் சென்றொருகா லமும்படியார் சென்ன வாரி.

வேறு

வாவிகட் கதிகங் கூடல் குடந்தைவண் புலியூர் வாவி
யோவிலா நதியிற் கங்கை யுறுதிரி வேணி சங்கந
தாவுமுந் நீரிற் சேது தடவரை யருவிக் கெல்லாந்
தீவமாந் திருக்குற் றாலந் திகழ்வட வருவித் தீர்த்தம். (உஎ)

•

ஓர்நதி யிடத்தி லைந்து மொடுக்கிமூச் சடக்கி யென்றும்
வார்புன லிடையே நின்று மாதவம் புரிவார் பேறு
கூர்பனிச் சிசிர நாளிற் குலவுசித் திரப்பூங் கங்கை
நீர்படிந் தொருநாட் செய்யு நித்திய கருமம நல்கும். (உஅ)

வேறு.

மாகமா மதிதோறும் பிரயாகை மாதீர்த்தம்
பாகமா மதியினராய்ப் பல்யாண்டு படிந்தபல

ஞுகமா மதிச்சடையார் வடவருவி நயந்தொருநாட்
சோகமா மதிநீங்கக் தோய்ந்தாரைத தோய்நதிடுமால். (உ௬)

தாமாக மூழ்கினர்கருந் தாமொருவர் பொருட்டாலே
யாமாறு மூழ்கினர்க்கு மாருச முடம்பழுகருப
போமாறு மூழ்கினர்க்கும் புனல்வழுககி வீழ்ந்தவர்க்கும்
காமாரி சிததிரப்பூங் கங்கைபர கதிதருமால். (௩௦)

அனைத்தாகும் பிறநதிக ளாடினார்க் களவளவி
லெனைத்தானும் பலனுதவு மெதிர்ந்தார்க்கும் பணிந்தார்க்கு
நினைத்தார்க்கும் புகழ்ந்தார்க்கு நீரிலொரு துளியாக
நனைததார்கரும் கதிகொடுக்கு நன்னகர்ச்சித் திரநதியே. (௩௧)

ஆலைநறுங் கழைதூர்தொட் டயில்வதெனக் காலமுதல்
வேலைமர பிணிற்கதிகள் வியந்துதவும் பலநதிகள்
காலையினு மாலையினுங் கடும்பகலும் வடவருவி
பாலையடு கட்டிதருஞ் சுவைபோலப் பலனறருமே. (௩௨)

வான்றொடருந் திரிகூட வரைசசாரல் வடவருவி
தோன்றியொரு நாண்மூழ்கத் தொலவினைகள் கழிந்தோடு
மேன்றநா ளிரண்டாடி லிவ்வினையவ் வினைதேயு
மூன்றுநாண மூழ்கினவர் கருக்குழியின் மூழ்காரே (௩௩)

அரிதான வடவருவி யாடுவார் வினைகழுவி
யிருதான தம்மையறிந் தேற்றதலை வனையறிவா
ரொருதான மந்நதியி னுயர்மறையோர்க் குதவுமது
தருதானப் பெருக்கமதாய்ச் சந்தானம் பெருக்கிடுமால். (௩௪)

மித்திரரும் வளநாடு மெய்யுணர்வு மனைவாழ்வும்
புத்திரரும் பேரரசும் பொருள்பலவும் புரிந்தருளுஞ்
சத்துருவின் வலிதொலைக்குஞ் சகலபா வமுந்தீர்க்குஞ்
சித்திரமா நதிப்புனலிற் சிறுகாலை படிந்தார்க்கே. (௩௫)

ஏலவே விரும்பினவர்க் கறம்பொருளின் பமும்வீடுஞ்
சாலவே கொடுத்தருளி யெழுபிறப்புந் தவிர்ப்பதனுன்

ஞாலமே லுவந்தாடுந் தவத்தோர்க்கு நான்குவகைப்
பாலுமாம் வடவருவி மருந்துமாம் பவப்பிணிக்கே. (௩௬)

வேறு.

அயனநாள் விழுவி ழாநா ளட்டமி பதினன் கண்ணால்
வியனமர் திருவா ராட்டு மேதகு மாத நாட்கள்
பயனமர் முப்பான் மாகம் பகர்வட வருவி யாடி
நயனமூன் றுடையார் சேவை நண்ணினார் பிறவி நண்ணார். (௩௭)

முன்னுவாப் பின்னுவாநாண் மொழிந்தசங் கிராநதி திங்கண்
மன்னுறு பின்னு வாநாண் மதிகதிர் பாந்தள் சேர்நா
ளின்னவை யொன்றி லொன்று சதமடங் கேற்ற மாகு
மந்நதி படிந்தார்க் கேற்ற மாயிர மடங்கு மேன்மேல் (௩௮)

பிறந்தநாண் மூழ்கி னார்க்குப் பிறப்பரி தாகும் யாண்டு
சிறந்தநாண் மூழ்கி னார்க்குச் சிறப்பெறு செடுப்பர் தேவ
ரிறந்தநா ளறிந்து மூழ்கி லிறந்தவர் மூழ்கார் கும்பி
மறந்தநா ளவரைக் காலன் மறக்குநாண மறக்கு நாளே. (௩௯)

திருவளர் திருக்குற் றாலச் சிவபுரஞ் சேரும் போது
மருவிநீர் படியும் போது மமலனைப் பரவும் போது
மொருவரை யொருவ ருன்னி லிருவருங் கதிபெற லுய்வார்
கருவரைப் பிறவி காணா ரவர்தமைக் கண்டு ளோரும். (௪௦)

வேறு.

அந்தவுவாச் சங்கிரமம் விதிபாதம் வைதிருதி யைம்பா ணென்று
பந்தமனுப் பதினன்கு யுகநான்கு மாளையநாள் பத்தோ டைந்து
தொந்தமா மட்டகைகள் பன்னிரண்டாப் பருவநாட் டொண்ணூற்றாறு
முந்துபுனற் றுறைபடிந்து தருப்பிப்பார் பிதுர்கடன்கண் முழுதுந்
தீர்ப்பார். (௪௧)

தாம்பெற்றோர் தத்துமகார் தந்துணைவர் பெறும்பாலர் தனையை பால
ராம்பற்றில வளர்த்தமகா ரவனருளா லரிவைபிறர்க் கருளும் பால
ரோம்புற்ற பரிசதனா லுயர்ந்தவரென் றிருநால்வ ரோதுங் காலை
யேம்புற்ற துயர்தீர விறந்தார்க்குத் திலநீரா லிறைக்கு நீரார். (௪௨)

வேறு

சேணில்வைத்த மதிச்சடையார் சித்திரகங் கையின்மூழ்கிப்
பேணிவைத்த தினத்தொருநாட் பிதுர்ப்பலிவைத் திடுவாரே
லேணிவைத்தார் சுவர்க்கபதத் தெள்ளுடனீ ரிறைப்பார்கள்
காணிவைத்தா ரவர்களுக்கே கயிலாயஞ் சிவலோகம். (௪௩)

அந்திலேயே பிதுர்ப்பலிக ளமைத்திடுதற் கமையாதேற்
கன்னிநீர் வடவருவி கலந்தாடித் தருப்பணஞ்செய்
தின்னியன்மா மறைவாணர்க் கியன்றபொருள் வழங்கினூர்
பன்னருந்தென் புலத்தார்க்குப் பரகதியை வழங்கினூர். (௪௪)

பிள்ளையுஞ்சுற் றமுநீங்கிப் பிறநாட்டி லிறந்தார்க்கும்
விள்ளுமிரு நால்வர்களி லொருவர்விரைந் தேகியந்த
தெள்ளருவித் தடத்தொருநாட் சென்றுதருப் பிக்கிலவ
ரெள்ளினுக்கா யிரம்வருட மிருப்பர்சுவர்க் காதிகளில். (௪௫)

புத்திரரில் லாதிறந்தோர் தன்மரணம் புக்கிறந்தோர்
சத்தரா கிடையமூழ்கித் தவிக்குநா ளெவரேனுஞ்
சித்திரமா நதிக்கருணைத் திரைக்கரத்தி லவருடம்பி
னத்தியளித் தாரவர்க்கே யரசளித்தார் வானுலகம். (௪௬)

வேறு.

முத்தனையார் வரம்பழித்தோர் முதுகுரவர்க் கிடர்புரிந்தோர் மூக்கண்ணனை, நத்தனைநான் முகத்தோனை யிகழ்ந்தோர்பல் லுயிர் செகுத்தோர் நன்றி கொன்றோர், கத்தனைவிட் டமர்க்களத்தி லோடினோர் நம்பினார்க்குக் கபடஞ் செய்தோர், சித்துணைப்பா தகரேனும வடவருவி படிந்தவர்வீ டெய்து வாரே. (௪௭)

அந்தணர்கண் முனிவர்கடன் கழிப்பர்பிர மச்சரிய மரிதி னைற்றிச் செந்தழலி னவிசொரிந்து மகமியற்றித் தேவர்கடன் கழிப்பர் மேன் மைச், சந்ததியை யினிதீன்று தங்கள்பிதுர்க் கடன்கழிப்பர் தரைமே லிந்தத், தொந்தமாங் கடன்மூன்றும் வடவருவி யாடினவர் தொலைப் பர் மாதோ. (௪௮)

அறியாம விளமையிற்செய் பாவமெலா நன்பகலி லாடத் தீருஞ்
சிறுகாலை படிந்திடிற்போங் காளையராய் மனதறியச் செய்த பாவம்



தேன் அருவி. (சிவமதுகங்கை)

வறிதான புன்மாலை படிந்தார்க்கு முனுமையிற்செய் மாபா வம்போம்
பிறியார் முப்பொழுதாடில் வடவருவி யெழுபிறப்பும்பெயர்க்குமாதோ.

கள்ளாடு மைம்பொறிக ளடக்கலொரு நெறிநடத்தல் கரணங்
காத்த, லெள்ளாம லீகைதிடந் தன்னுயிர்போன் மன்னுயிர்கட் கிரங்
கன் ஞான, முள்ளார்வம பொறைசமித மின்சொலுடன வாய்மையென
வுயரீ ராறுந், தள்ளாத மனத்தீர்த்த மதுபடியார் புனல்படியிற் றவரை
நேர்வார். (ருo)

வளங்கொண்மா னததான மொழிந்துபிற நதியாடு மாந்தர்க் கெல்
லாந், துளங்குமவர் புறத்தழுக்குத் தொலைவதன்றிப் பெரும்பாவந்
தொலையா தாகுங், களங்கமுறு மலமகற்றிப் பாவமெலாங் கழுநீராக்
கழுவு மாற்ற, லுளம்பெறுதா னப்பலனும் வடவருவிப் புனல்படிந்
தார்க் குளதா மன்றே. (ருக)

இத்தலத்து நதிமகிமை யெங்குமே கண்ணுகி யெங்கு மான
நித்தனறிந் தியமனுக்குங் குறுமுனிக்கும் வாசுகிக்கு நெடிய மாலாஞ்
சுத்தனுக்கு நவின்றபடி வியாதனெனக் கொருதொகையாச் சொல்ல
யானு, முத்தகமா வுமக்குரைத்தேன் விரித்துரைக்க வயனுலு முடியா
தென்றான். (ருஉ)

தேனுறு சித்திரமா நதிமகிமைத் தேனுறு செவிகா லாகப்
பானுறு மனத்தடத்துப் பாய்ந்துதவப் பயிர்தழைத்த படிவர் பின்னும்
வானுறு திரிகூட வரையாறு தனிற்போந்து மழுவலானைப்
பூநாறு மதுச்சொரிந்து போற்றுமாறுணர்த்து கெனப்புகல்வான்சூதன்

ஏழாவது வடவருவிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத திருவிருத்தம் ௩௬௮.

---

## எட்டாவது சிவமதுகங்கைச் சருக்கம்.

இரவி தன்குலச் சகரனோர் பரிமக மியற்றப்
புரவி யைத்திசை விடுத்தனு மதனைவான் புரப்போன்
கரவி னுய்த்தனன் கபிலன்வாழ் பிலத்தது காணுன்
றரையிற் றேடுபு மகன்மக னஞ்சுமான் சலித்தான். (க)

அதனைச் சாகர ரறுபதி னாயிரர் நாடி
விதனத் தாற்புவி சூழ்வரத் தொட்டனர் மிசைநதார்
பதனத் தோர்புடைக் கண்டனர் முனிவன்மேற் பாய்ந்தா
ரிதனைக் கண்டிலான் விழித்தலுஞ் சாம்பரா யிறந்தார். (உ)

சகரன் சாகரந் தொட்டவ ரிறத்தலுந் தகவான்
மகமு டித்தன னஞ்சுமான் மகன்றரு மகவாம்
பகிர தன்றவ மியற்றினன் விரிஞ்சனைப் பணிந்து
நிகரில் சாபத்தின் மாய்ந்தவர் நரகினை நீப்ப. (௩)

பஙகை யாசனன் மொழிப்படி கஙகையைப் பரவிச்
சங்கை யாததவம் புரிந்தனன் கஙகையைத் தரிப்பான
மஙகை பாகனை வணங்கிநோற் றன்னவன் வரதநாற்
கஙகை பாற்றவம் புரிந்தன னளப்பருங் காலம். (௪)

புரியுங காலையில் வரநதி யதிர்த்துவான் பொதிர்த்து
விரியு மெண்டிசை நடுக்குற வண்டமும் வெடிப்பக்
கிரிவி லானையு மதித்திலள் குதித்தனள் கிளர்பார்
தரிபடா தென வமரரு முனிவருஞ் சலிப்ப. (௫)

மாக மண்டலத் தடுக்குலங் கயலென மறுக
மேக மண்டலம் பாசியா மிதப்பவிண் கதிர்கள்
யோக மண்டலத திருவகைக் கமலங்க ளூறழ
நாக மண்டலச் சடையில்விண் ணடுக்குறப் பாய்ந்தாள். (௬)

அடைய வாயிரம் பருவமா யிரமுகத் தடினி
யுடைய நாயகன் சடைமிசைப் பாய்தலு முலறிப்
புடைபி குங்குமு திரவிமுன் புற்பனி போன்றாள்
விடையி னார்புகழ் பாடினா ராடினார் விண்ணோர். (௭)

வானெ லாமுடைத் தெழுசுர நதிப்புனல் வரதன்
கான மார்சடைக் காட்டிடைச் சுவறலாற் கலஙகி
மீன லோசனை பாகனை யிறைஞ்சினன் வேந்தன்
ஞான நாதர்தாள் வீழ்ந்தனள் கஙகையு நடுங்கி. (அ)

இனிகொள் கங்கையை யமைத்தர னரசனுக் கிரங்கி
யொளிர்ப னிக்கிரி விடுத்ததனோர் துளியெழு வகையாய்
விளிகொள் சீதையுஞ் சுசுட்டுவுஞ் சிந்துவு மேல்பா
னளினி பாவனி கலாதினி கீட்டிசை நடப்ப.　　　(சகூ)

பெருகு கஙகைதென் பாலதாய்ப் பகிரதன் பின்போய்த்
திருகு சன்னுவின் வாய்ப்பெய்து செவிவழி விடுப்ப
மருவு சானுவி சுடலைபாய் தனுமவன் மரபோர்
நரகொ ழிநதுபொன் மானமேற் சுவர்க்கநா டடைந்தார்.　　　(சய)

வேறு.

கதியின்மேற் சகரர்தமை விடுத்தநதி கண்ணுதலார் கயிலை மேவி
மதிகுலாஞ் சடையாயென் மாய்ந்தவுருக் காட்டுகென வணங்க நாதர்
சதிசெய்பா தகந்தேய்க்குந் தருமமுரு வளர்க்குமந்தத் தரும பாவத்
ததிகமாஞ் சிவதருமஞ சிவதுரோ கஙகளென வருளிப் பின்னும்.　(கக)

ஒத்திடுமெண் பத்தியினு லெய்துவது சிவதரும முரைக்குங் காலைத்
துதியம்பத் திமைபூசை புரியாமை புரிந்தவரைத் துதித்திடாமை
பத்திபுரிந்தமைமறத்தல் சிவநிந்தை யெனப்புகலப்படுவதாறும் [தோ.
வித்தெனவும் வேறெனவும் விளைதல்சிவத் துரோகத்தின் விளைவு மா

அவையாறிற் சிவநிந்தை யதிகமதை யெளிதெனநீ யடைந்தா
யிது, தவமாகப் பலகோடி யுகங்கள்புரி யினுமுனக்குத் தவிராதென்று,
ரிவைதீர வருள்புரிய வேண்டுமென விறைஞ்சுதலு மிறைவர்
நோக்கிச், சிவபூசை யாயிரம்யாண் டியற்றியிருந் தனையாகிற் றீரு
மெனறார்.　　　(கஉ)

உன்னுடைய சன்னிதியைப் பிரியிலெனக் கினியொருநா ளுகமா
மென்று, பின்னுமவள் வணஙகுதலும் பெரியபிரான் சிறிதிரங்கிப்
பேதாய் பல்யாண்டின்னிலத்திற தீர்ப்பரிய பாவமொரு தினம்வசித்
தார்க் கெளிதாத் தீர்கது, மனனுமொரு தலமுளது நமதுரக சியம்
பிறர்க்கு வழங்கே மென்றார்.　　　(கச)

அண்ணலே யருளுகென வணங்கும்வர நதிக்கிரங்கி யமலர்
நோக்கித், தண்ணருவித் திரிகூடம் யாமிருக்குஞ் சயிலமந்தச் சயில

மீது, நண்ணுமோ ரிலிங்கமதை யருச்சித்தாற பாவமொரு நாளிற் றீரும், பெண்ணணங்கே மதுவினாற் பூசைசெயி லெமையணுகப் பெறுவா யென்றார். (கரு)

என்றுதிரு வாய்மலர்ந்து விடைகொடுப்பக கயிலைகடந திமைய நீங்கிக, குன்றுகளைச் சிலைவளைத்தார் திரிகூடத் தருவிசொரி குவட்டி னேகித், துன்றுசிவ லிங்கமதை மதுசசொரிந்து பூசைசெய்து துதிக் குங் காலை, யொன்றுசுதித் திருமடந்தை விழிகளிப்ப மழவிடைமே லுதித்தா ரண்ணல். (கசு)

பாதகமா மிருள்விடிய வுதயகிரி மேலுதிக்கும் பானு வேபோல்
வேதநா யகன்விடைமேற் றோன்றுதலு மனங்களிப்ப விழிநீர் போர்ப்ப
வாதிநா யகசரண மமலநா யகசரண மருளா னந்தச்
சோதிநா யகசரணஞ் சரணமெனக் கங்கைமங்கை தொழுதுவீழ்ந்தாள்.

சரணமென விறைஞ்சுதலு மன்பர்தமக் கன்புடைய தம்பி ரானார்
விரணமற வினைநீக்கி வரநதிக்கு விதிகாறு வேணி யிந்தார்
பரமர்தமைக் கங்கைமங்கை மதுவினாற பூசைபுரி பரிவி னாலே
யரணமா மத்துறையு மாதிசிவ மதுகங்கை யாய தென்றான். (கஅ)

நான்முகத்து முனிவர்கு தனைவாழ்த்தி யெமதுவினைக் கடுங்கோ டைக்கு, வான்முகத்து முகில்போல வந்தருளி மதுகங்கை மகிமை யென் னும், பான்முகத்து மாரிபெய்தாய் நன்னகராஞ் சருக்கரைப்பூம் பந்தர் மீது, தேன்முகத்து மழைபோலுஞ் சிவபிரான் மகிமையினைச் செப்பா யென்றார். (கசு)

ஆர்த்தமால் வரைதவத்தி னார்த்தமால் வரைநதிகட் கதிகமான, தீர்த்தமான் மியம்பிறவி தீர்த்தமான் மியங்கருணைத் திருக்குற் றாலங், கூர்த்தமா கதித்தான மிவைமூன்று முடையானைக் கூறென் பார்க்கு, மூர்த்திமான் மியம்பெருக மொழிகின்றான் புராணமெலா மொழிந்த நாவான். (உ0)

எட்டாவது சிவமதுகங்கைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ருஅஅ.



# ஒன்பதாவது மூர்த்திவிசேடச் சருக்கம்.



ஒளியாக வெளியாக வுருவாக வருவாக வொன்றினுலுந்
தெளியாத பெருமானைத் தெளிவார்க டெளிவானைத் திரிகூடத்தி
லளியானை யனைத்துலகுக் கரியானென் றுரைத்தமறையடியார்க்கென்று
மெளியானென் றெடுத்தியம்பு மாதலால் யானுமெடுத் தியம்புவேனால்.

கைத்தலத்து மழுவேந்திக் கயிலைமுதற் றலத்துறையுங் கடவு ளோரின், முததலைவெற் பினிலுறையு மூர்த்தியே யுயர்கருணை மூல மூர்த்தி, யெதத்லத்தும் பரமனுள னிவனதிக னெனவுரைப்ப தெவ னென் பிரே, லத்தலத்தி னிறைந்திருப்ப னெத்தலத்து மோரோர்கூ றமையா நிற்பன். (உ)

கடலேழும் புறக்கடலுந் திரைபெருகி யுவட்டெடுக்குங் கற்பாந் தத்தி
லடலாழி வரைசாய்ந்து மேருவரை நிலைகலங்கி யசல மெல்லாந்
தடுமாறி யடுக்கழிந்து புவனசரா சரமொடுங்கித் தரங்கவாரி
தொடராக மண்டியபின் படரூழிக் கனலெழுந்து சுவறநிற்றன்றே(ங)

அண்டமூ லத்தெழுந்து புவனமெலாஞ் சுட்டகன லடங்க மேலே சண்டவா யுப்பரந்து தாவியற வொடுக்கியபின் றரிப்பாய் நின்ற, விண்டலமும் விண்டலமேற் கடவுளரு மேலுளதத் துவமு மாங்கே பண்டையுகந் தனிற்றோன்று முறையாக வொடுங்கவொரு பரனே நின்றான். (ச)

பின்றாகி யளவிறந்த காலமெலாம் பிரிந்திடவும் பிரியா வண்ண மொன்றாகி யெவ்வுயிர்க்கு முணர்வாகிக் குணங்குறிக ளொடுக்கந் தோற்ற, மின்றாகி நின்றவனே யிறையாக வெழுந்தருளி யிருந்தா னென்றும், பொன்றாது சிவபுரம்போ னின்றபுடார்ச் சுனபுரத்துப் பொருந்தி மாதோ. (ரு)

ஒருவடிவுந் தனக்கெனவொன் றிலனாகிக் கருணைதிரு வுருவாக் கொண்டு, திருமுகங்க ளாயிரமுங் கண்களா யிரமுமெனத் திகழுஞ் சோதி, யிருமைபெறு முலகனைத்து மொடுக்குமுறை தோற்றுவிக்கு மியற்கை பேணி, யருணனூற் றிதழ்க்கமல மலர்மேலந் தணனுருவ மாகினனே. (சு)

திசைமுகமு மொருநான்கு மவுலிகளு மிருநான்கு செம்பொற் றோளும், விசையநெடுந் தண்டமும்பொற் கமண்டலமு முப்புரிநூல் விளங்கு மார்பு, மிசையமலர்ப் பதுமபீ டத்திருந்து நாமகளா ரிடத் தின் மேவி, யசைவிலாப் புவனமெலாம் வான்வளிதீ நீர்பாரா லருளிச் செய்தான். (௭)

வானமுகி லோரேழுஞ் சூரியருஞ் சந்திரரும் வளர்கோ ளேழு
மீனினமும் விண்ணவரும் விண்ணவர்வேந் தனுந்திசைக்கு வேந்தர்யாரு
மேனையராங் கடவுளரு மிருபொழுது முக்கால மிருது வாறு
நான்மறையா றங்கமுதற் பலகலையும் படைத்தருளி நயப்பான் மன்னோ

ஓமவேள் வியும்வேள்வித் திரவியமு முயர்காயத் திரியு நல்கித்
தாமரைவாண் முகம்புயமார் பூருவினிற் சாதியொரு நான்கு மீன்று
நாமவா ரிதிபலவுந் தடம்பலவும் வரைபலவு நதிகள் யாவுந்
தேமலர்ப்பூஞ் சோலைகளுந் திகிரிநெடுங் கானகமுஞ் சிருட்டித்தானே.

பிணிமருவு பரசமையச் சூறையிற்பட் டுலகமெலாம் பிறழா வண்ண, மணிபெருகுஞ் சிவசமய நெறிதருசெண் பகாகாவு மருளிச் செய்து, பணிவிடைவா னவர்புரிய மறைபரவ நான்முகத்தெம் பகவனா கிக், குணில்பொருமு முரசதிருந் திரிகூடக் கோயில்குடி கொண்டா னன்றே. (௧௦)

பார்பூத்த வயன்வடிவாற் படைத்தருளு முலகமெலாம் பரிப்பான் மேனி, கார்பூத்து வாய்பவளக் கனிபூத்துக் கண்கரங்கால் கமலம் பூத்து, வார்பூத்த கொங்கைமட மயிலிரண்டு மார்புபுய வரை மேற் பூத்துக், கூர்பூத்த வளையாழிப் படைபூத்த நெடியகுணக் குன்ற மானான். (௧௧)

கமலலோ சனனாகிக் காத்தனன்முன் படைத்தவெலாங் காத்து முக்க
ணமலநா யகனாகக் குறுமுனிக்கா யமர்ந்ததுமே லுறைவா மாதி
விமலையாம் பரைமருவி யிச்சைஞா னக்கிரியை மேவி யாடு
நிமலனே யத்தலத்து மூவராய் முத்தொழிலு நியமித் தானே. (௧௨)

முப்பாலாய் முப்பொருளாய்ச் சிற்பொருளாய்த் திரிகூட முதல்வ னானை, யொப்பாரு மில்லானுக் கொப்பாமற் றொருபொருளை யுரைக்கற்

பாற்றோ, வப்பால னவ்வடிவ னக்குணத்த னென்றவனை யறிதற் கின்ன, மெப்பாலு மிருவருக்கும் பேறிலைநான் மறைகளு மெழுத் தில்லை மாதோ. (கங)

ஆரிடமா னிடந்தேவ மசுரமிராக் கதம்பதிட்டை யைந்து கூற்றோ லரிணங்கு தலமைந்த மியம்புசயம் புவுமைந்த மிவற்றின் மேலும் பாரருணை போகலிங்கஞ் சைவலிங்க மதுரைபரா பரமற் றெல்லாஞ் சீரிணங்கு குற்றாலச் சிவலிங்கம் பரமரக சியமே யாமால். (கச)

இமைப்போது கொன்றையிலோர் நொடிப்போது கூவிளத்தி லிலிங்க நாடி, யமைப்போரு நாலுணர்ந்து தேவரெலா மித்தலத்தை யகலா வண்ணந், தமைப்பேணி யிருந்தருள வேண்டுமென வரம்வேண் டத் தந்தோ மென்று, நமைப்பேணி நாதனருள் புரிந்ததற்கு வேத மொரு நான்குஞ் சாட்சி. (கரு)

பற்றகப் பதஞ்சலிமெய் புலிபரவத் திருச்சிற்றம் பலமாந் தில்லைப் பொற்றன நடம்புரிவார் திருவேடு பிடித்தெழுதப் புராண மோர்ந்து கற்றருங் கல்லாரு முருகுகவி வாதவூர்க் கருணை வள்ளல் குற்றாலத் திற்குறியா யிருந்துமென வுரைத்ததிந்தக் குறிப்பா லன்றோ.

அன்னவகை யாலகில தலங்களுக்குங் குற்றால மாதி யாகு முன்னமுறை திரிகூட மூர்த்தியே மூர்த்திகளின் மூல மூர்த்தி யின்னவனைப் பூசிக்கும் பூசையே யனைவருக்குமேற்கும் பூசை [போல. மன்னுபுனன் மூட்டில்விடக் கொப்பெலாந் தழைதவோங்கு மகிமை

சாலைதொறு மெரிவளர்க்கப் புகவேண்டா தவம்புரிந்து தனிக்க வேண்டா, சோலைநறுஞ் செண்பகஞ்சூழ் சுருதிநிறை குறும்பலவிற் சோதி நாத, னாலயத்தை நோக்கிவரி னடிக்கடியோர் பரிமகப்பே றமையு மாங்கண், மாலயனுக் கரியானை வந்துபரா வினர்பேறு மதிக்கொ ணாதால். (கஅ)

மணிசேய்பூண் செழுஞ்சாந்து மலர்மாலை தூசுகளால் வரதன் மேனிக், கணிசெய்வார் தம்மேனிக் கணிசெய்வார் வானுலகி லமரர் மாதர், கணிசெய்வான் பொழில்சூழுந் திரிகூடப் பரனுர்க்குக் கல லாற் பொன்னுற, பணிசெய்வார் தமக்கேவற் பணிசெய்வார் சயமா தும் பதும மாதும். (கக)

காமாரி தனக்கொருபூ வனஞ்செய்வார் கற்பகப்பூ வனத்தில் வாழ்வார்
பூமாரி சொரிவார்மேற் சொரிவார்கள் வானோர்கள் பொற்பூ மாரி
கோமாரி பானமாரி ததிமாரி நெய்மாரி கோது தீர்ந்த
தேமாரி சொரிவார்கள் கடல்களுரு மூலகாண்டு சிவமே சேர்வார். (உ0)

குவிமாலை மதிவேணித் திரிகூடப் பரனூர்க்குக் குளக மாதி
கவிமாலை புனைந்தார்கள் கற்பகமா லையைப்புனைந்து கற்பம் வாழ்வார்
தவிராமுக் கனியாலுந் தக்கவிள நீராலுஞ் சாந்தத் தாலு
மவிடேக மாட்டுமவர்க் கவிடேகஞ் சூட்டுவர்மே லயனு மாலும். (உக)

மோனைவா கனமியற்றித் திருவிழாப் பொலிவுமுதன் முயன்றோர் வெள்ளை, யானைவா கனத்தார்கரு மன்னவா கனத்தார்க்கு மதிக ராவார், தானைகே தனங்குடைமேற் கட்டிபரி வட்டமணித் தசும்பு மோலி, யேனையா பரணமுத வியற்றுவார் திசைக்கிறையா யிறைபாற் சேர்வார். (உஉ)

கொடியாடு மணிமாட முயர்கூடத் திரிகூடக் கோயி லார்க்குக் கடிமாலை மலர்தொடுப்பார் கமழ்திருமஞ் சனமெடுப்பார் களபஞ் சேர்ப் பார், படிதூபம் விளக்கிடுவார் பரிகலங்கள் விளக்கிடுவார் பணிவார் தெய்வ, வடிவாகிச் சிவபுரத்துத் தொண்டர்குழாத் தண்டர்குழாம் வணங்க வாழ்வார். (உங)

வேறு.

பானு வாரத்திற் பானு வுதித்திடத்
தேனு லாம்புனற்சித்திர கங்கைதோய்ந்
தானு லாவுமம் மானை வலஞ்செய்வார்
வானு ளார்தொழ மால்பதஞ் சேருவார். (உச)

திங்கள் வாரங் கதிர்படு செவ்விவாய்ச்
சங்க வீதிச் சயம்புவுக் கோர்மல
ரங்கை யாலணி வாரணி விப்பவ
ரெங்க ளுதர் சிவபுர மெய்துவார். (உரு)

சேயின் வாரத்தி லங்கான் செங்கைவேற்
சேயர் தாதைக்குச் செண்பகப் பொங்கர்வாய்ச்

சேய பாதத்திற சேய்மலர் சாத்துவார்
சேய ராயிருப் பார்சிவ லோகத்தில.　　　(உகூ)

அத்த மார்புத வாரத்தி லம்பிகை
யத்த மார்செண்ப காடவி யண்ணலை
யத்த மார்துமபைப் போதுகொண் டாச்சிச்சு
மத்தர் தாரகை வானுல காளுவார்.　　　(உஎ)

அம்பொன் வாரத் தருவி பழுந்தெழீஇப்
பைம்பொன் வாசத் தலரிப்பைம் போதுதூஉய்
நம்பன் வார்கழல் போற்றினர் நண்ணுவார்
செம்பொன் மார்பகத் தார்திரு வைகுந்தம்.　　　(உஅ)

திருந்து நன்னகர் தேவுக்கு வெள்ளிநாட்
கரும்பின் கட்டி பருப்புக் கலந்திடும்
விரும்பு தோய்வை யமுதுசெய் விப்பவ
ரரும்பு பூவி னயன்பத மேவுவார்.　　　(உகூ)

காரி வாரத்திற் சித்திர கங்கையாம்
வாரி தோய்ந்து பிரான்வலை வீதியைச்
சீரி ஞோர்வல மாகினுஞ் செய்குவார்
நாரி பாகர் கயிலையை நண்ணுவார்.　　　(௩0)

ஆறு செங்க லணிவிரல் போன்றகன்
னீறு காசள வாகினு நீள்விடை
யேறு நன்னகர்க் கோன்பணிக் கிகுவார்
வீறு வெள்ளிக் கயிலையின் மேவுவார்.　　　(௩க)

நீவு சாந்தமோர் நெல்லளவாகினு
மாவின் பாலொரு கையள வாகினும்
பூவொன் றாகினு நன்னகர்ப் பொன்னகர்த்
தேவின் பாலணி வார்சிவ லோகரே.　　　(௩உ)

சிறுகாலை பணிவார்கள் சாலோகத் துறைவர்கிரி கூடத் தேவை
யுறுகாலை பணிவார்கள் சாமீபத் திருப்பர்கதி ருச்ச மாகப்

கண்டன னமரர் வேந்தன் கண்களாயிரததின பேறு
கொண்டன னிமையா நாடடங் கொண்டபே றமைந்தார் விண்ணோர்
தண்டலைக் கமுக வேலிச் சண்பக வனசசிர் நோககி
லண்டர்தங் குரவன் வாய்மை யாயிரத் தொன்றே யென்றார். (கஉ)

பூவின்மேல் வண்டு டாடப் புதியசண் பககா வெங்குந்
தேவரே பூவின் மேவிச் செழுந்தவத் தேன்வண் டானார்
மூவராய்ப் பரம மூர்த்தி முதறொழிற புரியுந் தானம்
யாவரே வலஞ்செய யாதார் யாவரே தவஞ்செய் யாதார். (கங)

கந்தர வருடஞ் சேர்ந்தான் கமழ்புனற் கிறைவன் வாரி
யிநதிர தனுவைச் சார்நதா னிந்திர னெழிற்பூஞ் சோலை
மந்தமா ருதத்தைச் சார்ந்தான் மருத்துமா முனிவர் வேள்விச்
செந்தழ லதனைச் சார்ந்தான செழுஙகனற் கடவுண் மாதோ. (கச)

அந்தகன் றரும வேட மாகின னிருதி யாவான்
முந்துவேட் டுருவ மானான் முதுதவம் புரியு மேனைத்
தந்திரர் யாமேழார் சிததர் தவததாவிஞ் சையர்புத் தேளிர்
வந்தகிம் புருடர் மற்றோர் வண்மையை வகுத்துச் சொல்வாம். (கரு)

மனிதராய் வடிவு கொண்டு மாக்களாய்ப் புள்ளாய் வாசப்
புனிதமார் தருக்க ளாயும் புயல்செழு திரிகூ டததுு
முனிவராய்ப் புதலாய் புல்லாய் முற்றும்வேற் றுருவம் பூண்டுந்
தனிதராய்த் தவங்கள் செய்தார் தானவர் பயததான் மன்றே. (கசு)

ஆலயச் சங்கவீ தி யண்ணலை யுன்னி வானோர்
நால்வகைச் சஙகத் தோரு நளினஙகோ முகஞ்சொத் தீகஞ்
சால்புசேர் வீரஞ்சிஙகா சனமுத்தஞ் சுகாச னங்கள்
பீலிபத் திரமா மொன்பான் பெரியவா சனத்தி ருந்தும். (கஎ)

ஆறுடர் பகையை யோட்டி யைம்புல னடக்கி யாண்டு
மேறுநாற் கரணங் கட்டி யியனுமுக் குற்ற மாறறி
யூறுகால வளியி ரண்டு மொருக்கியோர் வழிக டாவி
மாறிலா யோகு நீராற் றவப்பயிர் வளரச் செய்வார். (கஅ)

இயமமா சனந்தி யானந் தாரணை பிராணா யாம
நியமமே சமாதி நீண்ட பிரத்தியா கார நடை
யுயருமட் டாங்க யோக முஞ்உற்றுறிய மாறா தாரத்
தியல்பெறு யாநதண் மூலத் தெழுப்பிமே லாடல் கண்டும். (௧௯)

காய்பல தின்றுங் கானிற் கனிபல நுகர்ந்தும வாவிப்
பாய்புனல் பருகா நின்றும் பச்சிலை கறித்தும் கல்லிற்
சாய்பல கிழங்க சித்துஞ் சருகினைப் புசித்துந் தாங்கா
வாயுபக் கணங்கள் செய்தும வசிவறப் பசியைத் தின்றும். (௨௦)

சாந்திரா யணமு டித்துந் தருதிஙக ளுபவா சித்து
மாந்தியு மயனத் தோர்நாள் வருடத்தி லோர்நா ளுண்டுங்
காந்தியின் வெயில்சேர் பஞ்சக் கனலின்மத் தியிலே நின்று
நீந்துத லரிதாம் வாரி நீரிலே நிலையா நினறும். (௨௧)

கல்லெனக் கிடந்து நீரிற் கயலென வாழ்ந்தும் பாரிற்
புல்லெனப் பொருந்தா நின்றும் புறறென வளர்ந்து மேனி
வில்லென வளைந்து மாவின் வீழெனச் சடைகள் வீழ்த்துஞ்
செல்லெனக் கலங்கு றுதுந் தீயெனப் பயமு றுதும். (௨௨)

ஊசிமே லொருகால் வைத்து மொருவிர லூன்றிக் கண்க
ணாசிகா மூலம் வைத்து நன்னிலத் தொருகை யூன்றி
யாசுவாய் முடிகீ ழாக வடியிணை மேலா நின்றும்
வீசுகை சிரமேற கொண்டும் விடாதுமெய்த் தவங்கள் செய்தார். (௨௩)

அப்பரி சமரர் யாண்டி லாயிரப் பதிற்றுண் டெல்லா
மெய்ப்பெருந் தவஙகள் செய்து மெய்யெலாம் வருந்தித் தேம்பிச்
செப்பருங் கவலை கூர்ந்தார் தேவரே யாகி லப்மா
விப்பெருஞ் சிவத்து ரோகம் யாவரே தொலைக்க வல்லார். (௨௪)

அத்தனை கால மெல்லா மருந்தவம் புரிந்து மாதி
கத்தனை விடஞ்சேர் நீல கண்டனைத் திரிகூ டத்து
நித்தனை வரவு காணார் நின்றனர் திகைத்து வாடிச்
சித்தநைந் துலைந்த வானோர் சிந்தையில் வருந்திச் சொல்வார். (௨௫)

வேறு.

உருகினோ முடலெலா முளமெலா மறுகினோம்
விரவினோ மனவிலே வெயிலிலே கருகினோம்
வருகிலா ரருள்கிலார் மழுவலா ருலகெலா
மருளுமோர் பரயனா ரருளிலா தவர்கொலோ. (உசு)

வரமெலா முதவுமோர் வரதனார் கருதலார்
புரமெலா மெரிசெய்தே புவியெலா நிலைசெய்தார்
பரமனார் நமதுபாற் பரிகிலார் வருகிலார்
பிரமனார் மொழியுமே பிசகுமோ பிசகுமோ. (உஎ)

வேகமே யிடையறா வேழமே யுரிசெய்தா
ராகமே லணிசெய்தே யாதிநா ளருள்செய்தார்
நாகமே யணிகுவார் நாமெலா மெலியவே
யேகநா யகர்வரா ரேழையேம் வினையிதோ. (உஅ)

செங்கைமான் மழுவினார் செண்பகா டவியினு
ரெங்குமாம் வடிவுளா ரெங்குமாம் விழியுளார்
கங்கைவார் சடையினார் கண்டுமே வருகிலா
ரங்கமே புகழ்துநா மென்றுவா னவரெலாம். (உகூ)

வேறு.

அவரவர்கண் மனந்தோறு மறிவென்னுஞ் சுடர்தூண்டப்
பவரமர்செஞ் சடைகாட்டிப் பசுங்கனகத் தனிக்குன்றைக்
கவரமருந் திரிகூடக் சனவரைவாழ் கற்பகத்தைத்
துவரமரு நறுங்கனியைத் தோத்திரஞ்செய் தேத்தெடுத்தார். (ஙO)

தேவருக்கும் பெருந்தேவே திரிகூடப் பரஞ்சுடரே
மூவருக்கு முதற்பொருளாய் முளைத்தருளுந் தனிமுதலே
மேவருட்கண் வாரிதியே மேலான குணக்குன்றே
யேவருக்கு முனையல்லாற் புகலுண்டோ வெம்பெருமான். (ஙக)

ஆயார்க்குத் தோன்றாத துணையாவா யனைத்துயிர்க்குஞ்
சேயாவா யணித்தாவாய் செண்பகப்பூங் காவுடையாய்
தாயாவா யெமதுரிமைத் தந்தையா வாய்பரவார்
நோயாவாய் பணிவார்க்கு நோய்தீர்க்கு மருந்தாவாய். (ஙஉ)

மண்ணுடையாய் நீருடையாய் வன்னியுடை யாய்மருத்து
விண்ணுடையாய் சங்கநெடு வீதியுடை யாய்பாகம்
பெண்ணுடையாய் சென்னிமிசைப் பிறையுடையாய் கண்களின்மேற்
கண்ணுடையா யெங்கடுயர் காணுவா றெனைனேயோ. (௧௩)

திரிகூட வேடனுக்கு நந்தாத பதமளித்தாய்
பரிகூட நரிநடத்தும் பரமகா ரணமூர்த்தி
யரிகூட வயனறியா வண்ணமேலே யிரங்காயுன
றிரிகூடங் கண்டவர்க்குத் தீராத வினையுண்டோ. (௧௪)

புகழ்வார்க்கு நல்குதியோ புட்பகந்த னூர்முதலா
விகழ்வார்க்குங் கதிகொடுத்தா யல்லையோ வெங்கோமான்
றிகழ்வார்க்கு வினைதீர்க்குஞ் செண்பகா டவியுடையா
யகழ்வாரைத் தாங்காத நிலமுண்டோ வச்சோவே. (௧௫)

ஈயறியாப் பூந்தேனே யெழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டுந் தாய்த்துணையே
நீயறியாச் செயலுண்டோ நிகிலபரம் பரமூர்த்தி. (௧௬)

கங்கைதனைச் சென்னிமிசைக் காதலாற் றாங்கியதும்
பங்கயப்பொற் றாள்பரவும் பகீரதனுக் காவன்றே
சங்கையற நொந்தேனைத் தாங்காயோ மானேயொரு
செங்கைமிசைத் தாங்குந் திரிகூடத் தம்மானே (௧௭)

அன்றுநர காசுரனை யந்தகனை யிடழித்துத்
துன்று முலகெல்லாந் துயர்தவிர்த்தா யல்லையோ
வின்றுநீ வாராயோ வேழையே யெய்துதுயர்
குன்றுந்திரைக்கடலுங் கொள்ளாது கொள்ளாதால். (௧௮)

நஞ்சம் பொறுத்தாய் நகுபார வெண்டலையின்
வஞ்சம் பொறுத்தாய் மழுவேந்துங் கையுடையாய்
தஞ்சந் திரிகூடத் தாணுவே யெங்கள்பிழை
நெஞ்சம் பொறுத்தருள னின்மேற் கடனன்றே. (௧௯)

நாரா யணனுமொரு நான்முகனுங் காண்பரியா
யாரா வமுதே வருகவைகநிழ லமையானே
வாரா யிதுசமையம் வந்தருளி நின்னருட்கண்
பாராயென றும்பர் பரிதபிக்கு மந்நேரம். (௪௦)

வேறு.

குளிர்புனற் கொழுந்தும் வில்வத் தழைகளுங் கொன்றைப் போது
மிளிர்மதிப் பிஞ்சுங் காயும் விரிசடைப் பவளக காடு
நளிர்மறை பழுத்த வாயு நாட்டங்கண் மூன்றும் வானோர்
தெளிதர விடைமேல் வந்தான சிவதிரி கூடத் தம்மான். (௪௧)

வாடிய பயிர்கள் கண்ட மழைமுகம் போல வாடித
தேடிய வறியோர் கண்ட திரவியம் போலக கங்கை
சூடிய கனகக் குன்றைச் சித்திரச் சுருதி மன்றி
லாடிய பெருமான் றன்னைக் கண்டன ரமர ரெல்லாம். (௪௨)

கண்டனர் விழிபு நெஞ்சங் களித்தனர் களியாந் தேற
லுண்டனர் திருக்குற் றலத் தொருவனைப் பரவி வாழ்த்து
விண்டனர் பரமா னந்த வெள்ளத்துட் டிளைத்து வானோர்
தெண்டனிட் டாடிப் பாடிச் சென்னிமேற் கரங்கள் கூப்பி. (௪௩)

ஒன்றாகி யிரண்டு மாவா யொன்றிரண் டாவாய் மற்று
மின்றாகி யென்று மாவா யிலதுள தாவா யெல்லா
மன்றாகி யனைத்து மாவா யாதியா யந்த மாவாய்
குன்றாகி யணுவு மாவாய் குறும்பலா வுடையாய் போற்றி. (௪௪)

படைப்பவ னீயே யாவும் பரிப்பவ னீயே முற்றுந்
துடைப்பவ னீயே மூன்று தொழிலன்றித் திரோப வங்க
ளடைப்பவ னீயே யாவு மநுக்கிர கிப்பாய் நீயே
யுடைப்பெருந் திரிகூ டத்தா யுனையலா லுலக முண்டோ. (௪௫)

கருவியாய்ச் செயல்க ளாகிக் காலமா யிடமாய்ச் செய்யும்
பொருள்களாய்ப் புரிவா னாகிப் புவனகோ டிகளுஞ் செய்வாய்
மருவியே கலந்து நிற்பாய் மற்றுநீ யவைக ளெல்லா
மொருவியே பிரிந்து நிற்பா யுன்னையா ருணர்தற் பாலார். (௪௬)

காணவுந் தொழவுந் தொண்டர் கருதவுந் திரிகூடத்துப்
பூணவு முரியாய் நின்னைப் புலப்படத் தேடிக் காணச்
சேணதோ நிலமதேயோ சிவப்பதோ கறுப்பதேயோ
வாணதோ பெண்ணதோவென் றறிகில மறைக ளின்னம். (௪௭)

அரும்பிய பொருள்க ளாவா யல்லையு மாவா யன்பர்
துரும்பெனிற் றுரும்பு மாவாய் தூணெனிற் றூணு மாவா
யிரும்பெனு மனத்தார் காணா வெளியையோ திரிகூடத்துத்
திருந்திழை பாகா வேகா சித்திரக் கூடத்தா வென்றார். (௪௮)

வேறு.

நின்றபுகழ் வானவரைத் திரிகூடப் பரன்கருணை நிறைந்து நோக்கி, யொன்றுபெரு மாதவமுந் தோத்திரமு மினிதுவந்தோ முமக்கு வேண்டும், வென்றிவரங் கேண்மினென வருளுதலு மெங்களுக்கும் வெளிநின் றமைய, யென்றுமெழு தாவேத மன்பருக்கே யன்பனென விசைப்ப தென்றே. (௪௯)

முன்னாளி லுனையிகழ்ந்து சிறுவிதிதீ மகந்தனைந்த முரணா லன்றே, பன்னாளு மரசிழந்து பதியிழந்து வறுமையினாற் பதைத்தினின் றேம்யா, மந்நாளி லமைதொடர்ந்த சிவதுரோ சந்தனையின் றகற்றல வேண்டு, மெந்நாளு மெங்கள்பதம யாங்கள்பெற வேண்டு மென விறைஞ்சிப் பின்னும். (௫௦)

சந்துகா ரகில்வேலிச் சண்பகா டவியொருநாட் டங்கி னோர்க்கு, மந்தமா ருதக்கொழுந்து வந்தொருகான் மெய்திளைப்ப வரப்பெற் றோர்க்கு, முந்துநீர்த் திரிகூட வடவருவி யொருபொழுது மூழ்கி னோர்க்கு, மந்தவான் பிரயாகை மாகமா யிரந்தருபே றளித்தல வேண்டும். (௫௧)

என்னபா தகம்புரிந்தா ரெனினு மித்தலத்தி லெய்து வாரே
லன்னபா தகமவரை யாதவன்முன் பனிபோல்விட் டகறல் வேண்டும்
பொன்னகர மழிந்தாலு மழியாமை வேண்டுமிவ்வூர் புலியூ ராதிப்
பன்னகரம் பிரியினுநீ நன்னகர நீங்காமற் பதிதல் வேண்டும். (௫௨)

புல்லெனினு மரமிலைகாய் கனியெனினுந் திரிகூட புரத்து நீர் பாய், நெல்லெனினு மமுதெனினு முண்டவர்க்குங் கண்டவர்க்கு

நிலத்தில் வாய்ந்த, கல்லெனினு நிதியெனினும் பூண்டவர்க்கும பரக தியே காட்டல் வேண்டி, மெலலெனினு மிரவெனினும் யாங்கள்பணி செயவேண்டு மென்றார் வானோர். (௫௩)

அவ்வரங்கள் கேட்டலுமே யமுதாங்க வாய்முறுவ லரும்பநோக்கி, யிவ்வரங்கள் குற்றாலத் தியற்கைநம தந்தரங்க முமக்கா விந்தச், செவ்வரங்கள் வெளியாககம் பெறத்தந்தோ மினிப்புலவீர் சேணு டெய்தி, யெவ்வரஙகள் பெருகவென்று னெழுதாங்க மிசைநடிக்கும் விமல மூர்த்தி. (௫௪)

அந்திப்பான் மதியணிவா ரவ்வரங்க ளருளிவிடை யருளப் போந்து, சிந்திப்பாம் பொனனுடுஞ் செல்வமும்பெற் றனர்வானோர் சிவபி ரானை, நிந்திப்பார் படும்பாடு நினைதோறுந் தக்கன்மக நினைவார் நாளும், வந்திப்பார் பெறும்பேறு வாழ்ந்துதொறுந் திரிகூடம் வாழ்த்து வாரால். (௫௫)

வேறு.

சிலம்புரி திருக்குற் றாலனு சேர்ந்துபா தகங்க டீர்ந்த
பொலம்புரி வானோர் செய்கை புகன்றபின் றவர்க்குச் சூதன்
சலம்புரி சிலைக்கை வேடன் சம்புவைத் தொடர்ந்து மேனாள்
வலம்புரிப் பணில வீதி வலம்புரி மகிமை சொல்வாம் (௫௬)

16 வது தேவர்கள் சிவத்துரோகந்தீர்ந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௯௨.



## பதினேழாவது வேடன் வலம் வந்த சருக்கம்.

தரையி லாலயம் வலமுதற றிருப்பணி சரியை
கிரிச னெம்பிரா னருச்சனை புரிவது கிரியை
யொருமை யுள்ளுறத் தியானமுற் றிருப்பது யோகம்
பொருவி லானுட னிரண்டறக் கலப்பது போதம். (௧)

அன்ன நால்வகைச் செய்கையு நாற்பத மளிக்கும்
பன்னு நான்கினும் பணியணி பரமர்பொற் கோயில்
முன்னி யேவலம் வருவது சரியைபன் முறைபின்
மன்னு மோர்வகை யன்னது விரிக்கிலேழ் வகையாம். (௨)

மதிலி னுட்புறம வலம்வரல புறம்வலம் வருதல்
விதியி னுறகரங் குவித்தனமெய்த தோத்திரந் தியான
மெதிரி றைஞ்சுசாட் டாங்க மெய வலமென வேழு
மதிக மொனறிலொன் றுயிர மடங்கென லாமால் (௩)

நகர நாடொரு தேயநற் கடைநற் றீப
மகர வாரிசூழ் புவனமெண் டிசகுவா னுலகம
பகரு மன்னராயப புரந்துமிவ் வெழுவகைப் பணியோர்
சிகர விலலியா ருறைசிவ லோகமே சேர்வார். (௪)

கான வேடுவன கொலையுங்கோ மாயுவின களவு
மான வோடிய வலமொரு வலமெனும பிழையு
மேன பாவமு நீக்கியெம பரமர்குற றால
மோன மாககதி கொடுததவா கேண்மென மொழிவான. (௫)

காலத் தாம்பிரக் கனிகள்பந் தாடுதெண் டிரைககைக்
கோலத தாம்பிர வனனியாங் கொழிதிரை நதியாய
ஞாலத தாம்பிரக குன்றம்வா ரிசந்தமிழ சுருதி
மூலத் தாம்பிர மனபெருந தவக்குறு முனிவன. (௬)

போத னுல்விதி யாப்பெரும் புடார்ச்சன புரத்து
வேத நாயகர் விண்டொ யிருததலோன் மேவ
நாத னுர்திரி கூடமால் வரையொடு நறுமபார்
மாத ராணமுலை யிரணடெனத திரண்டது மலையம் (௭)

நடக்கும யாவரும் வடதிசைக குழுமலான ஞால
முடககு நீககிடத் தென்றிசைத் தோன்றிய முனிவன்
குடக்கு நோக்கிய மதியணி வார்திரி கூடம்
வடக்கு நோககிமெயத் தவம்புரி தமிழமலை மலையம். (௮)

இந்த மால்வரைச் சாரலின சிறுகுடி யிருககும்
விந்தை வார்சிலை வீரனும் வேடுவ னனகரு
மைந்த னுப்வல னென்பவன் கொலைதொழில் வலியாற்
சந்த னுடவிச் சற்பமா மெனத்தலை யெடுத்தான். (௯)

வேறு.

செருப்புஞ் சானமுந் தேய்த்ததிண் காலினன
பொருபபி னோங்கி வளர்ந்த புயத்தினா
னெருப்பி னீர்பெய் நிறத்தினன செங்கடா
மருப்பு மானமுறுகருமவன் மீசையான. (௧௦)

மைய லுங்கொடுமை பாவமும் வஞ்சமும்
பொய்யு மோருருக கொண்டன புன்மையான்
வெய்ய வூனுண்ட தந்தங்கள மேனியுங்
கையுங் காலு மொயத் தன்ன கவடியான் (௧௧)

முயலு மான்களு மூரிக் கலைகளுங்
சயலுஞ் சேல்களுங் கானமுஞ் சேனமுங
குயிலும் வீட்டுங் கொலைத்தொழி லேநடை
பயிலுங காலத்தின் முன்பயில் பாண்மையான் (௧௨)

தோயும் வாடை யெடுத்துச் சுவடுபோய்
நாயு நாண நடக்குந் திடத்தினன்
காயுஞ் சிந்தைக் குழிநரிக கள்ளத்தான்
பாயும் போர்க்குப் பதுங்கும் புலியனான். (௧௩)

கோப மின்றிச் சிவக்குங் கொடுங்கணான
றீப மென்ன வெரிசிகைப் பங்கியான
றாப மாகி யெழுமுயிராத துண்டத்தான்
பாப மன்றிப பழிக்கும் பயப்படான். (௧௪)

உடலை யேவளர்த் தானுண்டு பல்லுயிர்ச்
சுடலை யேயெனத் தோன்று முதரத்தா
னடலை யேயெனு நஞ்சுறை நெஞ்சினா
னடலை யேயறி யாமுழு முண்டத்தான். (௧௫)

மாலுந் தென்றலுஞ் சேர்மலை யாசலங்
கோலு நீள்வரைக் கொல்லி மயேந்திர
மேலும் போகி விலங்கொடு புள்ளெலாங்
காலந் தோறுங கருவறுத் தானரோ. (௪௯)

அவகண் வேட்டமெய் தாதயல் சூழ்வரை
யெங்கும் வேட்டம புகுவதற கெண்ணியே
மங்குல் வேட்ட மலையதது ளார்ககெலாந்
தங்கு வேட்ட மெனப்பறை சாற்றினான். (௧௭)

வெள்ளி வாரத்தில் வேலனை முனைபுகூஉய்த்
தெள்ளி தாம்வரைத் தெய்வதம் போற்றுபு
துள்ளி யாடித் தொழுது வணங்கெனா
வள்ளி யிந்தன னைவன மாதியா. (௧௮)

முதுபு னத்தினை யும்முளை தோரையு
மதுவுங் கந்தமு மற்றவுங் கொண்டவன்
கதுமெ னச்சனை சூழ்கிக் கடிகமழ்
புதும லர்ப்பெய்து பொங்கவி தூவியே (௧௯)

பரவி யேத்திப் பலிவைத்த சேடமும்
வரவி சேடமுஞ் சொல்லி வழங்கலும்
விரவு நல்ல நிமித்தென வேடாகோன
சுரவு தாங்கி யொடுதொடு தோலிட்டான். (௨௦)

அம்மலைக்குரி யானவ னுதலால்
வெம்மலைப்புற வேடுவர் யாவருஞ்
செம்மலைப்புடை சூழ்ந்து செருமினர்
கைம்மலைக்குலங் கார்மலை சூழ்தல்போல். (௨௧)

ஆங்கு நின்றவர்க் காதி முதியவன்
வீங்கு பல்குர லாங்கை விளித்தலுந்
தீங்கு காட்டிய சேதமென் றுன்மறுத்
தோங்கு மாக்கமென் றுன்மற் றொருவனே. (௨௨)

வேறு.

பரிசையுடை வரியதளாற் பரியபுலிப் போத்தானு
னரவுரிகண் முதலசக்கி யடற்கூளி யெனநின்றான்
சுரிகையெனும் படைதுளக்கி யிடிம்பனெனத் தோன்றினான்
கரடியுரிக் கஞ்சுகத்தாற் கார்மேக மெனப்பொலிந்தான். (௨௩)

வளைதடியா வளைகோட்டுப் பகடுபோன் மருங்கேற
முளைதடியர் மூரிமருப பிரலைபோன் முன்னடப்பக
கொளையுடுத்த கொடுமரத்தர் வரையாட்டின குலமேய்ப்பத்
திளைதிளைத்து நடுவருமோர் சிங்கமெனத் தோன்றினன். (௨௪)

ஆளெழுந்த திரண்முழக்க மலைசுருட்டுங் கடலேய்ப்ப
வாளெழுந்த வயப்படைகண் மகரமச்ச நிரைமானத்
தூளெழுந்த படலம்போய்ச் சுடர்மறைப்பப் படரிருளால்
வேளெழுந்து தனகரியா மெனத்திகைப்ப வெளிக்கொண்டான.()

தளிரிலையு மோலைகளும் பாளைகளுந் தாளையராய்க்
கிளைகிளைவல் லயந்தரித்துத் தருக்குலம்போற கிட்டினு
ரிளையர்கா ளையராய விறவுளரும் வனசரரும்
பழையர்களுங் குனாகளும் பறம்பருங்கி ராதருமே. (௨௬)

வேறு.

கொடிபி டிப்பக் குழல்கொம்பு தொண்டகத்
துடிமு ழக்கந் துவைத்தெழ ஞாளிகள்
செடிகள சுற்றுபு வாடை தெரிந்தெழத்
தடமெ டுத்து வலைஞர்பின் சாரவே. (௨௭)

சென்று காணுஞ் சிலம்பும் பதுக்கையுந்
துன்று சாரலுஞ் சூரலங் கானமுங்
குன்றும் யாறுங் குவடும் வளாகமு
நின்று மோடியு நீடினர் தேடினர். (௨௮)

காடு முற்றக் கலைத்தெழு வார்சிலர்
மாடு சுற்றி வலையெறி வார்சில
ரூடு பற்றி யொடியெறி வாரசிலர்
கோடு பற்றிக் குமுறிநிற பார்சிலர். (௨௯)

வேடு பாய்வ ருழுவையை வேழத்தின்
கோடு சாய்தரக குத்துவர் மேல்வரை
யாடு பாய்வ ரறைபாய்வர் சூகர
மோடு பாய்வர் முயன்மறித் தோடுவார். (௩௰)

அழுங்கு கிரி யணில்கவு தாரிபுள்
ளொழுங்கு காடை யுடும்புபுல வாயகலை
யெழும்ப நாய்கலைத் தேறிய திக்கெலாங்
கழுந்து போல்பவர் கைசெயுஞ் சூழலவாய். (௫௧)

நீல மொன்றிய குன்றினை நீள்சூழ
கால மேகம் வளைந்தெனக் கானராத
தூல மொன்றிய மெய்யெங்குஞ் சுற்றலா
லோல மெனறதோர் மும்மத வோங்கலே (௫௨)

தந்தி கூடபிடச் சக்கரத் தானென
வந்தெதிர்த் தனன வென்றி வலனெனபரன்
முந்து தாவிமுன் னேகினர் யாரையு
மந்த மாசுண மன்னி விழுங்குமால். (௫௩)

கட்டு நாகங் காரமென நேமியாத்
தொட்ட வாளியி னூற்றொலைத் தானையை
விட்ட மாவின விடுத்தனன மீனவ
னிட்ட கார்தலை விட்டது மெனனவே. (௫௪)

வல்லை பார்த்தவின் விட்டபின் வாரணஞ்
செலலும் வேடரைச் சீறித் துரந்ததால்
வெல்லும் வல்லிட மீட்ட சகாயனைக்
கொலல வேகுங் கொலைவரி வேங்கைபோல்; (௫௫)

ஆனை தாககறு மாங்கெதிர்ந் தான்வல
னேனை வேட ரிரிந்தன ரேகினார்
தானை வேந்தைச் சமரில்விட் டோடிடுஞ்
சேனை யேயன்றித் தெவ்வரும் வேண்டுமோ. (௫௬)

சோனை யொத்த சுடுசர மாரியால்
வேனில் விட்டென வேழம்விட் டேகலும்
வானி றைத்து வெறித்தது மானவே
கானெ ருத்தனுஞ் சாபமு மாய்நின்றான். (௫௭)

சேணில வேடரைத் தேடலுங் காண்கிலா
னாணி லாம லொருபகல் வெப்பினன்
வீணி லோடும் விலங்குபுட் காண்டலும்
பாண மொன்றிலன் பறகறித் தேகினான். (௩௮)

கான மெங்கு முழன்றொரு கார்முயல்
கூன விழ்குணி லாகக் கொலைசெய்தான்
மான வேடிவன் வனபசிக் குண்ணவே
யூனை வாட்ட வுறுகனல் காண்கிலான். (௩௯)

கொம்பு தேடிக் கடைந்து கொடுங்கனல்
வெம்ப வீழ்த்தலும் வெண்ணெய் படாமுனம்
பாபு தாழி யுடைந்தெனப் பாய்ந்தொரு
சம்பு வூனைக் கவர்ந்தது தாயதே (௪௰)

சம்பு வோடித் தசைதனைக் கவ்விய
சம்பு நீணமரக் காவுந் தனிவரைச்
சம்பு வோடையுஞ் சாரலுந் தாவிப்போய்ச்
சம்பு வாழ்திரி கூடத்தைச் சார்ந்ததால். (௪௧)

ஓட வோடிப் பவக்கட னீந்தவோ
ரோட மேறுதல் போலுயா மேறகதி
கூட வோர்வழிக் கூடுக லாய்த்திரி
கூட மால்வரைச் சாரலிற் கூடினான். (௪௨)

வேறு.

அனைய வூனைவே றமைத்தபின் வினைபிரித் தகன்று
தனையும் வேறுறப் பிரித்தவ னெனத் தனித்தான்
வினைபி ரித்தபின் சம்புவைத் தொடருமெய் யனைப்போற்
றனைவி லூன்கவர்ந் தேகிய சம்புவைத் தொடர்ந்தான். (௪௩)

ஊரை நோக்கல னுறுபசி நோக்கல னுடலின
சோர்வு நோக்கல னடித்தமுட் கடித்தரு ழரவம்
பார்வை நோக்கல னிகலனைமேற் பார்த்தகண் பறியான்
பூர்வ நாடியுண் ணோக்குமோர் யோகியே போன்றான். (௪௪)

வரியு டற்பொறி மாசுண வாய்ப்படு மதம்பாய்
கரியை மீட்டவன் கைப்படை தொலைந்தகா லத்து

நரியின வாய்த்தசை மீட்கவும வலியினறி நலிவான்
பரிய கூகையை வெல்லுமோ காகமும பகலில். (சரு)

நிவந்த சாலெனலா மோடியு மோடியுந் தவித்துங்
கவர்ந்த ஊனைவாய் விடுகில தோரியுங் காங்கசால
சிவந்து மெய்யெலாங் கருகியும வேடனுந் திரும்பா
னுவந்த ஊனபொருட் டுயிரையு மதித்திடா ருலகோர் (சசா)

தொடர்வ னெட்டுவன் வாடுவ னோடுவன றுடிபபன
படப டத்துடல் சோருவன் பொறியெழப டார்பபன்
குடர்கொ திப்பதும் பார்க்கல னிகலைமேற் கொதிப்பான
மிடல்கு றித்தபின றமதிடர் பாரப்பரோ வீரர். (சஎ)

முன்பு தெவ்வர்தந் திறையினமேற் றிறைகொளு முனைவன
பின்ப தானைவிட் டூனைவிட் டோரியின பெயாவா
னின்ப மெய்துநா ளின்பமே லின்பமா மெவர்க்குந்
துன்ப மெய்துநாட் டுன்பமேற றுன்பமே தொடருமே. (சஅ)

விரைவிற் சமபுவைத தொடர்தலால வியன்றிரி கூட
வரையைக கண்டனன் வரைபொரு கடல்வட வருவித்
திரையைக கண்டனன சித்திர நதிப்பெருந் தீர்த்தக்
கரையைக் கண்டனன் பிறவியங கடறகரை காண்பான. (சகூ)

இருவ லம்புரி நந்தன வனம்புகுந் திமையோர்
தருவ லம்புரி சண்பகத தண்டலை தாவித்
திருவ லம்புரித் திரளொடு சித்திர நதிசூழ்
வருவ லமபுரி மறுகுசூழ்ந் தனன்வினை மறுக. (ருo)

கிளரு முகதலை யருவிபாய் முத்தலைக் கிரியின்
வளரு முககணு ரமுதுறை கோயிலசூழ் வரலா
லுளரும வெம்பசி யொழிந்தது பகைமையு மொழிந்தான்
றளரும் வெவ்வினை தணநதபோ லிகலனைத் தணந்தான். (ருக)

தணந்து தத்தம இடங்குலாய் முடிவின்மா தவரும்
வணங்க மானமேற் கயிலையி லேகிவல் வேட
னணங்கு பாகர்மெய் யருளினுற சிவகண மானு
னிணங்கு சம்புவுங் கிங்கர னெனப்பொலிந் ததுவே. (ருஉ)

தலைவர் சங்கமா மறுகினை வலமவரு தவத்தாற
சிலைவல வேட னுரு சம்புவுரு சிவசதி சேர்ந்த
நிலைமை கூறினன் சூதனமா தவாக்குமே னிகழ்தது
மூலவில் யானைசெய் பூசையை யாசையா னுரைப்பாம்　　(௫௩)

பதினேழாவது வேடன் வலம் வந்த சருக்கம் முற்றிற்று.
ஆகத திருவிருததம் ௪௦௩௫.

---

## பதினெட்டாவது யானை பூசித்த சருக்கம்.

மூநது மெண்வகைப் பததிநித் தியமுதன் மூனறு
லைநது சுததியா லாகம விதியினு லரனை
மந்தி ரததினுல் வருபுனல் போதுமற் றவையாற்
புந்தி வைததுமுக் குறியினிற புரிவது பூசை　　(௧)

அந்த மெய்ந்நெறி யறிகலா வடுகொலை வேழ
மிந்து வார்சடை நன்னக ரிறைவனை யோர்நாள்
வந்து பூசனை புரிந்தாநற் கதிபெறு மகிமை
சிந்தை யன்பினுற் கேட்பவ ருயர்கதி சேர்வார்.　　(௨)

அருமைப் பேடைகண் களிப்புறக் களிமயி லகவும்
பெருமைக் காரெனும் பருவமுங் குருகிளம் பெடைக
ளொருமைச் சேவலி னுடனுக் கூடல்கூர் குளிரும்
பருமைக் கூதிரி னிடைவிடா தன்றில்சேர் பனியும்.　　(௩)

பாங்கு தண்கயப் பயங்கயத் தலர்முகம் வாட்டுந்
தாங்கு பின்பனிக் காலமும் வண்டுதா லாட்டத்
தூங்கு சீரிள வேனிலும் தொலைந்திடச் சுடரோன்
வீங்கு வெய்யில்வாள் விதிர்த்தெழூந் ததுமுது வேனில்.　　(௪)

பாரு மண்டமும் படர்கதிர் தெறுதலாற் பரவை
நீரும் வேறொரு நீரினை வேட்டுநின் றேங்கு
மூரு லாவுதண் மதியுமோர் மதியைவேட் டுருகுங்
காருங் காரினை வேட்டுடல் விளர்கதுமோர் காலம்.　　(௫)

துள்ளு தெண்டிரைப் புலவுநீர் சூலவியு நிலமேல்
வெள்ளி வீழெனக் கார்துளி யாமையால் வெதும்பிக்

கள்ளி பாறைப பொரிந்தது கரிந்தது வரையும
வள்ளி யோர்கொடை மறந்திடு கயவரோ வளாயபார். (௬)

வருந்து காணிடை வாணிடைச் சுழலவன பருந்து
பருந்தி னீழலி லொதுங்குவ விரிபணை பாந்தள
கரந்த பாந்தளின படநிழ லொளிப்பன கருப்பை
பொரிந்த கானெரி தனிமெனப புகுவன புனமான. (௭)

மத்தி யானமொத திரவினும வெதுப்புமவன கோடை
மத்தி யானபல லுயிர்களை விடுக்குமோ மதமபா
யத்தி யாயருந் தோலதாய்த தூங்கலா மசல
மத்தி யாயருந் தோலதாயத தூங்கலா னதுவே (௮)

இன்ன காலைபிற பன்னமு மிரைபெறு திரங்கிப
பன்ன காதிகள் போறபவ னுசனம பழகித
துன்னு நீரென வானலை கானலைத தொடாந்து
தன்ன மாமெனச் சுழனறதோா முமமதச் சயிலம். (௯)

கடவு திசகெலாங் கனலவது புனலெனக காட்டித
தொடர்த ரததப வகனறுபோயத தொலைதருங கானல்
வடவ ரைசசிலை வரதனைப பொருளென மதியா
துடனும் பொயயினை மெயயெனுஞ சமயமொத தறுவே. (௧௦)

பருகு நீரின்றி யுணவின்றிக் குஞ்சரம் பசியா
லுருகு தாகத்தா லுலககுமுன் னூழிநாட் புரந்த
தருமம போலவந தடுததது சண்பகத தடங்காக
கருது மெயயின்முன பொய்யென மறைந்தது கானல். (௧௧)

பற்ப வாவியு நதிகளும் வறந்துபா ருலகிற்
பற்பல காவெலா முலர்ந்தகா லமுங்குளிர் பயிராய்க்
கற்ப காடவி நிகர்தததது செண்பகா டவியே
கறப காலமுந் தானழி யாதமை காட்டி. (௧௨)

கான வாரணம் பேடைசேர் பதுக்கையுங் கமஞ்சூற்
கூன வாரண வாவியுங் குளிர்மரக் காவு
மோன வாரணக் கார்பயின் முத்தலைப் பொருப்புந்
தான வாரணங் கண்டதோ ரதிசயந் தழைப்ப. (௧௩)

அடுத்தி டர்சுடுங் கடுவெயிற் கானம்விட் டகன்று
மடுத்த டங்குளிர் செண்பகப் பொதும்பரில் வரலுந்
தொடுத்த சூக்கும மெய்துபு தூலமாஞ் சுமையை
விடுத்த வாவிபோ லயர்வுயிர்த் தனுமத வேழம். (௧௪)

முன்னெ லாம்பசிக் குலைந்ததோர் மும்மத வேங்கல்
பன்னெ டுங்கவிப் பாணனார் பாணியைப் பரிவாற்
சென்னி வைத்தவா றிருமுகங் கொடுத்தொரு சேரன்
பொன்னின் மாளிகை புகுந்தெனப் பொழில்புகுந் ததுவே. (௧௫)

வாழை யிறகுலை மறுகரித் தலையெனத் திருகிக்
கூழை முகக்கிமாங் கனியுண்டு கொழுந்திக் குலைசேர்
பேழை யைத்திறந் தெனப்பல வினிறசுளை பிதிர்த்துத்
தாழை முப்புடை நறுங்கனிச் சாறுண்டு தாக்கி. (௧௬)

ஆக மானமத முவட்டுற நுகர்ந்ததா ளசலந்
தாக மானது கொடுபரி தபித்தலுந் தவத்தோர்
போக மேதரும் யோகமே நிகர்த்தது பொருப்பின்
மாக மாநதி வருதல்போல் வரும்வட வருவி. (௧௭)

தூபம் போன்முகி லடர்வரைச் சுடர்மணி கொழித்துத்
தீபம் போலொளி யருவிகாண் டழுந்தழை பெருவிமாத்
தாபம் போய்த்துயா தவிர்ந்தது படிந்தயெத தவத்தோர்
பாவம் போய்விடப் பவத்துயர் பறிபடும் படிபோல. (௧௮)

அப்பெ லாநுக ராவலாற் கரத்துமொண் டருந்தி
வெப்பெ லாமறக் குளித்துமெய்ப் புறமெலாம் வீசி
வைப்பெ லாம்புக வலையமிட் டிறைத்தது மதமா
வொப்பில் கோளரா மதியையுண் டுமிழ்வது கடுப்ப. (௧௯)

இருமை நாகமே விந்திரன வயிரவா ளெறிப்ப
வொருமை நாகமே யெனப்புனல் படிந்தயர் வுயிர்த்துப்
பருமை நாகநீள் பணைக்கையே லெடுத்தது டடாசோட்
கருமை நாகமென் றிருமதி யொருமதி கலங்க (௨௰)

நத்த மோர்மருப் பிருபிறை மும்மத நால்வாய்ச்
சித்த மைந்துடைச் சிந்துர மெடுத்தெடுத் தேந்தி

முத்த வாரிபொண் டெறியுநீர் நிகர்த்ததான முழங்குஞ்
சத்த மாமுகி லெண்டிசைப் பொழியுநீர்த் தாரை. (உ௧)

கந்த ரத்தெழிற் கறைபடக் கவுண்மதக் களிறுமிச
சிந்து ரப்பெருஞ் சிந்துர மெடுத்தெடுத் தெறியச்
அந்த ரத்தன தடலைமிசை சொரியு நீர்த்தாரை
மந்த ரத்தட வரையிலவி ழருவியை மானும். (உ௨)

மூரி வாரண முதுபனைக் கரத்துமொண் டெறியும்
வாரி நீர்தொறும் வரையினமா மணிகிடந் திமைப்ப
நாரி பாகர்மெய் யனபரா நமிநந்தி யடிக
ணீரின் மேல்விடு திரைசுடா விளக்கினை நிகர்க்கும் (உ௩)

தூங்க லாமெனத் துறையில்வீழ் வாரணந் துயர்நீத்
தோங்க லாமென மதர்த்தெழுந் தகிழ வுருவாய்த்
தேங்க லாநீத் தடம்படி திலலைவேட் கோவர்
நீங்க லாதபே ரிளமைபெற் றெழுந்தது நிகர்க்கும். (உ௪)

குளித டம்புன லருவிதோய்ந் தகன்றகைக் குன்ற
மளிய தண்டலை வண்டலைத் துகுத்ததா தாடித்
தளிர்ப ரிந்துபைம் போதுநா றுய்த்த தழைபல சிதறி
நளிர்த டஞ்சினைக் கனிகளு நனியுகுத் ததுவே. (உ௫)

துரும்ப லாபல மறிகலா மதகயஞ் சொரிநீர்
நறும்ப லாதிபூத் தளிரெலா நன்னதித் துறைவா
யுரும்ப லாயிர வண்டகோ டிகளுயிர்க் குயிராய்க்
குறும்ப லாவுறை குழகர்பா னிறைந்தன குழுமி. (உ௬)

திமில வாரண முமிழுநீர் திண்ணனம் பரனார்க்
குமிழு நீரதாத் தழையெலா மவன்சிகை யுகுக்குங்
கமழும் பூவதாச் சிதறிடுங் கனியவன் கனிவா
யமிழ்த மாகமென் றளித்திடு மவிகள்போன் றனவே. (உ௭)

கருது முறபவச் சுகிர்தமோ செண்பகா டவிசேர்
தருமமோ வட வருவிநீர் படிந்தமெய்த் தவமோ
பருமை வேழமுய்த் தனவெலாம் பழமறைப் பலவி
னருமை நாயகர்க் கற்புத மாயின வம்மா. (உ௮)

பருகி விடடெறி புனலபி டேகமாம் பனைக்கை
சருகு திர்ததது தலைழயுதிாத தருமருச் சனையா
மருகி லுகககாய் கனிநிவே தனஙகளா மயன்மா
லிருவர் பத்திசெய் யொருவர்தம் பூசையா மிதுவே (௨௯)

இருகை மஞ்சன மாகிலு மொருசையா லெடுத்துப்
பருகு தண்புன லாகிலும பச்சிலே பசும்புற்
சருகை யாகிலு நனனசாப் பரமர்தாள் சாத்தி
யொருமை யெய்திலார் பேதைமை யாமெனை வுரைக்கேன. (௩௦)

வேறு.

வளக்கார் மதவேழங காவினிடை வைகியநாட்
வளக்கான் மூத்தளப்பார் பாண்டிவள நாடனைத்துந்
வளககாய் கோடையெலாந் திரிகூடஞ் சேர்ந்தார்க்குத்
துவளக்காய் கொடியவினை தொலைந்ததெனத் தொலைந்ததால். (௩௧)

துந்நெறிக்கட் சிவபெருமா னருள்போல முகில்சுரந்து
செந்நெறித்தண் டமிழ்நாடு திங்கண்மூர் மாரியும்பொழிந்து
பொன்னுமுத்துந் துறைசொரிப்ப வெங்கும்வளம் பொருந்தியதான்
மென்னெறித்தந் தாவளமு மேயறுதந் தாவளமே. (௩௨)

திரிகூடப் பெரியபிரான் சிவபணிசெய் மெய்படியார்
தரிகூடப் பெருப்புவனந் தனிவாழ்வு தழைத்தோங்கி
பரிகூட வயனறியா வரன்பதமே சேர்வரென
திரிகூட விரிதருரைக்கும் வேதவாக மியந்தழைப்ப (௩௩)

ண்புலத்து மதவேழ நனிபோகம் பொசித்தவைமே
லன்புலப்பப் பூதலத்தி லுறுபவம்விட் டொழிந்தநாட்
டென்புலத்தான் றூதர்வரச் சிவகணத்தா ரெதிரேறுார்
புன்புலத்தின் கொலைவிலங்கு புரிதருமம் யாதெனவே. (௩௪)

டுவன்றா துவர்வினவ நம்பர்சணித் தவர்நோககிக்
கடுவன்பா னுமைசிவந்த சனியாகத் தனிதாவு
நெடுவன்சீர்க குறுமபலவி னேசனைப்பூ சனைபுரிநது
கொடுவன்பா தகந்தவிர்ந்த குஞ்சரங்கா ணிதுவென்றார். (௩௫)

அறபேறும் பூசனைக்கோ விளையாட லருச்சனைக்கோ
றபேறு பெறவதெனு நமன்படர்க்குச் சிவகணத்தார்

சறபேறுங் கொடியாகன கழலகண்டோ தழை தெரிந்து
முறபேறு பெறறுயர்ந்தான முசுகுந்த னெனமொழிந்தார். (௩௬)

எங்குளா ரறிந்தறியா திபறறுகினற பூசனைகளுங்
சங்கைவே ணியருநீள கநிகாடடு மெனபார்மு
னங்கசா தனமாக வுருமபாவக கடலசெடதமும
வங்சமாயத் தோனறியதால வானிலொரு புடபசகதோ (௩௭)

கூற்றினார் விடுத்தகலக குஞ்சரததைப் புடபகதமேத
ரேறறினா ரேறறுதலும் வேதிமேசு ிருமபதுபோன
மாறறினான் கரியுருவ மாதங்க வுருவானை
போறறினை கயிலையிறபோய போதநா யகனடிகபீழ. (௩௮)

சென்றடியிற் பணிதலுமே திருவருடகண் பார்த்தருளி
யன்றுசமைத திரிகூடத் தருச்சனைநீ புரிந்தமையா
னனறுகெச சுருணனென நந்திகணத் தினுபயாந்து
முன்றிவிடைக் கிங்கிரநகரு முதலவனென வாழுகென்றார் (௩௯)

மைகொடுககும் பழவினைபோய வளர்பூசைப பலன்கிடைக்கும்
பொய் கொடுககும விலங்குருவம புதமேனா யெவ்வுயிரககுங
கைகொடுககும் விடையார்ககுக கைகொடுககும பணிபூணடான்
பெய்கொடுக்குந் திரிகூட மகிமையாா விளமபுவார். (௪௦)

சிந்தைசெயா நரிவேடன் சென்றதே வலமாகத
தந்தி செயும் விளையாட்டே தருபூசை முறையாக
விந்திரனு மேததரிய திரிகூடத தெயமானைப
புந்தியுடன வலமவருவார் பூசிபபார் பேறெனிதோ. (௪௧)

இன்னகரி செயும்பூசை யியம்புதலு நயநதேததிப்
பொன்னகமா மிமயவரைப் போநதருளெம் பெருமாட்டி
தன்னருமைப் பெருந்தவமுந் திருமணமுஞ் சாற்றுகெனப்
பின்னருமா தவர்வேண்டப் பேசுவா னுயர்சூதன. (௪௨)

18 வது யானை பூசித்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௪௦௩.

முதலாவது தானவைபவ காண்டம் முற்றுப்பெற்றது.





உ

கணபதி துணை.

சிவமயம்.

## இரண்டாவது சிவரகசிய காண்டம்.



### காப்பு.

பெருமதத்தி னொருகரத்து மாருதமெவ் வுயிர்க்குமுயிர்ப் பிறக்கங் காட்ட, விருகரத்தங் குசபாசம பரமதத்தி னிடைவீழா தெடுப்ப வீரந், தருகரத்து மருப்புவினைத் துரிசறுப்ப மோதகக்கை சைவத் தெய்வ, வொருமதத்தின சுவைநிறைக்கு மும்மதசெண் பகக்களிற்றை யுளத்துள் வைப்பாம்

### முதலாவது உமைதிருவவதாரச் சருக்கம்.

தேகமோர் மன்னுயிர்கள் சுவர்க்காதி போகமுண்டு சேடமுண்ணும் [வி
போகபூமியின்வரம்பு தருமமெனும பயிர்வளர்க்கும் பொழிறனோர்வே
யோகமா தவர்தவத்தின விளைவுபணிக் காலயமு வுலகுக்காணி
மாகமார் சடவுளரும் வரந்திபு நலலறமும் வளரத தாணி. (க)

தாருதிக்கு மணியுதித்தும் பொன்பூத்தும் புவிமடந்தை தரிக்கு மோலி, காருதிக்குந் தொறுமவட்கு வாருதிகருங் களபமுலை கலையாய்ச் சூழ்ந்த, வாரிதிக்கு நீருதிக்கு நாலுதிகரும் வரைகடவா மான வேலி, தேருதிக்கு மழற்கதிரைச் சீதமதி யாக்குபனிச் சிகரக் குன்றம். (உ)

பொன்னினு லயன்கமலப் பொகுட்டாகும் பசுந்தழையாற் பொது ளுஞ் சோலை, துன்னிநாற றிசைநிரம்பி மால்வளர்பச் சால்போலுந் துகினத் தோய, மன்னலாற பரமனுறை வடகயிலை வரைநிகர்க்கும் வடிவு மூன்று, முன்னினோர் பணிசசிமைய வுயர்வரைமுத் தேவியரு முறழு மாதோ. (௩)

வேறு.

அறைகு திக்கும்வெள் ளருவியை யானைமத் தகமேன்
மிறைவ ருசுதும்வா ளரியெனக் கரியினம் வெருவும்
பிறைவ ளைப்பெருந் துண்டகதுப் பெரும்புயல் வரையைச்
சிறைவி ரித்தசிம் புள்ளென முழைபுகுஞ் சீயம். (ச)

யாவ ரம்பையர் கண்ணினர் நண்ணின ரிவரைத்
தேவ ரம்பையர் பணிவது சிறுகுடிச் சிறூர்பாற்
காவ ரம்பையில் கனியளித் திமையவர் ககனந்
தாவ ரம்பையின் கனிகொளு நனிகொண்மாச் சயிலம். (ரு)

சமைய மந்தர மத்திம தாரம்வண் டிசைக்கு
மமைய மந்தரத் தசுணமா வலமரு மடவிச்
சிமைய மந்தரத் தவருறை குலவரை தெரிப்போ
ரிமைய மந்தர மென்னலான் முதல்வரை யிதுவே. (சா)

வேறு.

மேருவார் மந்தர நிடத வெற்புளார்
பாருளார் திசையுளார் பாத லத்துளார்
ஞாருளார் கற்பகச் சோலை யார்முதல்
யாருளா ரவர்தவத் தெய்து மால்வரை. (எ)

கடும்புலி முழையிடைக் கலைகள் காறிமிர்த்
தொடுங்குமே யரிகளுங் கரியு மோருழைப்
படும்பணி மயிற்சிறை யடையும பானுவு
நடுங்குறப பொழிபனிச் சிசிர ஞாடபிறல் (அ)

அகலிடம் விசும்புதொட் டழன்று காய்கதிர்ப்
பகலவன் றேர்ப்பரி பச்சை யாயது
முகநிகா மதிக்கலை முடங்கு பான்மையுஞ்
சிகரவெம் பனிவரைச் சீதத தாலன்றே. (கூ)

தடவரைத் தென்றிசை சார்ந்த வெய்யவன்
வடபெருந் திசையினும் வருந்திச் செல்வது
குடமுறு பனிவரைக் குளிர்பொ ருதுபோய்
மிடலவட வனலின்மெய வெதுப்ப வேகொலாம். (கO)

கற்பக மிசைபபடர் காம வல்லிகள்
வெறபக மெறிபனித் திவலே வேய்ந்தன
நற்பகக் கொடிச்சியர் நாணிற் கோத்திடும்
பொற்பக நித்திலக் கோவை போலுமால். (௧௧)

தமையரா மடந்தையர் தணப்ப வானவ
ரமையன தோள்பிரிந் தலக்க ணெய்துவார்
சிமையமார் தவத்திறைற் சேர்வ ராதலா
லிமையவர் துதிசெயு மிமய மால்வரை. (௧௨)

வேறு.

அந்தமலேக் காசாறு ளுலான சிற்றுதாக்
கந்தமலே மலர்க்குழலாண் மேனைகா வலன்வானோர்
வந்தமலே புரிகோட்டு மைந்நாகன் றனேமகவாய்த்
தந்தமலே தனேப்பெறுவா னெடுங்காலந் தவம்புரிந்தான். (௧௩)

அக்கண்ண ணொருகண்ணே யடிசாத்த வருள்புரியு
முக்கண்ணன் முடிசாத்து மறுகண்ணன் முளரியந்தாண்
மெய்க்கண்ணன் புறநோக்கி விரதமுயல் வெற்பனுக்கே
யெக்கண்ணு மெய்தாத தவப்பயனவந் தெய்தியதால். (௧௪)

வேறு.

மன்னவன் றவமோ மண்ணும் வானமு
முன்னர்செய் சுகிர்தமோ முதுவெற் போசுனைப்
பொன்னவாங் கமலமென் பொகுட்டி லீன்றதா
யின்னமே ருலகெலா மீன்ற செல்வியை. (௧௫)

சேயிழைக் கவுரியைத் தெய்வப் பங்கயக்
கோயிலிற காட்சிகண் குளிரக் காண்குற
வாயிர நயனமோ வனந்த நாட்டமோ
மேயின னற்றைநா ளிமய வேந்தனே. (௧௬)

அடுத்தன னுவாமதி கண்ட வாழிபோ
லெடுத்தனன் பொன்னேயீன் றெடுத்த வாரிதி
கடுத்தனன் கயிலேயார் வாழ்வைக் கண்ணுறீஇக்
கொடுக்கனன் மேனையாங் கொம்ப ருள்கையில் (௧௭)

வாங்கினள் செலவியை வாங்கி வாழ்வுபெற்
றோங்கினள் பாலசுரந் துகள வார்முலை
வீங்கினள் களித்தனனை மேனை வானெலா
மேங்கின குரவைக ளெழுந்த பலவியும். (கஅ)

வேறு.

இசசை கூர வெடுத்தனண் மார்பணைத்
தசி மோபயப் பசுநரம் போடியே
கச்சை மீறு தனகவள் ளத்தினபால்
பச்சை வல்லி பவளத்திற பாய்ந்ததே. (கக)

புவன கோடியைப பொகரு வரமெனுங்
கவன ஞசலிட் டாடடுங் கவுரியைப்
பவன வானவர் தச்சன பணித்ததோர்
சுவன மாமணித் தொட்டிலிட் டாட்டினள். (௨0)

சிலம்பு தண்டைசூள் சில்லரிக் கிண்கிணி
யலம்பு கினறதை யன்றடி நோமெனக
கலம்பு லம்புற வோகடுந் தானவர்
தலம்பு லட்புற வோதவழ்ந் தாளரோ. (௨க)

இறைய ளந்த படியிரண் டாற்சுக
முறைய ளந்து வளர்ப்பவண் மூநறுசெய்
யறமவ ளர்ந்தது போலருள் மாமனப
பொறைவ ளர்ந்தது போல்வளர்ந் தாளரோ. (௨௨)

வேறு.

வானநாட் டன்னமு மருள மால்வரைக்
கானமாப் பிடிகளூர கணடு நாணுறத
தானமுந் தருமமுந் தவமுஞ் சைவமு
ஞானமு நடைபெற நடைகற றுளரோ. (௨௩)

துற்றிய புவனங்க டுதைதயும் பேரண்ட
முற்றினுஞ் சிற்றிலா முறையி லாடுவா
ளெற்றினு மமைவதோ ரியைபு காட்டவோ
சிற்றினு மாடினள் சிமைய முன்றில்வாய். (௨௪)

பாவையுங் கழங்கும்பொற் பந்துங் கிள்ளையும்
பூவையும் பயிற்றுதல் புரிந்தி செய்கலாள்
யாவையும் படைத்தளித் தழிக்குஞ் செய்கைதன்
றேவையும் பயிற்றுதல் சிந்தை யுன்னியே. (௨௫)

வேறு.

பேதையார் பருவந் தன்னிற் பெருநலக் குடையார் சொன்றைக்
கோதையார் சடிலஞானக் கொழுந்தையா னதுதான் மேவ
மேதையா விரதம் பூண்டு மேனையாகக் குணாதநு மேனை
தாதையா ரலங்கன் மோலித் தந்தையார்க் குணர்த்தி னாளே. (௨௬)

அழகினை துறையுள் போலவா யருந்தவங் கூடு மோநின
மழலையம் பருவத் தென்று வழங்கினை ளிமவான் முகக்கட்
குழகனை நினைவார்க் கென்று நினைத்தவை கூடு மென்றுள்
பழமறைக் கிழவி நோற்பப் பசும்பொற்றுறை சாலை செய்தான். (௨௭)

திலகமா மலைக்கு வேந்தன் றிருமக ளொருபெண் வாலை
மலர்கொய்யாள் சுனைபந் தாடாள் வல்லியர் குழுவிற் கூடாள்
குலமெலா மிறும்பூ தெய்தக் கொழுந்தவத் தனிமை பூண்டா
ளுலகெலாம் பரவு முக்க ணொருவனைத் தனிமை நீக்க. (௨௮)

சங்கநீர் படியுந் தோறுந் தவளமெய் வாணி போல்வாள்
பங்கயா சனத்தின் மேவிற் பதுமையை நிகாவாள் சூலச்
செங்கையார் தமமை நீங்காச் சிந்தையாற் கவுரி யாவாண
மங்கைமெய்த் தவஞ்சோ சிந்தை வயிரத்தால் வரைப்பெண் ணவாள்.()

அலைபுனற் றடஞ்சேர்ந் தன்ன மாகுவாள் கூல மேவி
மலைமிசைப் பிடியை நேர்வாள் வனத்திடை நிற்குங் காலை
நிலைமலர்க் கொம்பு போல்வா ணிடைபயி லிருந்தா லம்பொற்
சிலையினை நிகர்வா ளனறிச் சித்திரம் போல்வா ளன்றே. (௩௦)

வேறு.

புலன்க ளைந்தையும் பொருத்திநாற் கரணமேற் புகட்டி
யலங்கு நாற்கா ணங்களை யுள்ளமூ டமைத்துப்
பலன்செய் யுள்ளத்து ஞானமாம் விழியினைப் பதித்தாங்
கிலங்கு சோதியை நோக்கிமேற் கண்முகிழ்த் திருந்தாள். (௩௧)

மேனை யாரும்வெறு பரசனும் வியப்பவின் னவரோ
டேனை யார்தொழ வெம்பிரான றிருவுள மேறப
மோனை யார்வமே கொளுகொம்பா முதுதவப் பயிரை
வானை யோங்குற வளர்த்தனள் பனிமலை வல்லி. (௩௨)

வேறு.

உண்ணிலா வியபே ரன்பா னுளமெலா நிரம்பி ஞானக்
கண்ணிலா னந்த வெள்ளக் கடல்பரந் திமய மீன்ற
பெண்ணிலா ரமுதார் செய்யும் பெருந்தவப் பெருக்க மேறித்
தெண்ணிலா மதியம் வேய்ந்தார் திருவுள நிறைந்த தன்றே. (௩௩)

உடையநா யகியார் செய்யு முயர்தவப் பரிவு காண்பான்
சடையினின் மதியஞ் சூடித் தடங்கையின் மழுமா னேந்தும்
விடையினார் கயிலை யாதி வெற்பினார் பொற்பி னூழிப்
படையினார் முதலோர் சூழப் பனிவரைச் சாரல் சார்ந்தார். (௩௪)

வந்தவா னவரை யெல்லாம் வரைப்புற நிறுவித் தாமோ
ரந்தண முதியோ ராகி யணிந்தமா முடிபோற் கூனுஞ்
சந்தமா நரையுந் தோன்றத் தவப்பொறை சுமந்த மேனிப்
பைந்தளிர் வாட நின்றாள் பணிதவச் சாலை சார்ந்தார். (௩௫)

சென்றபி னெழுந்து தாழ்ந்து சிவமறை யவரைப் போற்றி
யன்றவா கியைவ நல்கி யாசனத் திருத்திக் கீழ்போய்
நின்றன ளிமயப் பாவை நேரிழை யதனை நோக்கி
மன்றலங் கோதாய் மேனி வருந்திய தென்னே யென்றார். (௩௬)

தோழியர் பரவித் தூய வுணவொடு துயிலு நீக்கி
வாழியங் கயிலை மேய வரதனை மழுவ லானை
யூழியு முலகு நீத்த வொருவனைக் கருத்தி னுன்னி
யாழியி னமுத மனையா ளருந்தவ முயன்றா ளென்றார். (௩௭)

பிடியன நடையும் வாலப் பிறையன நுதலும் வாய்ந்த
கொடியன விடையாய் மேனி குழைந்தபூங் கொம்பு போல்வாய்
வடிவமு மழகுந் தேம்ப வண்ணமும் வருந்த நோற்றல்
சடினையி லைய மேற்றுக் கடுநுகர்ந் தார்க்கோ வென்றார். (௩௮)

வியனமறைத் தலைவர் கூற மெல்லியர் மொழித லாற்றார்
சயிலமா னருளான் மற்றோர் தலைமையாம் பாங்கி நோக்கி
யயன்முத லமரர் வீறு டைறபலி கொண்டா ரண்ட
ருயிர்நிலை நிறுத்த வன்றோ வுண்டனர் விடத்தை யென்றாள். (௩௯)

அலைபொரு தடங்கட் பேதா யருமணம் புரிந்தா லம்பொன்
மிலைதரு நகர்நா டின்றி வெற்பிலோ புகுவா னென்றார்
கலைதெரி மறைநூல் வல்லீர் கலவியின் பெருமை யீதோ
மலைமக ளாகத் தோன்றி யிகழ்வதோ மலையை யென்றாள். (௪௰)

இப்படி யநேக கால மிமையவர் தவங்கள் செய்தா
ரைப்படி விழியா யீசன் வந்திலன் வருமோ வென்று
ரப்படி யிரங்கா ரல்ல ரடியவர்க் கெளியார் சித்த
மொப்பிலா தொழிந்தா ரேனு மொழிகல ராயிரோ டென்றாள். (௪௧)

மறைவலீர் போந்த வாறு வழங்கிநீ போமி னென்ன
வறைதரு மமரர் நோக்கி யணங்கியாம் போந்த வாறு
பிறைநுதற் கருங்கட் செவ்வாய்ப் பெய்வளைத் தைய லாளை
நறைமலர் மாலை சூட்டி நன்மணம் புரிதற் கென்றார். (௪௨)

கறையணி கண்டத் தண்ணல் கன்னிதன் பொருட்டாற் கொண்ட
மறைவடி வுணரா ள் சொல்லு மறைமொழி யென்ப தோரா
ளிறைமக ளிதய மாழ்கி யிருசெவி புதைத்து வெட்கி
நறைமலர் வதனங் கோட்டி நாணமுற் றகன்று போனாள். (௪௩)

மடவர லகன்ற காலை மற்றுமோர் விளையாட் டாக
விடமணி மிடறுங் கங்கை வேணியுங் கரந்து போந்த
கடவுள்வே தியனார் தாமுங் கரந்தனர் திகைத்தாள் வல்லி
யிடம்வலந் தேடிக் காணா ளிறைவனென் றிரங்க லுற்றாள். (௪௪)

வேறு.

ஒன்றே பலவே யுலகெலா மோங்குகுணக்
குன்றே கடலே கொழுங்கருணைப் பேராறே
நன்றே யரிதேடு ஞானமலர்த் தாள்சிவப்ப
வின்றே தமியேற் கெழுந்தருள வேண்டிற்றே. (௪௫)

பொன்னே மணியே பொருளே பொருண்மறையின்
முன்னே நடுவே முடியா முழுமுதலே

மின்னே யெனத்தோன்றி விண்ணிலே போய்மறைந்தா
யென்னே தமியே னியற்றும பிழையேயோ. (சசு)

காரா யழுகொழுகு கந்தரத்தா யந்தரத்தா
யாரா வமுதேயெ னானந்த மாகடலே
நீராய் வெளியாய் நெடுங்காலாய வெங்கனலாயப்
பாரா யொளியாய்ப் பரந்தாய் பரமேட்டி. (சஎ)

என்றாள் புகழ்ந்தா ளிமயவரைப் பூம்பாவை
நின்றா ளயர்ந்தா ணெடுநீல முதத்துகுத்தாள்
சென்றாள் பலதிசையுந் தேடி யலமருங்கான
மன்றாடும பாதர் மழுவிடைமேற் றோன்றினார். (சஅ)

பனகமணி திருமார்பும் பவளம்போற படர்சடையுந்
தினகரரோ தயவடிவுந் திருநுதலின் மேல்விழியு
மனவரத நடம்புரிவா ரபயவரத முங்காட்டிக
கனவரையின றிருமகளார் கண்களிப்ப முனனின்றார். (சகூ)

பூணார் நகிலவரைப் பூம்பாவை நோனபிருந்து
காணாநு மேனி நலிந்தாண் மெலிவகலச்
சேணார் கயிலைச் செழுந்தேனை மாலயனுங்
காணாத தெள்ளமுதைக கண்ணான் முகந்துண்டாள். (ருய)

தாராற்றுங கொன்றைச் சடையா வெனையுடையா
யாராற்று வார்நின் னடியா ருனைப்பிரிந்து
காராற்றுங் கண்டா கரையேற்றாய் நின்காதற்
பேராற்றில் வீழ்ந்தேன பிரிவாற்றேன யானென்றாள். (ருக)

வேறு.

கொந்துதா ரிமயச் செல்வக் கோதையாள் பயந்த கோதாய்
முந்துநீ தவங்கள் செய்த முறையெலா முவந்தோ நின்னை
வந்துநாம் வதுவை செய்வோம் வருந்தலென் றயன்மால் சூழ
விந்துநா தாந்த மானார் வெள்ளியங் கிரியிற போனார். (ருஉ)

முதலாவது உமைதிருவவதாரச் சருக்கம் முற்றிற்று.



# இரண்டாவது திருமணச் சருக்கம்.



தனிவரைச் சாபத் தாரொற சாபததா ரெழுவ ராய
முனிவரை வரிந்து நோக்கி முகிழ்முலை யிமய மாதை
நனிவரை வதுவை கூட்ட நயந்தனம் விரைவி னீவிர்
பனிவரை வேந்தன் முனைபோயப் பகருதிர் வருதி ரெனறூர். (க)

ஆங்கவ ரிமவான் பக்க லணைதலு மெழுந்து போற்றித்
தேங்கமழ மலர்க ளவிச சிறந்தவா சனத்தி ருத்திப்
பாங்கெழு வரையைச சூழ்ம பரிதிபோல் வலம்வந் தேததி
யிங்குமெய்த தவத்தி ரெயத வெததவம புரிந்தே னென்றான். (உ)

பின்னரு மவரை நோக்கிப் பிரமனை மூருக்கொண் டன்னீர்
பொன்னகர் சழிபபி யீண்டுப் போந்தவா றென்னே யென்னக
கன்னலங் கனிலைய நின்பாற் கற்பகக் கொழுந்தன் னாளை
நன்னாபூங் கயிலை யார்க்கு நலகுதி நயப்பா லென்றூர். (ங)

தந்தையா மிமவா னிறபத் தனையனைமைந நாகன போந்து
முந்தையார் குலமே தென்ன மொழிதலு முனிவா நோக்கி
யெந்தையா ருலக மெலலா மீனறுகாத் தழிப்பர் யார்க்குங
கொந்தையார் கொன்றை வேய்ந்தார் கொடுததது குலங்கா ணென்றூர்.()

மேனையா ரதனைக கேளா வியனமகட் கொடுததார் தம்மைத்
தானையா லரிந்து ளார்க்கோ சம்பந்த மெனறு மோனர்
தேனையார் மொழியாய் தத்தந் திகழுமனைத நீப மேனு
மோனையாய் முத்தங் கோடற் கிசையுமோ மொழியா யென்றூர். (ரு)

தன்பெரு மனைகதுஞ சேய்கதுந் தகவுரைத் திமய வேந்த
னென்பெருங் குலத்தில் வந்த வெழின்மலர்க் கொம்ப னாளை
நன்பெருங் கயிலை யாதி நாதனே வேட்ப தானுன்
முன்பெருந் தவமே யெனறான் முனிவரர் மகிழ்ந்து நோக்கி. (சு)

பூளையார் கரந்தை வேணிப் புனிதர்க்கும் பொருப்ப னீன்ற
வாளைநேர் விழியி னுட்கு மஙகலத் திநாள் வாரம்
வேளையே யோரை யாவும விதிமுறை யுரைத்து மேலோர்
நாளையே யுகூர்த்த மென்ன நயந்தனர் நவின்று போனூர். (எ)

போந்தனர் முனிவர் வெண்பொற் பொருப்புறை செம்பொற் கோயில்
சேர்ந்தனர் நந்தி யுய்ப்பச் சிவபிரா னனனி தானுஞ்
சார்ந்தனர் நிகழ்ந்த வாறு சாற்றின ரிமவா னீன்ற
மாந்தளிர்ச் செங்கை பற்றி மணக்குநா ளீதே யென்றார். (அ)

பண்ணவ ருரைப்ப நாதன் பசுந்துழாய் முகுந்தன் வேதா
விண்ணவர் தலைவன் மேலை யுருத்திரர் முனிவர் சித்த
ரெண்ணரு முலகத் தாரு மேந்திழைக் குழாத்தோ டங்கு
நண்ணுதற் கருள நந்தி நட்பிரான் மனனஞ் செய்தான் (௯)

அங்கவ ரிமய மீன்ற வமுதனை யானை தானைத்
திங்களங் கண்ணி வேய்ந்த தெய்வதச் சண் முனைவர் வேட்கு
மங்கல மென்று தோன்ற வகைபெறும் புனைந் தோறும்
பொங்கொலி முரச மார்ப்பப் பொருக்கென வெழுந்தா ரன்றே (௧௦)

வேறு.

பங்கை யாசனத் திருவுறை மார்பினன் பங்கையா சனச்செல்வ
னங்கை வாரணத் திந்திரன் பாவக னந்தக னிருதேசன்
பொங்கு வார்கடற் கிறைபவ னதிபன பொருவிடை யிசானன்
றிங்கண் மாதங்கள் வருடங்கள் வாரங்க டிதிகணாள் கரணங்கள். (௧௧)

அண்ட மூலகா லாக்கினி யுருத்திரர் பதின்மர்மற் றவர்போல்வார்
கொண்ட பூதநாற் கணத்திர ளாடகர் குறட்படைக் கூர்மாண்டர்
மண்டு நாலெழு கோடியா மிருணிலம் வளர்க்குமட் டகராவார்
கண்ட பாதலம் புரக்குமா மணிமுடிக் கணபணத் துரகேசர் (௧௨)

அண்ட கோளகை யுச்சிய ருருத்திர ரைந்துநாற் றுவராவார்
கொண்டல் வண்ணனை விரிஞ்சனைப் பணிகொள்வார் குரகதமாசாத்தர்
சண்ட மால்விடைப் பசுபதி யுருத்திரர் தரிக்குமீ ரைஞ்ஞூறுங்
கண்ட பேரணி கத்திர ருருத்திர கணப்பெரும் படைவீரர். (௧௩)

நூறு கோடியர் பதினொரு கோடியர் நூற்றுவர் நுதற்கண்ண
ராறு கோடியி னிரட்டியர் நடத்துதேர் ராதவ ரவர்மேலும்
வீறு கோடியி னிரட்டியர் மருத்துவர் வசுக்களாம் விழுச்செல்வர்
கூறு நாலிரு கோடியர் மூன்றரைக் கோடிய பெருந்தீர்த்தம். (௧௪)

மூல நான்முக னடங்குற வவனமுரி புருவநதி னிடைதீதோன்று
நீல லோகிதர் முதலினோ ரூவிலே நெடியவேற் கங்காளர்
சூல பாணியர் சேதிர பாலர்மெய்ச் சுவாவினர் நிருவாணக்
கோல மேயவர் பச்சிளங் கஞ்சுகக் கொற்றவ ரிருநால்வர். (௧௫)

கருது பாறகட லுண்டுதன னருட்கடல் கண்ணனுக் கருள்செய்தோ
னரிய மாமறை வியாதமா முனிசுகன் றதீசியத் திரியென்பான
பிருகு ரோமசன கண்ணுவன பராசரன பெருந்தவத் துருவாசன்
சரத நாரதன் கபிலனமா சததியன் சதானந்தன் பரதவாசன (௧௬)

சித்த மாதவர் தந்திரர் கருடர்கிம் புருடர்கின் னரர்போகர்
வித்தி யாதரர் சாலக டங்கடர் நிசிசரர் வேதாளர்
சித்தர் விண்ணவர் மாகசா ரியர்தயித் தியர்கட வுளர்யோகர்
சத்த நாரிய ரட்டமா சித்திகள் சத்தமா முகில்வேந்தர். (௧௭)

அனக நீள்சடை யகத்தியன் புலத்திய னங்கிரா மார்க்கண்டன்
மனநி லைப்பெருங் காசிபன் கவுதமன் வசிட்டனு மெழுவோர்கள்
சனக னேசனற் குமாரனே சனாதனன் சனந்தனென் பவர்நால்வர்
பனக நீண்முடிப் பதஞ்சலி காலகையிற கண்பெறு புலிப்பாதன். (௧௮)

ஒருதி னம்பொழு திரண்டுமுக் காலநான் குயர்மறை யைம்பூத
மிருது வாறுட னெழுபெரு நதிக்குல மெண்கிரி நவகண்ட
மருமை யெண்டிசை யெழுதடம் புவனமா றங்கமைம் புலனான்கு
கரண முக்குண மிரண்டற மொருபெருங் கதிர்மதி விதிமாதோ. (௧௯)

சரிதை யாதிய சதுட்டய மந்திரந் தத்துவம் புவனங்கள்
வருண பேதங்கள் கலைகள்வன் பதங்களா மத்துவா வகையாறுந்
திரும டந்தைபா ரதிபுலோ மசைமுதற றெய்வமங் கையர்யாரு
மிரத மூர்திக ளுகைத்தனர் கயிலையி லெய்தினர் விசும்பாறு. (௨௰)

புவனம் வானமும் புதைபட மீமிசைப் புடைபரந் தாகாய
கவன ரேமுதல் யாவருந் தாழ்ந்தெழீஇக் கயிலைமால் வரைசூழ்ந்தார்
குவலை யந்தொடுத தண்டகோ ளகையெலாங் கோத்தெழு முகவாரி
சிவபி ரான்பெருந் திருமலைபணிந்துபோய் வலஞ்செயுஞ் செயன்மான.

ஒத்தெழு பூமபதி னெண்குப்பே ருலகமு மொருமுகங் கொடுபோந்து
மதந்து லோகக்கெலா மவரவர்க் கிடங்கொடுத் தண்ணலார் கயிலாயம்
பதியின் முத்தமிழ்ப் புலவருக் கருள்சங்கப் பலகையொத் ததுமேனுந்
ததியணடமும பூணடோரா பாரிடத் தகலைவற்றைத் தருமாதோ. (உஉ)

எயிலசி றைத்தவில் லாதலா லெம்பிரான் றிருக்கடை யினின் பெருஞ்
சயில நிகறல்போ னின்றபொற் கோபுரந் தனைத்தொழு தெழுந்தேகிப்
பயினம ணப்பெருங் குழுவெலா நிறைதலாற் பரப்பா னுடன்மேவிக்
கயிலை நறகிரி யுலகெலா மீன்றநள் கவுரியு நிகராமால் (உ௩)

உவரி மாலய னுருத்திர கணமுத னாயகர்த்தவர் குழுவெல்லாஞ்
சிவபி ரான்றிரு வாய்தலின் மொய்த்தனர் தேனுடைத் திரளிபபோ
லவாசள் பூதர்பா லவர்கண நாதர்பா லறிவிப்ப வவரேகி
மவுன நந்திபா லுணர்த்தலு மாங்கவன் வள்ளலார்க் கறிவித்தான். (உ௪)

தருக வீண்டென வருளலும் வேத்திரத் தனிப்பெரும் படையோச்சி
வருக வென்றவன் மரபினி னுய்த்திட வந்திறைஞ் சலுமவர்க்கா
லருமை நோக்கின லருட்குறு முறுவலா லவரவர்க் கருள்செய்தா
னொருவ னாகிமற் றுலகெலா மாகிநின் றுயிர்கட்கெலா முயிராவான் (உ௫)

எம்பி ரானிடத் திவ்வணை நிகழ்தலு மிமயமால் வரைவேந்தன்
கொம்ப னுண்மண வோலையுய்த் தலுங்குல வரைக்கிறை யவர்யாரு
மம்பு ராசிகட் கதிபர்தங் கணங்களு மருண்முனிக் கணம்யாவும்
பம்ப மால்வரைத் தெய்வதக் குழாங்களும் பரவைபோற் பரந்தன்றே.

கமலை பூமகள் பாரதி வயிணவி காடுகாள் பிரமாணி
குமரி வீரிமந் தாகினி யோகினி கொற்றவை யயிராணி
யமல மேனகை யுருப்பசி திலோத்தமை யரம்பையர் குழுவெல்லா [ர்.
முமையை வந்தடி தொழுதெழீஇத் திங்கள்கு ழுடுக்குலமெனச்சூழ்ந்தா

நகர மாடங்கள் கூடங்கள் கோயில்கண் ஞாயிலகள் செய்குன்றஞ்
சிகர கோபுர மாளிகை சூளிகை தெற்றிசித் திரகூட
மகர தோரணங் காவண பூவண மன்றநா டகசாலை
யகர மாயிர கோடிகள் வகுத்தன னமரர்கம் மியன்மேலும். (உ௮)

மேடை மேனிலை யுபரிகை வேதிகை விரவுசா ளரங்கோடி
மாடை மாமதி மணியினா லரமிய மலினன் மணப்பந்த
ராடை நீள்கொடி படகுசா மரைகுடை யணிசொள்பூ ரணகும்ப
மோடை மாகரி யாளிகண் டீரிக ளருகுகள்பற பலகோடி (௨௯)

இரச தத்தபூ கதம்வயி ரியத தெழிலரம் பைகளுட்டி
மரக ததகிறை பாசடை காயகுலை வகுத்துநற பசுபொன்னால்
விரவு மென்பழுக் காயபழுத தாறுவெண ணிதநில விரிபாளை
புருட ராகத்தாற் பவளமா மணியினுற பூஙகொதது மமைவித்தான.()

மண்ட பஙகளு மாளிகைப் புறஙசளு மாடகூ டமும்வானமேற்
கொண்ட கோபுர நிரைகளும் வரைகள்போற் குழுமலாற பனிக்குன்றம்
பண்டை யாதியம் பரனை வேட டவனுறை பரைதிரு விளையாட்டா
லண்டம் யாவைபு மெடுததெடுத தடுககிய சிறநில் போனறது மாதோ.

தெருக்கள் பற்பல வமைததன புவனமாத திரள்வகுத் தன போலு, மருக்கள் பறபல வகுததென வுயிரெலா மொருங்குதித தன மானும், பொருப்பி லிங்கிவை வகுததவான் கம்மியன பூவின்மே லயன் போன்று, னருத்த வீதியி லணியினுக் கணிசெயவா ரயனகொடித் திரள்போன்றா. (௩௨)

வல்லை தோரணந் தழைதொடுத் தியறறுவார் மாததழை வனமாக
முல்லை மல்லிகை சண்பக நாறறுவார் மொய்ம்மலர்ப் பொழிலேய்ப்ப
வெல்லை மொய்ததெழு கொடிபல நிரப்புவா ரெங்கும்வா னதிமானத்
தொல்லை மீனெனிர் தூய வானகமெனச் சுடர்விளக கணிசெய்வார. ()

அரிய நாண்மலர் ததேனகளாற் குறிஞ்சிமேறகுறிஞ்சியா னதுசாந்தான்
மருத மானது முல்லையே நிகர்த்தது மாதர்மெய் விளையாட்டாற
பரவு மாமணித திரள்களாற பாலபடு பாலையொத் ததுபனனீர்
நிரவி வீசலா னீர்வளர் நெய்தலே நிகாததது பனிககுன்றம். (௩௪)

மலரி னறகரும் பாறசுரும் பான்மட மாதரா னடைக்காவாற்,
குலவு தென்றலாற கொடிநிரைத் திருண்டதாற் கோமத னுயிர்மீட்

பான், சிலையு நாணும்வெங் கணைகளும் வேழமுஞ் சேனைதேர் படை
வீடு, மூலக நாயகி திருமணச் செய்வியார்த் தொருங்குநிற் பனமா
னும். (௩௫)

இறைத்த சுண்ணமுஞ் சிதறும்வெண் பொரிகளு மெடுத்தெறி விடுபூவு
நிறைதத மாலையி னுகுத்தத்தண மலர்களு நிரைத்துறவீழ பூந்தாது
நறுக்கி யொப்பிடு சரங்களிற சிதறிய நவமணி களும்பொன்னுங்
குறித்த குப்பையாற பனிவரை யனந்தமாங் கொடுமுடி யுடைத்தம்மா.

இமநெ டுங்கிரி காவல னினனை மெழில்வரை யணிசெய்யக்
கமழப சுந்துணாக கொன்றையந் தொடைபுனை கபிலையம் பெருமானைத்
தமனி யப்பணி கொடுமண வணிசெய்ய சதுமுக னெதிரவேண்ட
வமரர் தமபிரா னணிந்தமை காண்கென முறுவல்பூத தருள்செய்தான்.

புலவு நாறுகோட் டாம்பல்வெம் புலிதரு போர்வையு முட்சாத்துங்
கலிகொள் பாரெலா மொருபணத் தேந்திய கணபணு டவிக்கச்சு
மொலிய லாகிமே லொளிறுபீ தாம்பர வுத்தரி கமுமாகி
வலிய காஞ்சனப் பட்டிகை யாகவு மலிந்துதோன் றியவன்றே. (௩௮)

காதிற் குண்டல மார்பணி சரப்பளி கண்டிகை திருத்தோளின்
மோது பொன்வளை கஙகணம் பவித்திர மோதிரங் கணையாழி
போதிற் பொஙகிய வாசிகை கரோடிகை புனைதிரு வரைநாண்கள்
பாத நூபுரப் பொற்பணி யாயின பணுமுடிப் பணியெல்லாம். (௩௯)

தாம ருப்பொடு மீனலோ சனம்புடை தொடுத்தவெண் டலைமாலை
காமர் பொன்னணி சன்னவீ ரம்பல காசணிப் பணியாக
மீம யானத்து வெண்டிரு நீறுவெண் கருப்புர நறுஞ்சாந்தா
வாமை யோடுபொற் பதக்கமா வென்பெலா மாரமா யினமாதோ. (௪0)

கண்ணின மேற்றிகழ் கண்ணுளிர் தருங்குறி கவினுறற் குறியாக [ம்
வண்ணன் மேற்குழை மகரகுண் டலத்தொடு மணிவளைத் திருத்தோடு
விண்ணின் மேற்பொலி கதிரென நிலவென விளங்குமே பொளிவீச
வண்ண மாமணித் திருமுடி யானது வளர்சடை முடியம்மா. (௪௧)

வேறு

மணிப்பணி யங்கதப் புயமும் வாய்ந்தபொன்
னணிப்பணி யகலமு மகலஞ் சாணகுறத்த
தணிப்பணி தகைமையாற் றலித்திட் டான்சகம்
பணிப்பணி யகிலமும் பார்த்த பார்வையான (௪௨)

பூதநா யகன்முடி தொடுத்துப் பூணெலாம்
வேதநான் முகன்விழி குளிர்ப்பக் கண்ணுறீஇப்
பாதமேற் பணிந்தெழீஇப் பண்டு தானுந்தன்
ருதையும் பெறவொணாத் தவம்பெற் றேகினன். (௪௩)

வேறு

கொம்ப னாள்பெரு மணநிறை வேறவா னிமையவர் குறைதீர
வெம்பி ரானெழுந் தருளுக தருணமென் றியம்பவெற் பிறையேகித்
தம்பி ரான்றனக் குணர்த்தலுங் கயிலையஞ் சயிலநின் றடலேற்று
நம்பி ரான்புறத் திவர்ந்தன ருயர்கண நாதர்போற் றியநாதர். (௪௪)

நீல லோகித ராடக ரட்டகா நிமலாநூற் றுவரணட
மேலை யுச்சிய ரண்டமூ லத்துறை விமலருத் திராயாரு
மாலுமு வேதனுஞ் சயசய சயவென வரதனைப் புடைசூழ்ந்தார்
கோல மேருமால் வரையினைச் சூழ்தரு குலவரைத் திரண்மான. (௪௫)

பிந்து பலகண நாதருமு பூதரும் பெருந்திரைக் கடலேயப்ப
வைந்து பல்வகை வாத்திய முழக்கொலி யந்தர வெளிபோர்ப்ப
விந்து வைத்தவர் திருமணப் பெருங்குழா மெண்டிசைக் கடங்காதே
தந்த மைத்தெளிந் தவர்பிரா னருளெனச் சகமெலாங் கடந்தேக. (௪௬)

மோத கம்பணைக் கோடுபா சாங்குசந் தரித்துமூ டிகமேறித்
தாதை தன்மணத் தங்குர மெனமுனர்த் தந்திமா முகனேக
வேத பாரகர் வாழ்த்தொலி முழங்கிட விஞ்சையர் புகழ்பாடக்
கீத கின்னரர் தும்புரு நாரதர் கிளரிசை யமுதூற்ற. (௪௭)

இந்தி ரன்குடை நிழற்றிடப் பாவக னெடுத்திட நறுந்தூப
மந்த கன்படை தாங்கவீ சானன்வந் தடைப்பைகைக் கொளவூதை
முந்து மாலவட் டங்கொடு சுழற்றமுந் நீர்க்கிறை துளிதூவச்
சிந்து பல்கொடைத் திரவிய மெடுத்தெடுத் தேந்திட வளகேசன் (௪௮)

நிருதி பாதுகை சுமப்பமா நாகங்க ளிரைமணி விளக்கேந்தப்
பரிதி சோமர்தீ வர்த்திகை பிடித்திடப் படிவாயல் லாணமேடாகச்
சுருதி யாயிர நாமமேத் தெடுப்பவான் சுரர்கள்பூ மழைதூவ
விருது நாள்களுங் கோள்களு நிமித்தமு மேவிய பணிகேட்ப (௪௯)

பணிவ ரைக்கிரி பொழிதல்போ லிபசலம பண்ணவர் புடைதூறறக்
கனிமொ ழிததிர ளரம்பையர் தமனியக கவரிகா லசைத்தேக
வினிய மாலய னிருபுடை காப்பமற றிமையவர் புறங்காப்பப்
புனித நந்திதன் கணத்தொடுமே வேத்திரப் படையொடு முனபோத.()

அருமை நாயகன் வருகின்றா னடிமுடி யரியய னறியாத
பெருமை நாயகன வருகின்றா னுலகெலாம பெற்றருள பெருமாட்டி
திருமணஞ்செய வருகின்றா னுதல்விழித தெய்வங்கண் மணவாளன
வருகின் றான்வள நிறைவொடு குறைவிலா வாழ்விணன் வருகின்றான்.()

அமரர் நாயகன் வருகின்றா னுலமுண் டமராதே வியாகமெல்லாந்
தமது மங்கலந் தந்தமக் கருளிய தனிமுதல் வருகின்றா
னிமல நிட்கள நிராமயன வருகின்றா னினைப்பவர் மலமாயைத்
திமிர பாறகரன வருகின்றா னெனப்பல சின்னங்கள பணிமாற. (௫௨)

படவி சூழ்தரு பெருந்திரைக் கடலெலாம் புறக்கட லொடுந்தாவிப்
படரு காந்தநாள் வெள்ளியங் கிரியின்மேற் பானுவா யிரகோடி [ளத்
சுடர் தழைத்திடத் தோன்றிய தெனமணத தொகுதியாம் பெருவெள்
திடைதி ளைத்துமால் விடையினமே லெம்பிரானெழுந் தருளியவேலே.

வடபெ ருங்கிரிக் காவலன் மந்தர மன்னவன வடவிந்தத்
தடவ ரைக்கிறை கந்தமா தனத்திறை சக்சரக கிரிவேந்த
னிடத வெற்பினே னேமகூ டத்திறை நீலவெற் பினறுதி
யடலவ ரைக்குல வேந்தரு மெழுகடற காசறும புடைசூழ (௫௪)

அம்ம லைச்சிலை வளைத்தவர் புயமலை யதிசயந் தனைகாண்பா
னெம்ம லைக்குலங் களுமெதிர் போந்தென விமயமா மலைவேந்தன்
மைம்ம லைபபுர வலமொடு மருகனுக கெதிர்கொடு மலர்தூவிச்
செம்ம லைப்பணிந் தினியன மொழிந்துதன் செழுமலைப்பதிசேர்ந்தான்

ரசர் நறறிரு மருமக னுகவந் தெய்துறத் தவஞ்செய்தான்
ராச னத்தொடு மெதிர்பணிந் தேகலும் படர்விடைக் கொடியாட
ரச மில்லவ ரிமவரை வீதிவாய் நகர்வலஞ் செயப்போந்தார்
ராச நறபதி னுல்வகைப் புவனமுந் தமைவலஞ் செயமாதோ. (௫௬)

வேறு.

பண்க ளித்த பனிமொழிச் செய்யவாய்
வண்கி ளிக்குலம் போல்பவர் வள்ளலார்
விண்க ளிக்கு மிடற் றெதிர் நோக்கினர்
கண்க ளித்தனர் கார்கண்ட தோகைபோல். (௫௭)

கார்த்த பூங்குழல் கட்டழ குக்கெலா
மோர்த்த பேரெழி லாள ரிவரென்பார்
தீர்த்தன் மேனியுஞ் சேயிழை மேனியும்
பார்த்த கண்கள் பறிப்பரி தாமென்பார். (௫௮)

அண்டர் நாத ரழகினுக் கோர்குறை
கண்ட மீது கறுப்புள தாலென்பார்
வண்டு வார்குழன் மாதெழில் பார்க்கினு
முண்டு சிறறிடை யாற்குறை யொன்றென்பார். (௫௯)

மண்ணின் மேறபுனன் மேல்வன்னி மாருதம்
விண்ணின் மேலடங் காவுரு மேவினர்
பெண்ணின் மேலவள் பேரெழில் காணவோ
கண்ணின் மேலொரு கண்படைத் தாரென்பார். (௬௦)

சங்கு சோர்வதுந் தாழ்குழல் சோர்வதுந்
தொங்கன் மேகலை சோர்வது நோககலா
ரங்க ணுனெழி லாரா வமுதினை
நுங்கு வாரென நோக்குவர் நோக்கினுல் (௬௧)

காய்த ரும்பிறை மாமுடி காட்டியே
மோய்த ரும்பெரு மோகத்தை நல்கினர்
சாய்த ருந்தொடி கொண்டனர் தக்கவோ
வாய்தி றந்தொரு வார்த்தைசொல் லாரென்பார். (௬௨)

சுழிகு லாமுந்தித் தோகையனை னீர்கமைக
கழிவி லாதுயிர் காத்தரு மோனமோ
விழியி னூன்மத வேளையும் வென்றுளார்
மொழியி னுறசக மூன்றுமவெல் வாரெனபார். (கூ௩)

தூய சோதி யருள்சுரக கினறகண்
காயு மோவிவர் கட்டெழில் காணவே
போய மாரன் பொருமையின் மாய்ந்தனன்
வேயுங் கண்ணழல் வெந்தமை போலெனபார். (கூ௪)

ஆர மாதவஞ் செய்ய வயர்கின்றோம்
வீர மாதவிர் வெம்புயத் தண்ணலைச்
சார மாதவன் றங்கைகற் கங்கைபோற்
சேர மாதவஞ் செய்திலம் யாமென்பார் (கூ௫)

நுதலைக் கண்டு நடுங்கிய கூன்மதி
மதலைத் தார்முடி வந்தெமைக காயுமான்
முதலைச் சேர்ந்து கலுழலை மோதடனம்
விதலைப் பாநதள் விளைத்தமை போலென்பார். (கூ௬)

வஞ்சி கைவளை போம்வழி மறறுமோ
ரஞ்சொ லாளை விஞவ வவளுநதன
னெஞ்சு போம்வழி தேடவு நேடிப்போய்த்
துஞ்சல் போக்கிதின் றுளொடு சொல்லுவார். (கூ௭)

போது சாநதமும் பூரண கும்பமு
மாதர் தாங்குபொன் மாடம்பு காமலே
மீது நாதனை யுகைகொடு வீதிபோ
மீது மால்விடை யென்பது மெய்யென்பார். (கூ௮)

அஞ்ச லென்ற கமலமெய் யாரருட்
கஞ்ச மாம்பொருக் காட்சியைத் தம்மன
முஞ்ச லாட வுமகமெக் கென்னவே
விஞ்சு பூசல் விளைத்துநிற பார்சிலர். (கூ௯)

அகிலுங் கோதையா ராயிர கோடியர்
துகிலு மாரமுஞ் சோர்வது கண்டுநீர்
முகிலுண் கூந்த லொருததிமுன் னேகுவார்
நிகில நாதர்க்கு நீதியி தோவென்பார். (எ௦)

பரவு மால்வரை வீதியிற் பாவைமார்
சுரத வாள்விழி வண்டினஞ் சூழ்வர
விரத யோகர் விழித்தும்பி யார்தலால்
வரதர் மேனி மதுததிரண் மானுமே. (எக)

வேறு

உரகர் தானமுங் கீழ்ப்பட வெண்மர்வா மூலகமுந் திகைத்தேஙக
விரவி மாமதி புகர்குரு வாதிய ரிடங்கள்கோ ளிடமாக
விரவு கின்னரர் தந்திரர் வாழிடம் வீணையெய் திடவோங்கிப்
பரமர் மாமணப் பெருககொடும் பொலிந்ததாற் பனிவரை வளமூதூர்.

விந்தை வானவர் வருதலாற் பவனமும் வெறுக்கையெய் திடவாணி
யந்த ணாளனுங் கணத்தொடு வருதலா லவனுல கலரெய்தப்
பைந்து ழாயனு மகமலையு மேவலாற பாற்கடல் சலமேவ
நந்தி நாயகன் வருதலாற் கயிலையு நணிவிளர்த் ததுமாதோ. (எ௩)

மேவு விஞ்சைய ருலகமென் பார்சிலர் விரிஞ்சன்வா மூலகென்பார்
தேவ லோகமா முலகமென் பார்சிலர் சிவபுர மிதுவென்பார்
தாவி லேழுட னேழுமே ருலகமுந் தந்ததிந் நகரென்பார்
யாவு மீன்றவ டனைனயீன் றருள்பதிக் கிதுகொலோ வரிதென்பார். ()

வேறு.

பூதர் சஙகமும் வானவர் சங்கமும் புவண
நாதர் சங்கமு முருத்திரர் சங்கமு நான்காம்
வேதர் சங்கமு மாமுகிற் குலத்தொடு மிடைந்த
மாதர் சங்கமா மின்னொடும் பொலிவன மறுகு. (எ௫)

கொடிக ளும்பெருங் குடைகளு நிரைத்தகோ வேந்தர்
தொடிக ளுந்திரண் முடிகளு முகுத்தபொற் சுண்ணப்
பொடிகள் சிந்திட மிடைசலச் சேறுகால் புதைந்து
பிடிக ளுந்துடி யடிகொளுங் களிறொடு பிளிறும. (எ௬)

தெருவ டங்கலாப் பெருந்திர ளாகினுஞ் செகத்தோர்
பொரு வினைப்பயனை பொருந்திடு நியதியே போல
மருவு ஞாயிலின் றிருக்கடை நெருக்குற வருவோர்
பெருமை கீழ்மையி னமைத்திடு நந்திகைப் பிரம்பு. (௭௭)

குன்று ளார்திசை வேந்தரு நாரியர் குழாமும்
வென்றி மாலய னுருத்திர கணத்துமே லவரு
மன்று ளார்மழ விடையுமா முனிவரு மல்லா
னின்று ளாரபதம பெயர்த்திலர் மறுகெலா நிரம்பி. (௭௮)

தவமு னிக்கண மாசிலை தருப்பைநீர் தெளிப்ப
வவர்தி ருக்குல மாதர்நீ ராஞ்சன மமைப்பத்
துவச நறகுட மணிகொடி முரசுபூந் தோட்டி
கவரி தீபமா மெண்வகை மங்கலக் கலங்கள். (௭௯)

எண்கு லக்கிரி மடந்தைய ரிவைமுறை யெடுப்ப
வண்க ருப்புர தீபமோர் மேருமால் வரையிற்
பெண்கை யிறகொடு வலஞ்செய்த தெய்வதப் பிணாக்கள்
கண்க ளிப்புற வேந்துமா லத்திகள் கஞல, (௮௦)

வேறு.

முருகையார் தழையா னீரான் முதுவரைத் திரிகூ டத்தி
லொருகையாற் பதம்பூ சித்த வுயர்கய கருண னென்பா
னிருகையாங் கமலம் பற்றி விடையினின் றிழிந்து நந்தி
தருகையா லமரர் மோலி சாத்துபா துகைதாள் சாத்த. (௮௧)

இடம்வல மயன்மால செங்கை பற்றிமுத் தொழிலுக் கென்று
முடைமைதோன் றிடவ சுககள் சுவத்திக முரைப்ப மாதர்
நடைபடம் விரிப்ப வானோர் நாண்மல ரிறைப்பச் சென்றார்
வடவரை வளைத்த வள்ளல் பணிவரைக் கோயில் வாயில். (௮௨)

ஈசனை மருகா வெய்த வேழுல கீன்று டன்னை
வாசமா மகவாப் பெற்று மாபெலாம புனிதம் பெற்றா
ளாசறு புனலா லண்ண லடியிணை விளக்கிச் செய்யும்
பூசனை நீரா லுள்ளும் புறத்தினும் புனிதஞ் செய்தாள். (௮௩)

அந்நிலை கடந்து போகி யாயிரம் பவளச செஙகாற
பொன்னின்மண் டபத்து நாப்பட் புருடாா கத்தின வேதி
மன்னுபொற பதும ாாக மடஙகலா சனத்தின் மேவிய
பன்னெறி யமார் போற்றப் பாஞ்சுட ரிருந்தார் மன்னோ. (அச)

இருந்தபின் பிரமன் மாமா லிந்திர னெழிற்கூர் மாண்ட
வொருஙகம ாாட கேச னுருததிரர் முதலோர் யார்க்கு
நெருங்குபொற றவிசுந் தூசு நிரைததகம பலமு நாதர்
தாந்தா மிருககை காட்டித தடஙகணு லருளிச செய்தார். (அரு)

பாருளார் விசும்பி னுள்ளார் பாதலத துள்ளார் பாா
மேருவா ரிமய மாதி வெற்புளாா புவன வேந்த
ராருளா ரவர்கட கெல்லா மண்டப மமைந்த தம்மா
சேருவார்க் கெல்லா நாதர் திருவடிக் கமலம் போல. (அசா)

வேறு

மன்ற லினகுழு நிறைதலாற ருழ்ந்தது வடபெருந் திசையாவு
நின்ற தெக்கணம் வானுற வுயர்ந்தது நெளிந்தன னுரகேசன்
றென்றி சைக்கடல் வடதிசைச் செழுந்தது திகைததது வடமேரு
மென்ற ளிர்க்கரம் விதிர்த்தனள் பார்மகள் வெருவின வுலகெல்லாம்.

மனிதர் மாதவ முனிவர்பா லுரைததிட மாமுனி வரரேகிப்
புனித வானவர்க் கியம்பவா னவரெவரிப் போந்து பொன்னுலகாளு
நனிகொள் வாசவற குணர்ததிட வாசவ னன்முகற் குரைசெய்ய
வினிய நான்முகன் மாதவற் குணர்த்தின னெழுந்தன ரிருவோரும். ()

உவண யூர்தியுந் திசைமுகக் கடவுளு மும்பருந் திரண்டேகிப் [மற்
புவன மூன்றுமோர் பொருப்பின்மேற படர்தலாற் புவிபொறை யாற்று
கவன மேகொடு வடதிசை தாழ்ந்துதெக கணதிசை மேலாகிப
பவன நோக்கிய தெனவுயர் கயிலையம் பரமர்பா லறிவிததார். (அகூ)

உம்பர் யாவரு முறையிடு தலுந்திரு வுளததிடை யருள்கூர்ந்து
கும்ப சம்பவ முனிவனைத திருமணக் குழாததிடைக் குறிப்பாக
வெம்பி ரான்றிருக் கடைக்கணு ேநாககலு மிறைஞ்சின னெழுந்தேகிச்
சம்பு நாயக சரணென நின்றுவாய் புதைத்தனன் செவிதாழ்த்து. (௯௦)

தாழ நின்றெது பணியென்ப பரவுவான் றனிமனங் களிதூங்க
வாழ்பெ ருங்கட லமுதுகுத தெனத்திரு வாயமலர்ந் தருள்செய்வார்
சூழ்பெ ரும்பதி னல்வகைப புவனமுந் தொக்கபே ரவைகாட்டி
யேழ்பெ ருங்கட லெழுபெருந் தீபமு மெடுத்துமே விசைக்கினுர் ()

மகர வாரிதி நடுவுறை மரகதலம் வளைந்தநா வலந்தீபம
பகரு மாடகக் கிரியொரு பாய்மரந் துருவசக் கரம்பாயல
சிகர வெண்குலக் கிரிகளு நங்கூரத திவிசை நல்லாது
திகரில் பலவுயிரத் தொகைகளே வகைபெற நிறைந்திடும் பலபண்டம.

மன்றல் சேர்பெரு மங்கலக குழலினுன் மகிதல மெனுநாவாய்
தென்றிசைபபுற முயர்நதிட வடதிசை சென்றுதாழ்ந ததுபாராய்
நின்று நீள்கட லமிழ்ந்திடா தினிநிலை நிறுததுதற் கியாம்வேண்டு
மின்றி யெம்மையே யிடைவிடா துளத்தினி லிருத்திய நீவேண்டும். ()

சந்தி ராதித்தர் வலம்வரு முலகெலாந் தழைத்திட மனைவாழ்வு
மிநதி ராதியர் சுவாக்கமு நிலைபெற விமயமீன றருண்மாதை
மந்தி ராகமப் படிமணஞ் செயமனம் வைநதநம பொருட்டாக
நந்தி ராவிட முனிவநீ தென்றிசை நயப்பொடுரு செலவேண்டும். (௬௪)

வேறு

சென்று நீதெக்கணபான மெலிவகற்றித் தென்மலைக்கே செறிந்து வாழ்தி, துன்றுகதிர் முதலவானோ நெறிசெலுத்தி மேருவில்வாழ் துருவன் போல, வென்றுபரம் பரனருள வேறுவிண் ணப்பமென விறைஞ்சி யேத்தி, யொன்றுதமிழ்க குறுமுனிவ னிரண்டுவரம் வேட் டருளா லுணாததுகின்றுன. (௬௫)

முன்னதுநீ யிமயவரைச் செல்விதனை மணம்புரியு முறைமை காணப், பின்னதுநின றிருநடனங் காணவெனு மாசையினுற் பெரிது காலம், பொன்னசலத் திருந்துதவ மியற்றியொரு காட்சிபெறப் போந் தே னிபபா, வினனமுமொன் றுளதாக விரண்டுமெனக் கெய்திடுநா ளெந்நா ளென்றுன். (௬௬)

பணகவரை னாலுடையார் குறுமுனிபா லருள்கூர்ந்து பரிவா னோக்கிக்
கனகவரை யாயிரயாண் டுதவுபல லூருண்டிற் காமக் கோட்டி

சனகவரை கொடுக்குமந்தத தவப்பயனே யோராண்டு தனிலேநல்கு
மனகவரைத் தெககணபாற கேதார முதலுளவென றருளிப் பின்னும்.

தெனபாலி லொருதலதனுக கோடிநா ளுதவுபலன சிறிதுநாளின
முனபாககொடுப்பதொரு தலமுளதங கதுபிறர்கரு மொழியோநம்பா
லன்பாக வினவுமவாக் கருள்செய்வோ மெனவுரைப்ப வருளாயென்று
மின்பாவுஞ் சடைமுனிவன் பாதமலர் சூடிநனும் விளம்பா நின்றார். ()

பொன்மலைகதுங கயிலையெனும் வடமலைக்குந் தென்மலைநின்
பொதிகை வாசத, தெனமலைகரு வடமலைநந் திரிகூடத் திருமலைமேற்
செம்பொன் ஞூட்டு, மினமலைகரு மணிகொழிக்கும் வடவருவிக் குற்றா
லம் விபுல மீன்ற, நின்மலைக்கு மெமகருமொரு பொதுத்தான மூவரு
க்கு நியமத தானம். (௯௯)

புண்டரிகத் தயனுரைப்ப வத்தலத்துப்புரந்தரா தியர்கள்போந்து,
மண்டுபெருந் தவம்புரிந்து மாருத பாதகங்கண் மாற்றுந் தானம், விண்
டலதோர் மகிதலத்தோர் வினைதீர்க்குங கஙகைவினை தீர்க்குந் தானந்,
தண்டமிழ்ச்சொன் மாமுனியே தருமமொனறு கோடியெனத் தழைக்
குந் தானம் (௱)

செல்வம்வேண் டினர்க்கருளத திருநமைக்காத் திருப்பதறை
செங்கண் மாலுங், கல்விவேண டினர்ககருளக் கலைவாணி யுறைதலிறை
கமலத் தோனும், வெல்விசையங் கொடுப்பதறகுக் கொற்றவையு மகப்
பொலிவால் வேள்வி வேநது, நல்வடுகச செய்மலுஙகாத் துறைதானந்
தமிழ்ச்சுருதி நடிககுந் தானம் (௱க)

முததநகை யாமகளிர் முலைததடத்து வாருவர்கண் முயங்குந்
தோறு, முததரிகந் துயல்வருவா னவாபுயத்தி லவர்முலைக்கோ டிழக்குந்
தோறு, மித்தலத்தின மகிமையெனக களிகூர்ந்து திசைநோக்கி யிறைஞ்
சுந் தானஞ், சித்தர்சா ரதரியக்சர் கின்னரர்கிம் புருடர்தவஞ் செய்யுந்
தானம். (௱உ)

பந்தாடல் கழங்காடல் கற்பகப்பூம் பந்தரிடைப் பசும்பொன் னூசல்
வந்தாடல் கஙகைநதி விளையாடல் பூங்காவின மலர்கொய் தாட
லிந்தாடன் முகமலரை விந்திரனோ டாடுதொறு மிந்தி ராணி
சந்தாடன் முலைதடிப்ப விதழ்துடிப்பப் பாடியசீர் தழைக்குந் தானம்.

வேறு

கலைபெருங் கடல்க ளெல்லாங் கருநதினி லடக்கிக் கைபி
லலைக்கட லடக்கி நம்பா லருட்பெருங் கடலி லாடு
நிலைக்கட முனிவ கேண்மோ நின்மலப் பனையும் யாமுங்
கொலைக்கட கரிசெய் பூசை கொண்டினி திருக்குந் தானம். (௱ச)

அங்கர்க் கணியா யூழி யாழிதாங் கெயிலா யோங்கு
முன்னதத திரிகூ டத்தி லுததர பாக மாக
நன்னர்சித் திரப்பூங் கங்கை நமதரு ளாகத தோன்றி
முன்னின ரெவர்க்கும் பாவ மோசனஞ் செய்யா நிற்கும். (௱ரு)

தேனமர் திரிகூ டத்திற் சித்திர நதிதோய் வார்க்குத்
தானமுந் தவமும் வேறு தருமமுஞ் செய்ய வேண்டா
ஞானமும் புகழுங் கல்வி நலங்களும் பொருளு மெய்தும்
வானவர் பதமும் வேண்டும் வரங்களும் கொடுக்கு மாதோ. (௱சு)

உத்தர முகம தாக வுயர்திரி கூடந் தோன்றுஞ்
சித்திர கஙகை நம்பாற் றிருமணங் காண வேண்டி
யித்தலை போந்த தங்க ணெய்துதற் கருளு கின்றே
மத்தலை யகநீ ராடி யருந்தவம் புரிதி யென்று. (௱எ)

வேறு.

வேடனொரு பன்றிதொடர்ந் தொருதுறையில் வீழ்ந்துபெற்ற வீடு பே
றேடருமெய்த் தலமூர்த்தி திரிகூட வடவருவித் தீர்த்தஞ் சத்தி [றாக
பீடமகி மையும்வேதக் குறும்பலா மானமியமும் பிறவு நாளு
மாடல்பெறுஞ் சிற்பொதுவி னதிசயமுந் திருவாக்கா லருளிச் செய்து.

ஓதியபே ருலகனைத்து மொடுக்குமுறை யொடுங்கியநா ளொடுங்கா
தாகி, நீதிபெற நமதருளா னின்றபுடார்ச் சுனபுரத்து நின்றி யாமே,

சோதிபெறு திருமுகமா யிரம்படைத்துத் தரும்புவனத் தொகைக ளெல்லாம், போதிலுறை யயனாகி வகுத்தருளித் திருமாலாய்ப் புரக் கின் றேமால். (௱கூ)

மாலாகி யிருக்குங்கமைப் பணிந்துசிவ வடிவாக்கி மகுட மென்னு நூலாதி யாகமத்தாற பூசைசெய்து நுவலுமணக் கோலங் காண்டி மேலான திரிகூடச சாரலிடை யைஞ்ஞூறு வேள்வி செய்து நாலான மறைபரவு நமபெருஞ்சித திரசபைக்கே நடனங காண்டி. ()

மூந்தமலை யொடுநாமு மினிதுறைபுங குறறால முறையிற போற்றிச் சந்தமலைத் தடங்கோட்டி லுறைதியென வருளுதலுந் தம்பி ரானை வந்தமலைக் கடலடக்கு மலர்கையாற் பரவிநின்று வரம்வே றொன்று விந்தமலை வாதாவிக் கிடந்துடிப்ப வலம்புரிந்து வேண்டிப் பின்னும் ()

தொழுதுபுனல வேண்டுதலும் பொன்னிநதி சென்னிமதித் தொடையார் நல்க, வொழுகுநிறைப் பெண்டகைமா ராண்டகைபின் றனித் தேக லுரித்தோ வென்றாள, கெழுதகைநம் மண்பணிவ னிருவினைவென றவனைனமே கிளப்ப மீளும், பொழுதுகுறித் தருளுகெனப் புவியில வன் கைகாட்டும் பொழுதே யென்றார். (௧௧௨)

நம்பரருள் கொண்டுவிடை கொண்டேகித் தென்புவியி னவைகண் மாற்றிக், கும்பமுனி தண்பொதியந் தென்பொதிய மாமலைமேற குறுகுங் காலை, யும்பர்வட திசைபோலத் தென்றிசையு மொத்ததுகோ வணத்தா லோர்நா, ளெம்பெருமா னமர்நீதி யுவந்தேறு மொருதுலையி னிருந்தட் டேபோல். (௧௧௩)

வேறு.

ஒருதிண்புவி கோணற நிறறலி னுமப ரெல்லாம்
வருநம்பனை மாலிம யத்து வணங்கி யாத்தா
ரிருமங்குலி ஞெதியை யோதிய ரீன்ற பொன்னைத்
திருமங்கையர் பொற்பினை யொப்பனை செய்வ தானார். (௧௧௪)

அகிலாண்டமு மீன்றழ குக்கழ காகினாளைத்
திகழ்பேரெழி லுக்கெழில் செய்யவள் செய்ய நேர்ந்தா

ளிகமேனுறு பேதைத்தமை மாதரிபறகை யாலோ
சகமேலவள வுககள வாரவை டனமை மேதாநேதா. (ககரு)

ஆலத்தை யவர்க்கமு தாக்கி யகண்ட மெல்லாஞ்
சாலப்பொரு மங்கல பாக்கிய நைய லாட்கு
சோலைத் திருமேனியை மங்கல மேலங் கொய்யப
காலத்தினை முனொணரிய பூசைக டனமை மைந்தாள். (ககசா)

கங்கைப்புன லாட்டி மணிக்கலை சீறு சாத்தி
யங்கைத்திரு மாமலர் செய்த வருந்த வத்தான
மங்கைக்கணி செய்வது போன்மலர் மாம டந்தை
செங்கைப்பல செம்பொ னணிக்கணி செய்வ தானாள். (ககஎ)

காராடு கருங்குழ லாகிய சங்குன் மீதே
தாராகண மொய்த்தத தெனப்பல தார்கள் சூட்டி
யோராடிய கொண்டலின் மின்றனை யிட்ட தேபோற்
சீராடு தலைப்பணி புத்தி திருத்தி னாளே (ககஅ)

கருமைக்குழல் விண்டுளி நுண்டுளி காட்டு மாபோற
பருமுத்தணி தொங்க லசைத்தொரு பட்டம் வீக்கி
யொருமைப்பிறை மேலிரு பானு வுதித்தன் மான
விருமைத்தில தந்திரு நெற்றியி லிட்டு மாதோ. (கககூ)

குமிழ்முத்த மணிந்தனள் கொவ்வை முகிழ்க்கு முத்தி
னமரத்தவ மூசியி னிறகுமோ ராரமேபோற
கமழ்பொற்குழை யிற்குழை சாத்தினள் கால நீல
முமிழ்கட்கட விறபுடை பாய்சற வொத்து லாவ. (கஉ0)

வயிரப்பணி தங்கிய கொப்பு வயக்கு கினமுள்
பயிலபொறகுழை யூடுரு விக்குழல, பாய்கண் வாளி
கயிலைத்தனி நாயகா சிந்தை கவற்று மென்றே
வெயிலைப்பொரு வாளி தனைப்பொரு மென்று தாணே: (கஉக)

வருமங்கல நாணணி மல்கு வலம்புரிக்கே
திருமங்கல நாணணி தாங்கம தாணி சேர்த்தித்

தருமங்கல மான தடங்கை தனைத்தி னருகும்
பெருமங்கல மாகட கஞ்சரி சங்கு பெய்தாள் (௧௨௨)

மதர்வைத்த விழிப்பொரு காரை வலஞ்செய் கார்போ
லாகநிகரெழு நஞ்சென வஞ்சன மொன்று தீட்டி
விதுவைத்தன வெள்ளி வளைக்கு முகிழ்த்த கஞ்சங்
கதிர்வைத்து விரித்தன பொற்கணை யாழி யிட்டாள். (௧௨௩)

எழுமுத்தலை மீனுறை முற்றுவ தின்றி முற்றுச்
செழுமுத்த முலைத்துணை முக்கணார் செவ்வி யெய்தக்
கெழுமுத்தவ மெய்தின வொன்று கிளர்ந்து பைம்பூண்
முழுமுத்த மிடற்றினை முத்தணி யாரமிட்டாள். (௧௨௪)

பொருதுன்றின முலைத்த கரும்பொடு வல்லி போல
முருகுந் தொயில் குங்கும மானமத மொண்டு தீட்டிப்
பருமப்பெரு மேகலை தந்து பணிக்க லாப
மருமென்கலை சுற்றி மருங்குலை வாட்டி நின்றாள். (௧௨௫)

போதுங்கல னுந்திரு மேனி பொதிந்து நின்றீ
ரேதின்று செயுங்கொன் மருங்கென வேங்கு மாபோற்
பாதங்கள் புலம்பு சிலம்பொடு பாத சாலங்
கீதம்பொலி கிண்கிணி தண்டை கிளர்த்தி யிட்டாள். (௧௨௬)

வேறு

பொருப்பினுக் கரச னீன்ற புனைமலர்க் கொம்ப னாளை
யருந்ததியால் வலங்கொண் டேகி யணிமணிக் காப்புச் சாத்திக்
கருப்புர தீபஞ் சுற்றிக் கண்ணெச்சில் கழித்து நின்று
டிருப்பதம் பரவி முனமே திருப்பதம் பெற்ற செல்வி. (௧௨௭)

முனிவர ரெழுவர் போந்து முகூர்த்தம்வந் துற்ற வாற்றுற
பனிவரை யரசை நோக்கிப் பாவையைக் கொணர்வா யென்ன
நனியவ னருளாற் போந்து நளிர்வரைக் குலத்து மாதர்
புனிதநா யகிமுன் கூறப் பொருக்கென வெழுந்தாண் மன்னோ. (௧௨௮)

செல்வியு மதுர வாணி தேவியு மெழுந்து போற்றி
மெல்விரற் றளிர்க்கை யேந்த வியன்வல மிடப்பால் பற்றி

யெல்விரி காலை மாலை யேத்துவார் தமக்கே செல்வங்
கலவியுங் கதியு நல்குங் கரதலத் தியற்கை காட்டி. (கஉகூ)

அலத்தக முறுத்த தாளி லயிராணி மலர்க டூவப்
பலப்பல சிலம்பு தண்டை பயப்பயப் பயவென் றார்ப்பத்
திலகத்தமை தூசு தாங்கச் செயமகள் மருங்கு காப்ப
நலத்தகுங் கன்னை யாதி நங்கையர் கவரி காட்ட (கஙo)

உருப்பசி களாஞ்சி தாங்க யோகினி யடைப்பை யேந்த
விருப்புறு நடைப்பா வாடை மேனகை விரிப்ப யாண்டும்
பருப்பதக் குலத்து மாதர் பணிகளி தெறிப்ப வேதந்
திருப்பலாண் டிசைப்பத் தெய்வச் சிலதியர் சுண்ணந் தூவ. (கஙக)

கின்னர மகளிர் பாடக் கிரியர மகளிர் வாழ்த்தப்
பன்னகர் குலத்து மாதர் பன்மணி விளக்க மேந்த
வன்னமென் பெடையு நாண வணிமலர்க் கொம்பர் நாணப் [றாள்.
பொன்னிளங் கொடிபோ லொல்கிப் பொருப்பிளம் பிடிபோற் சென்

குலத்திரள் கொங்கை காட்டக் குணத்திரள் வடிவு காட்ட
நலத்திரள் சுமந்து தொய்யு நாண்மலர்க் கொம்பு போல
நிலத்திடை யிறைஞ்சி யேகி நீளரித் தவிசி லெம்மான்
வலப்புறத் திருந்தாள் வல்லி மதியுடன் விதிசேர்ந் தென்ன. (கஙங)

மணபெற்றார் சுவர்க்கம் பெற்றார் வரைபெற்றார் திரைகள் பெற்றார்
விணபெற்றார் புவன மூன்று மிகப்பெற்றா மகப்பெற் றாரிற்
பெண்பெற்றார்க் கெய்தாப் பேறு பெற்றன னிமய வேந்தன்
கண்பெற்றா ரன்று பெற்றார் காட்சியாற் பெறும்பே றெல்லாம். (கஙச)

இன்னண நிகழு மெல்லை யிமயவெற் பரசி மேனை
மின்னனூர் தசும்பி லேந்தும் விசும்புதோய் கங்கை நீராற்
சின்னவெண் பிறைசேர் மோலித் தேவனெம் பெருமான் கஞ்சப்
பொன்னடி விளக்கிச் சாந்தார் பூவினற் பூசை செய்தாள். (கஙரு)

அந்நிலை யிமய வேந்த னருந்தவக் கொழுந்தின் செங்கைக்
கனியம் புயத்தை முக்கட் கருணையங் கடலின் பாணி

மன்னுற வமைத்துப் போற்றி மங்கலச் சொல்லால் வாழ்த்திப்
பன்னெடும் புவன வாழ்க்கைப் பயிர்தழைத் திடநீர் வார்த்தான். ()

முழங்கின முரசு பேரி முழங்கின துடிதடாரி
முழங்கின சுருதி வேத முழங்கின பணில நாத
முழங்கின முனிவ ராசி முழங்கின நடன கீத
முழங்கின குரவை யோதை முழங்கின திசைக டோறும். (க௩௭)

ஆடினர் பவுரி மேன்மே லார்த்தனர் சிரமேற் செங்கை
கூடின ரனந்தா னந்தத் துறைபடிந் தாடி யாடிப்
பாடினர் பரமகீதம் பரவின ரழியா வின்பந்
தேடின ரகில நாதன் றிருமணங் கண்டோ ரெல்லாம். (க௩௮)

தாமரை யுழவன் வேதச் சடங்கெனுந் திரளேர் பூட்டி
யோமநன் னிலஞ்செய் யாக வுயர்திர வியங்கள் வித்திக்
காமரு தேனு நெய்யாங் கமழ்புனல் வார்ப்ப வார்ப்ப
மாமகப் பயிராஞ் செந்தீ வலஞ்சுழித் தெழுந்த தன்றே. (க௩௯)

குணின்முர சியம்ப வொற்றை வலம்புரி குளிற வாணி
துணைவனே சடங்கு செய்யச் சுருதிமங் கலநாண் சாத்தி
யிணையிலி முக்க ணெம்மா னிமயமான் மலர்க்கை பற்றி
மணநிறை கோலங் காட்டி வானவர் வாழ்த்த நின்றார். (க௪0)

பிலத்துறை வேந்த னோரா யிரப்பெருந் தீப மேந்த
மலர்த்திரு மகள்கொண் டாட வாணிமங் களங்கள் பாடக்
குலக்கிரி மகள்பின் னேகக் கொழுந்தழல் வலங்கொண் டேகி
நலத்தகு பொரிக டூவி நயம்பெறு வேள்வி யாற்றி. (க௪க)

செப்பொடு பணைத்த கொங்கை திருப்புயங் காணுந் தோறுங்
கொப்பொடும் பொருவாட் கண்ணாள் குலத்தொடு பணைப்புக் காட்டக்
கைப்பிடித் தருளுங் கையாற் கால்பிடித் தம்மி சேர்த்தி
மெய்ப்புகழ் வசிட்டன் றேவி விண்ணிடைப் பரவக் காட்டி. (க௪௨)

மருமலர் விதான வேள்வி மண்டபங் கடந்துள் போகித்
திருமணை வரையின் மேவித் தேவியுந் தாமு மாக

வருமணக் கோலக் காட்சி யருளிவீற் றிருந்தார் மன்னோ
கருதுவார் கருதும் வண்ணங் காட்சிதந் தருளும் வள்ளல். (௧௪௩)

வருக்கையின் சுளையும் பாலும் வாழைமென் கனியும் பாகு
மருத்திமாம் பழமுந் தேனு மமிழ்தெனத் திருந்தி யனபாற்
பருப்பதத் திறைவன் செம்பொற் பாசனத் தமைப்ப நாதர்
திருக்கைதொட் டுவந்தா மென்றார் செகமெலா நிறைந்த தம்மா. (௧௪௪)

வாசனைச் சுகந்தம் பன்னீர் மணங்கெழு தெய்வச் சாந்த
மீசனெம் பெருமான் முன்ன ரியற்றின னுவப்பப் பின்னர்ப்
பாசன நிமல சேடம் பரிசனத் தவர்க ளேந்தத்
தேசன தருளா லுய்த்தான் றிருமணக் குழுவுக் கெல்லாம் (௧௪௫)

நிமலர்பாற் கழித்த சேட நின்மல வுணவைத் தேவ
ரமரர்கோன் முனிவர் பூத ருருத்திர ரயன்மா லாதி
யிமவரைக் கிறைவன் மேனை யேனைய சுற்றத் தாருந்
திமிலமுற் றருந்திச் சென்னி தெளித்தனர் களித்தார் மன்னோ. (௧௪௬)

சொல்லற நின்றோர் வீறுந் துறவறத் திருந்தார் பேறு
மில்லறம் புரிவார் தம்பா லியைவதா விருமை யார்க்கு
நல்லற மெனவே வானு ஞாலமுந் தெளியக் காட்டி
மெல்லற லனைய கூந்தன் மணந்துவீற் றிருந்தா னெங்கோன். (௧௪௭)

மாமனூர் பரவத் தெய்வ மலையாட்டி மகிழ வைகிச்
சோமனூர் புனைந்த வேணித் தூங்கனூ ரமரர் வேண்டக்
காமனூ ராவி மீட்டுக் கவுரியுந் தாமு மாகப்
பூமனூ ரணனும் போற்றக் கயிலையம் பொருப்பிற் போந்தார். (௧௪௮)

திருப்பொலி மழுவா ளங்கைச் சிவபிரான் கயிலை மேவி
மருப்பொலி குழலுந் தாமு மடங்கலா சனத்து வைகி
யுருத்திர ரயன்மா லாதி யமரர்மா முனிவர்க் கெல்லாம்
விருப்பொடு சிறப்பு நல்கி விடைகொடுத் தருளப் போந்தார். (௧௪௯)

கயிலைமால் வரையின் மேய கண்ணுதற் கருணை மேகஞ்
சயிலமின் னொருபான் மேவித் தண்ணளி பொழித லாலே

பயிலவன வூர்வ நிற்ப பறப்பன நடப்ப வாதி
யுயிரெலாம பயிரா யீரே மூலகெலாந தழைதத மாதோ. (௧௫௦)

மவுனநாண் மவுன மூறறுா மடநலைதயை மணந்த ஞான்றே
பவனமேல் விணமேன் மணமேற பாநதபா தலமேன் மறறைப்
புவனமே லுள்ளோ ரெலலாம் புவனபோ கஙகள் பெற்றார்
சிவனது செயலே யல்லாற செயலுணடோ வுலகுக கெல்லாம். (௧௫௧)

சூரிறு லலக்க ணெய்தித துயரபெரி தாற்று ராகி
மேருவின் மறைநது வைகும விரிஞ்சன்மான முதலாம் விண்ணோர்
காரியல் கண்டத் தண்ணல கயிலையின் முறையிட் டார்க்கு
நேரிழை யொருபால் வைகு நின்மலன கருணை கூர்ந்து. (௧௫௨)

மூந்திரா சியமு மாக மூவிரு முகமாய்த தோன்றிச்
செந்தழற பொறிக ளாறு தநதனர் மீதவ ருய்ய
வந்தமாப் பொறியைக காறு மஙகியுங் கங்கை சேர்பப
வுந்துவா னதிகொண் டேகிச் சரவணத் துய்த்த தன்றே. (௧௫௩)

இமயமேற் சரவணப்பூந் தடத்தினி லெயதி வாசக்
கமலமேற் பொறிக ளாறுங் கண்ணுத லருளி னாலே
யமர்தரு குழவி யாறா யாறுமீன் முலைப்பா லுண்டு
தமரநீ ருலகும் வானுந தழைத்திட வளருங காலை. (௧௫௪)

எந்தையா ருடனபூ வாவி யெய்தினு ளிமயச் செலவி
மைந்தரென் றெடுப்ப வாறு வடிவமும் படிவ மொன்றா
யந்தமார் முகஙக ளாறா யமபிகை முலைப்பா லுண்டு
கந்தவே ளெனப்பேர் கொண்டு கயிலையின் வளர்நதான் மன்னோ. (௧௫௫)

அன்னவ னண்ட கூட மலைதகெழு தசர்மேற லாவி
நன்னவ வீரர்சூழ மேடமேன் ஞாயி றென்னப்
பொன்னமர் பொருபபும் பொன்னுட் டிறைவனும் புத்தேள் யாரும்
வெந்திடக் கதிர டாதது விதிசிறை யமைதது மாறறி. (௧௫௬)

மிறைபுரி கொடுஞ்சூ ரிட்ட விண்ணவர் சிறையை மீட்பான்
முறையிடு மகவா னாதி முதலவர்பா லிரஙகி முககட

கறைமிடற றண்ண லேவக் கண்களா யிரத்தோ னான
சிறைமயி லூர்ந்து செந்தீச் செல்வனாஞ் சேவ லேந்தி (௧௫௭)

உருத்திரா கொடுத்த தானை பதினொரு காத்து மோங்க
வருத்தியா லகில நாத னருளும்வே லொருகை தாங்கிக்
கிருத்திமத் தானை வெள்ளங் கிளாதாத துணைவர் சூழ
மருத்துவர் முதலோா கோயகரு மருத்துவ னெனவே போந்து. (௧௫௮)

வன்கடல் சுவற்றிக குன்ற மெறிந்துவல் லசுரர் சேனைத்
தென்கட லணைத்துஞ் செவ்வேல வடவனற கிந்து சூத
நன்கடல் புரிந்து வீழ்த்து நனிகட வுளரை மீட்டுப
பின்கடன் மிசையோர் பானுப பிறையுட னுதித்தா லென்ன. (௧௫௯)

மரகதக் கலாப துங்க மணியணி விழும யூரக
குரகத முகைத்து வெண்பாற் குக்குடத் துவச மேந்திச்
சுரர்குழாத தேகிச் செந்தூர் துறையெழீஇத் திரிகூ டத்துத்
தரணிபீ டத்து நீஙகாத் தந்தையார் பாதம் போற்றி. (௧௬௦)

புரந்தரன் மகளை வெற்பின புள்ளிமான் மகளை வேட்டுப்
பரங்கிரி தணியன் மேவிப் பரவுகுன் றிடநதோ ருடி
வரங்கெழு கயிலை நண்ணிக் கநதவெற புறைதன் மான
வரன்றிரி கூடம் போற்றி யிலஞ்சியி லமர்நதா னையன். (௧௬௧)

தேவர்தந் தேவர் தேவன் றிருமணப் பொலிவீ தென்று
தாபதர்க் குணர்த்தப் பின்னுந் தமிழமுனி தென்பாற் சென்று
மேவரும் புதுமை யாவுந் தொகையுற விளம்பா நின்ற
யாவலின் விரிவா யெங்கட் கருளென வறைவான் சூதன். (௧௬௨)

இரண்டாவது திருமணச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உ௧௪.



## மூன்றாவது திருமால் சிவபிரானான சருக்கம்.

ஐந்துநூற் றிரட்டியுட னிருநா லண்ட மரசுசெயுஞ் சூர்மாய்ப்ப வடல்வேலேந்திச், செந்தின்மா நகரில்வரு குமர வேட்குச் செங்கண்மா லயன்றேவர் சபையி னூடே, விந்தைவான சுரர்குருவாய் புதைத்துப்

போற்றி விண்ணப்பஞ் செய்ததெனத் திருக்குற் றாலத், தெந்தைமால் வடிவுசிவ வடிவ மாக விருந்தருளு மகிமையெடுத் திசைப்ப தானை.()

கற்றாரும் பலகலை நூற கவிவல் லாருங் கதிபுகன்முத் தமிழுடையீர் கயிலைச் சாரன, முற்றாலி னுயர்ந்தகுறும் பலவின் மேவு முதலைப்போ லுயர்கருணை முதலு மாதிக, குற்றாலம போலுயர்ந்த தலமுளு சைவக் குறுமுனிபோன் மாதவனுந் திரிகூ டத்து, வற்றாத வடவருவி நிகர்க் குந தெய்வ வரைநதியுந திரிபுவன வரையி லுண்டோ. (௨)

மூவுலகும் பனிவரைமேன மொயத்த தாலே முதியதிசை தெற் குயர்நது வடபாற் றாழநத, பூவுலகின் பெருஙகோட்டந் தவிர்க்க வேண டிப் புரந்தரனமா லயன்முதலாம வானோர் சங்கம், யாவுமெதிர் நிற்கவுநீ போதா யென்ன வெமபிரான் பிறைமவுலித தம்பி ரானுந், தேவர்பி ரான றிருவாககா லருளிச செய்தான சிறியதொரு குறுமுனிவன் பெருமை யமமா (௩)

திரிகூட விரித்ததமிழ் முனிகருநா தன் மிக்கபுடார்ச் சுனபுரத்து மாலா மெம்மைப், புரிகூட முடித்த சடைப் பரம னுக்கிப் பூசைசெய்து வதுவைநடங் காண்பா யென்ன, வரிகூட வயன்றேடிக் காணொ ணாத வண்ணலார் திருவாக்கா லருளிச் செய்த, திரிகூட வரைநோககிச் சிநதை கூடச செய்தவமுங் கைகூடச் செல்லு கின்றான. (௪)

வேறு.

வரதனரு ளாலிமய மலைகடந்து கலைகடந்த மலைய யோகி
பரத னுறை கருமகண்ட மொன்பதுபா கத்திலெண்மர் பாக நீக்கி [ங்
விரதநெறிக குமரிகண்ட மாயிரம்யோ சனைக்குள்வந்து விசையத் தண்ட
கரதலத்து மணிவிளக்காக கவுஞ்சவரை யிருட்படலங் கடந்து போகி.()

எந்தைகும ரப்பெருமா னேவுநெடும் படைவேலா லிமைப்பி னீறுச் சிந்திடுகி யெனச்சாபம் வரைக்கமைத்துக குடுமிதொறுந்தெய்வச்சாபக் கந்தாஞ்சேர் கேதார வரையணுகிச் சிவபெருமான் கழலகள் போற்றி மைந்தனுந்தன் றேவியும்வாழ் விதர்ப்பநா டணைநதுவளர்காசி மன்னி.

மேருவுடன் பணைப்பாகி யாழ்புனிவன் புணாப்பதனால் விந்தஞ் சோம, சூரியனை மடுத்துலகி னெறிதடுத்தக குறுமுனியுந் தான்று தோங்கி, நேரியாகரும பூரியாசகு மூனறிரண்டொன் றெனத்தீதரு நெறியுந் தீர்த்துச, சீரியரல லார்க்குவந்த செலவம்போ லிறுமாந்து திமிர்த்த தனறே (எ)

கரவிந்த வரைவளர்நத தெயவளமோ வவ்வளவுங் கையை நீட்டி யரவிந்த மசலமிசைக கவிததுதெனக குடுமிபறறி யவனி தாழ்ப்பத் தரவிநத ருறைமனத்தா யுய்வதரு ளென்று சென்னி தாழ்தத தம்மா வரவிந்த முறையெனமே லவாமுனனே யறிவாவநதா லறிவர் கீழோர்

செம்புவரை தனிமேலகி வெள்ளிவரைக கிவ்வழிநான் செல்லுங் காறும், வெம்புவரைக் குடுமிபடிந் திவ்வாறு கிடததியென விளம்பி யாதிச், சம்புவரை நாண்டுகிலாஞ் சாதிமிரு காதிகள்சஞ் சரிகருங் கான்போய், நம்புவரைச் சலம்வருததும் விலவலன்வா தாவிவன நண்ணி னுனல் (கூ)

உருத்திரா வணந்தனக்கு வருவதுண ரான்வருவ துணர்ந்து மேனாள், விருத்திரா சுரனெனுநம் மேலோனை முடிப்பதற்கா வேலை யுண்ட, குருத்திரா விடமுனியை வெலலவிது தருணமெனக் குறிப்பி னோர்ந்து, கருததிரா வணமிருணட விலவலன்மெய்த் தவவேடங் கரவிற் பூண்டான். (கo)

குறுமுனிமுன் போய்விருந்து விளம்பியொரு சாலையுய்த்துக் குறைதீ ரனன, மறுமுனிதண் டெலததமைதனுக் கருணைவாதா விதனை மறிசெய் தாககி, யுறுமுனிவு விருப்பகன்று னுண்டதறபி னயன்வரத்தா லொருகாற கூவக், கறுமுனிமுன கறியானன் மறியாகி முனியுதரங் கலககா நின்றான். (கக)

அன்னவனவஞ் சனையோர்ந்து பரமன்வரத் தான்முனிவ னக நகை யாலே, தனனகடு தைவரனுந் தலைவனுண்ட காளமெனச் சமி த்தான் பின்னோன், முனனவன்வெஞ செருபபயில முன்னுதலுந் தருப்பையினுன் முடிதது வீட்டித், துனனுபுனற் கோதமியிற் படிந் தாடி மல்லிகார்ச் சுனமும் போற்றி (கஉ)

ஆனதுங்க பத்திரிகன னதிபடிந்து காஞ்சிநக ரருணை போற்றி
ஞானதுங்கர் முதகாறு திருமுதுகுன் றமும்பரவி நயப்பா லேகும்
பீனகும்ப சபபவனே விலவலன்வா தாவிகொடும் பிரமச் சாயை [ல.
கானமெஙகுந் தொடர்ந்துதொடாந்தலைத்ததா லாறலைக்குங்கள்வர்போ

அஙகிருந்து மறைச்சிறுவ ரிருவர்போ லுருவெடுக்கு மடிக்கு
நீங்கு, மெஙகிருந்து மிகல்விளைக்கும் பழிகுறிக்கும் வழிமறிக்கு
மினைக டாப்பான, கொஙகிருந்து சிவபரனைக குறுமுனிபூ சனைபுரிந்
தான் குலிச வேந்தன, பொங்கிருந்தண் காவிரிககாப் புகலிதனிற்
கயமுகனைப் பூசை செய்வான். (௧௪)

வேறு.

ஆவினி லைந்து பலோதக மைந்தோ டைவகைத் திரவிய மைவகை
யமிர்த, நாவி மதங்கமிழ் சாந்தமு மாட்டி நற்கலை பூண்மலர் மாலை
யணிந்து, தூவிய பாளித பாயச மன்னஞ் சுவைதரு மோதகம்
வடையவல் கன்னல, மேவிய பண்ணிய முப்பழ மப்ப மிக்கநி வேதன
மொக்கவ மைத்து. (௧௫)

தூபமு டன்பல தீப மியற்றிச் சோதி தரும்படி மக்கல மேந்தி,
மாபல சத்திர சாமர மேந்தி மறைபயி லாயிர நாமமு மோதித்
தாபன மந்திர வோம மியற்றிச் சயசய சயவென வானவர் வாழ்த்தத,
தீபமெ னுங்கய மாமுக வாழ்வைச் செஞ்சர ணிற்சர ணென்று
பணிந்தான் (௧௬)

படலையின் மலரறு கணிபவ சரணம் பனிவரை மகள்பெறு
தனிமுதல் சரண, நடமிடு பரிபுர பதயுக சரண கதிபதி நிதிபதி
யதிபதி சரணங், கடன்மடை யெனவரு மதமலை சரணங கயமுக
நிசிசரன் வயவரி சரணங், குடநிகர் தடவயி றுடையவ சரணங்
குணதர சிவசுத கணபதி சரணம். (௧௭)

முடியடி தெரிவரு முதியவ சரண முறைதெரி மறையவ ரிறை
யவ சரணம், வடிவினி லுயரிய பெரியவ சரணம் வலவையை மருவிய
புயதர சரண, நெடியவன் விழிதரு நெடியவ சரண நினைபவர் பவமற
நினைபவ சரண மடியவர் வினைகெட வருள்பவ சரண மரகர சிவசுத
கணபதி சரணம். (௧௮)

வேறு.

எனவருச் சனைசெய் வானமுன் னெழிற்கர மைநது நானகு
கனவரைப் புயமுந் தோனறக கடகரி முகதெங் கோமான
றினகரோ தயம்போல வந்தான றேவாகோன விழிக ளெல்லாம்
வனருகக் காடு போல மலாநதனன வணங்கி வீழநதான. (கசு)

பாகசா தனனை யம்பா லங்குச பாசச செங்கை
யாகுவா கனநது முகக ணைங்காத தானை நோககி
யோகையா லுனது பூசை தோத்திர முவந்தோம் வேணடும்
வாகைசேர் வரஙகள் கேணமோ வென்னலும வணங்கி வாழததி. (உ0)

பந்தன முலையாள் பாகப பரனறிருப பள்ளித தாம
நந்தன வனங்கள் வாடி நலிந்தன தழைகருங் வண்ணாஞ்
சநதன வனங்கள் சூழுந் தனிவரை முனிவன கைமேல்
வந்தனள் பொனனி யீணடு வரப்பணித தருள்வா யெனறான். (உக)

காண்டகை யணடங் காககை யெனக்கய முகததோன் செல்லச்
சேண்டகை யணடங காககைத் தேவனென் றுணரான் கும்பன்
கூண்டகை நீட்டி யோச்சக கும்பநீ ருண்டத தாலே
யாண்டகைக் கவிழப்பப பொனனி யருள்வழிப் பார்மேற் புககாள். ()

புக்கபா ரிடந்து பாரப் பொருப்பினை யெடுத்து வாரிச்
சக்கரஞ் சங்க மேந்தித் தடம்பணை மருத முந்தி
நெக்கநீப புள்வாய போழ்ந்து நெடியபே ரமபி னாலே
மைககடல கிழிதது நேமி வளருமால பொருவும் பொன்னி. (உ௩)

பொனனியைப் பிரித்த பிள்ளை பூசுரப பிள்ளை யாகச்
சென்னியிற செஙகை தாககச சேறலு மஞ்சி னனபோ
லனணிய னணிய னாகி யாசைக டோறு மோடிப
பனணிசை முனியோ டாடல் பலபல பயின்றா னையன். (உச)

பாரின்மேற் படர்ந்து மேழு பரவைமேற கடந்தும் பார
மேருமேன் மிதித்தும தாவி விண்ணினமேற் குதித்தும் வேண்டுஞ்
சாரிமேல் விளைததா னையன் றமிழ்முனி யிளைத்தா னம்மா
வாரியன் மகிமை பார்ககி லாதியம் பரனே வென்றான. (உ௫)

குறுமுனி மெலிவு நோக்கிக் குஞ்சர முகத்தெங் கோமா
னுறுதனிப் பிறைவெண் கோடு முப்பயா தமுமுக் கண்ணுஞ்
செறிதிருப் புயங்க ணான்குஞ் செழுமலர்க் கரமோ ரைந்து
மறுகணி முடியுந் தோன்ற வருளொடுந் தோன்றி நின்றான். (௨௬)

நம்பியோ விதற்கா வந்தா னுனிதோ கொடுமை செய்தே
னெம்பிரான் சென்னி தாக்க வெடுத்தகை யிதுவோ வென்று
பம்புதன் சென்னி செந்நீர் பறிபட நின்று தாக்குங்
கும்பமா முனியை நோக்கிக் கும்பமா முகத்தெங் கோமான். (௨௭)

மாதவ வனுசெல் சென்னி வருந்தநின் செங்கை தாக்கு
மீதுவந் தனையாக் கொண்டோ மிவ்வணம் புரிவார்க் கெல்லாங்
கோதிலாக் கதிகள் செல்வங் கொடுக்கின்றே நினக்கு வேண்டுங்
காதலோ வரங்கள் கேண்மோ கருதின தருது மென்றான். (௨௮)

நீசமண் டலத்து நன்னீர் நிறைத்தரு ளென்று நாதன்
மேகமண் டலத்து முந்நீ மிசைந்தெனத் துதிக்கை நீட்டி
மாகமண் டலத்து வாரி மானுகா விரிநீர் வாரிக்
காகமண் டலத்திற் சாய்த்த கரகமண் டலத்திற் பெய்தான். (௨௯)

கரகநீர்ப் பெருக்கும் பார்மேற் காவிரிப் பெருக்கு நோக்கிப்
புரகர னருளின் மிக்காம் புதல்வனமெய் யருளென றேத்திச்
சிரகர கம்பஞ் செய்து தெண்டனிட டிறைவ னேகக்
குரகதம் வடபாற் செல்லக் குறுமுனி தென்பாற் சென்றான். (௩௦)

சுழியெறி தரங்கப் பொன்னித் துறைகெழு குடந்தை யாரூர்
வழிபுனற் றிருவை யாறு வலஞ்சுழி மருதூர் மாயன
விழிதுயி லரங்கங் காவை வெண்காடு மறைக்கா டேத்திச்
செழுமறைப் பொருளார் தொல்லைத் தில்லைமா நடனம் போற்றி. (௩௧)

தருபுனற் செழுங்கா வேரிச் சங்கமத் துறைநீ ராடிக்
குரைகடற் சேது சேவிக் கொடுங்குன்றங் கானை புத்தூர்
பரமரே டகமா டானை பரங்கிரி மதுரை நெல்லைத்
திருநகர் பரவிப் போந்தான் றென்றிசை தழைக்க வந்தான். (௩௨)

இருஞ்சிவ லிங்க மாக்கி யிடந்தொறு மருச்சித தேத்தி
வருந்தமிழ்ப் பொதிய மேவி வடதிசைக் கனமுந் தென்பாற்
பெருநதிசை மெலிவுற தீர்த்தான் பிறவியாம் பிணியைத் தீர்க்கு
மருநதிரு மருந்தைக் காண்பா னணிதிரி கூடஞ் சார்ந்தான். (௩௩)

கவனவெங் கான நீங்கிக் கடவுளார் திருக்குற் றாலம்
புவனமார் குமாரசு மைநதிற் புகுதலும் புனிதத தென்றல்
சிவமணம் வீசக் கண்டு தெய்வமா முனிமுன செய்யுந்
தவமினிப் பலித்த தென்று தடம்புயந் தடிப்பச் சென்றான். (௩௪)

நூற்கடல் கடந்த மேலோ னுவலருந் திரிகூ டத்து
மேற்கடு விடமுண் டாரே விண்டுவா யிருந்தா ரென்று
நாற்கட வுளரும் போற்று நன்னகர்த் திசைகள் சூழ்ந்து
பாற்கடல் கிடந்தா லென்னப் பங்கயத் தடங்கள் கண்டான். (௩௫)

அறத்துறை முனிவன் வாவி யருந்துறை யணுகுங் காலை
நிறைப்புனல் கரைமேற் றாவி நெடுந்திரை சுருட்டுந் தோற்றம்
புறத்துறு சமையத் தோரைப் போகெனப் புறங்கை யோச்சி
விறற்சிவ சமையத் தோரை விரைவுட னழைத்தன மாலும். (௩௬)

செறிதடங் கரையின் மீதே செழுந்திரை கொழிக்கு முத்த
நறியபூந் திருவெண் ணீற்று நாயன்மார் வருதல் போலு
மெறிபுனற் றிரையி னூடே யெழுகயன் மறையுந் தோற்ற
மறுபுறச் சமையத் தோர்கள் வயினவயி னொளித்தன் மாலும். (௩௭)

உரவுநீர்த் துறைமண் டேக மொலிபபது முனியைக் கண்டே
யரவொலி பரப்புந் தொண்ட ரார்ப்பொலி நிறைத்தல் போலும்
விரவுநீ ரமுத தாரை விண்மிசைப் பொழிதன் முகக்கட்
புரகான் கருணை மாரி பொழிவது போலு மாதோ. (௩௮)

காஞ்சிசூழ் கழனி தோறுங் கழைகள்கண் வெடித்த முத்தந்
தாஞ்சிலர் வருவார் போவார் தரத்திசை கணிகை மார்போற்
பாஞ்சரா தத்திரிக டம்மைப் பழித்திடு நகையைப் போலும்
வாஞ்சைசேர் சைவர்க் கண்டு மகிழ்தரு முறுவல் போலும். (௩௯)

அரத்தநெட் டிலையாங் காவி யணிந்துநித் திலநீ றாடிச்
சிரத்திணிற் கதிர்க ளாய செஞ்சடை பின்னிச் சென்னி
தரத்துற வளர்ந்த செந்நெல் சைவமா முனியை யீன்று
வரத்தவம் புரிந்தோ ரென்ன வணங்குமா முனிவர் போலும். (௪௦)

வருபுனற் புகலி வேந்தர் வழுதிநோ யொழித்த காலை
யிருமனத் தருகா போலு மிடைபழம் பழுத்த வாழை
விரிகனற் புனலி லேடு வென்றநாள் விருப்பாரு சைவத்
தொருமனத் தவரே போலு மொளிறுசெம் பழுக்காய்ப் பூகம். (௪௧)

ஊறிடு மலர்த்தே னாடி யுவந்துதா தாடுந் தும்பி
யாறிடு தடத்தி லீச னன்பராய் முழுகித் தெய்வ
நீறிடு வாரைப் போலு நீறணி தொண்டர்க் கெல்லாஞ்
சோறிடு வாரைப் போலு மகரந்தஞ் சொரியுங் கைதை. (௪௨)

புண்டரீ கத்தின் வாவிப் புடார்ச்சுன புரத்தி னெல்லை
யொண்டவ முனிவன் செல்ல வுதயவன் மறைந்த தோற்றம்
பண்டுசேர் தக்கன் வேள்விப் பயத்தினாற் சமைய பேதங்
கொண்டவர் குழாத்து நின்றான் குன்றுபுக் கொளித்தல் போலும். ()

ஒழுகுநீர்த் தடங்க டோறு மோங்குசீர்ப் பழனந் தோறுஞ்
செழுமுகை யுடைந்து நீலந் திசைதொறு மலர்ந்த தோற்ற
மெழுபெரும் புணரி யுண்டான் குறுமுனி யிவனோ வென்னப்
பழுதிலா விரும்பூ தெய்திப் புனன்மகள் பார்த்தல் போலும். (௪௪)

தேம்பிய துயிலை நீக்கிச் செங்கழு நீர்க்கண் ணோக்கி
யாம்பல்வாய் மலர்ந்து வண்டால வருகென வழைத்து நீலப்
பூம்பொடிச் சுண்ணந் தூவிப் புனிதமா முனியைக் கண்டு
கூம்பல்சேர் கமலச் செங்கை குவித்தது சிறுபுன் மாலை. (௪௫)

எண்பல வுடுக்கள் வானி லெங்கணு மிமைக்குந் தோற்றந்
தண்புவி மடந்தை வாட்டந் தவிர்த்திட வந்தான் றன்னை
விண்புல மடந்தை காண்பான் விழியிரண் டமையா தென்று
கண்பல கோடி பெற்றுக் களிப்புறக் காண்டல் போலும். (௪௬)

மிக்கசெஞ் சடைகள் சூடி மேனியில் வெண்ணீ றாடித்
தக்கமா முனிக்கு மாதநூத தமிழ் முனி வருதல் போல
மைக்கடல வரைப்புக் கெல்லா மாலையி னிருள்விட டோடச்
செக்கர்வா னுடுக்கள சூழத் திங்களவந தெழுந்த தன்றே. (சஎ)

ஆங்கன மமர்ந்து வைகி யந்திவந தனைக ளாற்றி
யோங்குசீர் நீறு சாததி யுணமையரு செழுத்தை யுன்னிக
கோங்கரும் பனைய கொஙகைக கோதையோர் பாகன றனனைப் ,
பூங்கழல வணஙகி யேததிப் பூசனை புரிய வெணணி (சஅ)

சேல்விழித தடமாம் பாவை திரைக்கையாற கொழித்து வீசும்
பாலவளை வாலு கத்தாற பரிவுட னிலிஙக மாககி
நால்வள மலரும் தூவி நமபனை யருசசித தேததி
வால்வளை முழங்கி யார்ப்ப வைகறை யெழுநது போநதான். (சகூ)

கூனவா ரணஞ்சூழ் வாவி குறுமுனி யகலுங காலைக்
கானவா ரணஙகண முல்லைக கானிடைப பறநது கூவன்
மோனவா ரணத்தான சைவ முனிவரு கினறு னெனறு
தானவா ரணதனைக காததான சமையததாக குணர்ததன மானும்()

தேந்துணர் பூத்த கொன்றை திருப்பள்ளித தாம நல்கக்
காந்தளசெங் கரத்தா லீச னருச்சனை புரியக காதன
மாந்தளிர் கரஙகள் கூப்ப வரிக்குயில் பல்லாண டோதப்
போந்தளி பயில் புராணப் பொழில்பல கடந்து போனான். (ருக)

பம்பிய புளின மெல்லாம் பாவபுண் ணியஙக ளோதுங
கும்பியுங் கொலைசெய் யாது குழகனைப் பூசை செய்யுஞ
சம்புவும் வலஞ்செய் தேகுஞ் சைவநன் னெறியால் வண்டுந்
தும்பியுங கள்ளுண் ணாத சோலையிற காலை சேர்ந்தான். (ருஉ)

திஙகளா றிரண்டுஞ் சூழ்ந்துந் திங்கள்செங் கதிரு டாடாப்
பொஙகரி னிருள்க ளெல்லாம் புரையற விழுங்க வேண்டி
யங்கிய மதிய மாங்கோ ருருவுகொண் டணைந்தா லெனனத்
தங்குசெஞ் சடில மேனித் தவளநீ றிலங்கப் புக்கான். (ருங)

தவமொரு வடிவ மாகச் சதுமுகன் வரத்தால் வந்து
திவள்கலை யமுத மூன்று திரைக்கட லாக மித்த
பவர்சடை முனிவற் காப பனைடைமால வடிவு நீங்கிச்
சிவவடி வுதித்த தென்னச் செங்கதி ருதித்த தன்றே. (ருச)

மாதவ ரிடங்க டோறு மறையவர் கிடைக டோறு
மோதுவார் கழகந் தோறு மும்பர்வாழ் குலங்க டோறும்
வேதமு மங்க மாறு மிருதியு மருத்தி ஞான
போதமு மொருமூ வாறு புராணமும் பரந்த மாதோ. (ருரு)

பெருகிய சுருதி மூலம் பேசிய கிளிக ளோர்பா
லொருபசுங் கிளிகளோர் கிள்ளை யுபதேட முரைப்ப தோர்பா
லருமறைப் பொருள்கள் சைவ வாகம மணங்க ளோர்பாற்
சருகினை யருந்தி நோற்பார் தவமணங் கமழ்வ தோர்பால். (ருசு)

காகமா முனியைக் கண்டு கமலமேற் பிரம னீன்ற
வரமக னிவனே யென்று மழலையங் கிள்ளை யோர்பால்
பிரமன்முற் கற்பத் தானே பின்னுதித் தவனே முன்னிப
புரமுறைந் தவனே யென்னப் பூவைகள் புகலு மோர்பால். (ருஎ)

சந்திர பதத்தை யுன்னிச் சாந்திரா யணஞ்செய் வாரு
மந்திர பதங்க ளாதி மந்திர முருசசெய வாரு
மந்தரத் தமரர் போக மவாவியே யறஞ்செய் வாரு
மிந்திர பதத்தை யெண்ணி யாகங்கள் புரிகின் றாரும். (ருஅ)

கொற்றவ னங்கி வாயு குபேரனீ சான னாதி
மற்றவர் பதங்கள் வேண்டி வரதனை வலஞ்செய் வாருங்
கற்றவிஞ் சையர்கள் சித்தர் கருடர்கிம் புருட ராதி
நற்றவ ருலகம் வேண்டி நாண்முறை வசிக்கின் றாரும். (ருகூ)

பூதலத் தரசை வேட்டுப் புண்ணியம் புரிகின் றாரும்
பாதலத் தரசு வேண்டிப் பன்னகர் நோற்கின் றாருஞ்
சாதலும் பிறப்பும் வேண்டாச் சரியையர் கிரியை யாருங்
காதலும் வெறுப்பும் நீங்கிக் கதிவிழைந் திருக்கின் றாரும். (கூ0)

தாகமா மனித ராயுட் டசமுறை சரிக்குங் காகங்
காகமா முறைகள் பத்துக் கழிந்திடிற் கழுகெட் கூகை
கூகையின் முறைகள் பத்தாங் கொடுவிட நாக மந்த
நாகமே யனந்தங் கண்டு ஞானயோ கிருக்கின் றுறும. (௯௧)

வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் வேண்டுமா றுதவு மெங்கோ
ணுண்டஞ்சென் பகப்பூங் காவி லிறைசெய லனைத்து நோக்கா
விண்டுமெய்த் தவஞ்செய யாமன மேருவி லிரயச சார்பிற்
பூண்டுமுன் கழித்த காலம் போனதை நினைத்து நோவான். (௯௨)

மரமெலாம் பறவை யெல்லா மாவெலா மனித ராதி
சரமெலா மசர மெல்லா மமரராய்த் திரிதல் கண்டான்
புரமெலாம் பரமன் மேவுஞ் சிவபுர மாகக் கண்டான்
கரமூநான குலிகக வாணன் கடிகநா ளடிக்கு மென்றான். (௯௩)

அலைகட லடக்குங் கையா னவ்வன மகன்று வெள்ளி
மலைமிசை மணத்தாற் போந்து வந்தசித் திரப்பூங் கங்கை
நிலைபெறத் திரிகூ டத்து நெறிபெற வமைத்தான் மேருச்
சிலைவலார் முடிமேற் சாத்துந் திருப்பள்ளித் தாமம் போல. (௯௪)

மலைதரு நெறிகள் கண்டான் வயிரமா வுயிர்கள் யாவு
மலைதரு நெறிகள் காணா வாளரா முழையி னூடு
கலையொடு மானைச் சேர்ந்த ககனத்தம் புலியுங் கண்டான்
கலையொடு மானைச் சேர்ந்த ககனத்தம் புலியுங் கண்டான். (௯௫)

அளிவிருப் புடைய சோலை யனைத்துமே யமல மூர்த்தி
யொளியினைச் சேர்ந்தார் போல வோங்கொளி யொருமை யாலே
வெளிவிருக் கங்க ளென்றும் விண்ணவர் தருக்க ளென்றுந்
தெளிவிருக் கங்க ளோர்ந்தான் றெளிவிலன் றிகைத்து நின்றான். (௯௬)

கல்லெலா மிலிங்க மாகக் கனமெலாம் புனல்க டேவ
வல்லுலாஞ் சோலை போதா லருச்சித்துக் கனிக ளாலே
யெல்லையி லமுத மேற்ற வினமணி விளக்க மேந்தச்
செல்லெலா முரச மார்க்குஞ் சிவநெறிப் பெருக்கங் கண்டான். (௯௭)

பிரமனை யெண்ணு தாரும் பிரளய மெண்ணு வாரு
நரைதிரை யறியா தாரு நல்வினை பிறியா தாரும
வரவொடு போக்கி லாரு மறப்பொடு நினைப்பி லாரு
மிரவொடு பகலி லாரு மிரவியெங் கெழுமென பாரும் (௬௮)

பிங்கலை யிடையி லோடிப் பிரிதரு பிராண வாயு
வங்கலர் சுழுனை நாடி யசைவையற நடங்கு வாரும்
பொங்கலார் மூல நாடிப் புதுவழி திறந்து மேலாய்ச்
சங்கரன் கமல பாதந் தனிநடங் காணகின் றாரும். (௬௯)

நனவிடை நாடு தோறு நாடாது நாடி மேலாங்
கனவிடைச் சரிக்கின் றாருங் கவலைதீர் சுழுத்தி மேவி
மனநிலை யடக்கு வாரு மனமறத் துரியம் பற்றித்
தனையுணர்ந் ததீத மேவித் தலைவனைத் தேர்கின் றாரும். (௭௦)

இருமைசே ரொருகோ ணத்தி லெரிதனைக் காலான் மூட்டிப்
பரிதிமண் டலத்தை முட்டிப் படிகடந் தப்பா லேறித்
தருவிமே லனந்த கோடி சுடர்கள்விட் டெறிக்குஞ் சோதி
யருநிலா மண்டபத்தி லமுதமுண் டுறங்கு வாரும். (௭௧)

சித்திக ளெட்டும் பெற்றுச் சித்தராய்த் திரிகின் றாரும்
பத்தியான் முத்தி வேண்டிப் பரமயோ கிருக்கின் றாருஞ்
சத்தினி பாத மென்னுஞ் சதுட்டய வழிச்செல் வாரு
நித்திய காய சித்தி நிரம்பியீற் றிருக்கின் றாரும் (௭௨)

இரும்பையுஞ் செம்பொன் னாக்கி நரைதிரை யிளைஞ ராக்கிக்
குரும்பைமா முலையா ரோடுங் குகைதொறு மிருக்கின் றாரும்
புரந்தர னளகை வேந்தன் போகமு மூவர் தம்பொன்னுந்
துரும்புநே ராக வெண்ணித் துறவின்பந் துய்க்கின் றாரும். (௭௩)

பங்கயத் தவனே யாகப் பலயுகம் பயில்கின் றாருஞ்
சங்கையே கரத்தி லேந்திச் சக்கரந் தரித்துள் ளாரு
மங்கையின் மழுமா னேந்தி யமலமுற் றுறைகின் றாருங்
கங்கையார் சிவபு ரத்தார் கயிலையார் வருகின் றாரும். (௭௪)

அப்படி யெண்ணி லாதா ரமாதரு தானங் கண்டா
னிப்படி பேழுந் தாங்க விவர்க்கரி லொருவர் போதா
மைப்படிகண்ட னென்னை விரித்தின மகிமை யெல்லாங்
கைப்படி நெல்லி போலக் காட்டியாண் டருள வன்றோ (எரு)

அம்மவோ திரிகூடத் தி லத்சய மனந்த கோடி
யெம்மனோ ரம்மக்குள் யானே யெதிர்கொழுப் பெற்றே னென்று
விம்மிதப் புளகம் போர்ப்ப மெய்யெலாம் விதிரப்பப் பொங்கிச்
செம்மன்மா முனிவன் கையுஞ் சென்னியுந் துளக்கா நின்றான். (எசு)

கானவர் புனமுந் தெய்வக்கடவுளர் வனமும் வேட
ரானவர் சிற்றூர் வைப்பு மருவியங் கிரியுஞ் சூழ்ந்து
தானவர் முனிவர் சித்தர் சாரத ரியக்கர் பூதர்
வானவர் கணங்க ளார்க்கும் வரிவளை வீதி சார்ந்தான். (எஎ)

வேறு

நற்றாலத் திருமடந்தை யணிபோலு மணிமாட மறுகு ஞானச், சொற்றாலத் திருமடந்தை யனையவரு வித்துறையுந் துறைசூழ் வெற்பும், பொற்றாலத் தமரர்களும் பொன்னகரும் பூதலத்துப் போந்தா லென்ன, குற்றாலத் திருநகரும் கோயிலுங்கோ புரமும்வெற்றிக் கொடியுங் கண்டான். (எஅ)

கண்டலங்கள் களிகூரப் புண்டரிகக் கண்ணனையே போற்கா னீட்டி, விண்டலமு மண்டலமு மளந்த சயத் தம்பமதின் விசேடங் கண்டான, கொண்டல்கவி தண்டலையு மண்டபமும் கோயிலுங்கோ புரமு நோக்கி, யண்டகூ டமுங்கூடத் தடுக்கியபொற் குலவரையு மாகக் கண்டான். (எகூ)

ஒருவாயி லுண்டுமுன்னா ளுமிழ்ந்தானை யுள்ளடக்கி யுலக மூன்றுந், திருவாயி லொருநான்கா லுண்டுமிழுந் திருக்கோயிற் செல்வங் கண்டான, கருவாயில் கடப்பவர்க்குக் காட்சியிது போதுமெனக் கரங்கள் கூப்பி, யிருவாயும் பொன்சொரிய வேத்தினா னெழுகடல்சென் றிறங்கும் வாயான். (அ0)

ஒருகத்தி லயனாகி யோருகத்தி லரியாகி யுடைய தேவன்
பெருகத்தி லரனாகி-வீற்றிருக்குந் தலமிதுவோ பிரமன் மாய

ளுருகதது மழியாத குறறாலத தலஞ்சேர வயனு மெந்தை
பூருவததின் புண்ணியமோ யானபுரிநத மாதவமோ புகுந்த தம்மா. ()

மருவாய மலர்மாரிச சண்பசா டவிஉளமும் வானந் தாவிக,
குருவாய மணிகொழிக்கும் வடவருவித திரிகூடக குவடடின சீருந்
திருவாணி யுமைபிறந்த சத்திபீ டமுஞசிவததின செயலு மெனனு
லொருவாயிற சொலலுவதோ மறைகளா யிரம்வாயா லுரைக்கற்
பாறறே (அஉ)

மேருவரை யகந்தனிலும் வெள்ளிவரைப புறந்தனிலும விடை
யெங் கோமான், பாருலகிற் பலகோடி தலமகிமை மறைநூலிற பயிலுந
தோறுங், காருலவுந் திரிகூடக குற்றாலந தனிலெனககுக் கருததி
லாசை, தாருலவு மதிச்சடையா ரறிநதன்றோ குறிததவரந் தந்தா
ரிந்நாள் (அ௩)

உலம்பொருதோள் வானவர்கா வுயர்தருதென றிசைபுகுவேற்
கூழி தோறுஞ், சிலம்பலைப நடபுரிவார் குற்றாலங குளிதுறையிற்
சிதட ஞர்க்கு, வலம்புரியின் மணிகிடைத்த வாறுகிடைத் ததுதமி
யன வறிஞ ஞகி, யிலம்புகுநது பலியெடுப்பா னெய்துதிர வியம்
போலு மெய்தி னேனால். (அச)

மாலோக முதலாகச் சுவலோகந் தவலோக மறறும் வேண்டே
ஞலோகந் தவிர்த்த பிரான சிவலோகந் தனக்குமினி யாசை பூணேன
பூலோக கயிலாயங குறறாலங் கிடைததினிப போது மீதே
சாலோக சமீப சாரூப முதலாய்மேற சாருமவீடும். (அரு)

என்றுமனங் களிப்பேற விழிவழியா னந்தவெள்ள மேற மேருக்
குன்றுபோற் புயந்தடிப்ப வுடல்புளகம போர்ப்பவுரை குளற வாங்கு
நின்றுபர வசமாகி முககணு ரமுதில்வைதத நினைவி னுலே [தான்.
மன்றின்மா மறையோரை மதமடக்கும விளையமெலா மறந்து போந்

யிற் கடைகாப் பாள, ரிலைகிடந்த சூலத்தா னடியார்க்குத் தடையென
வந் தெதிர்த்தா மன்றே. (௮௭)

துனனுகடை காப்பவரோ மறையவரோ தடுத்ததெனச் சொல்லா
முன்னர், பனனுமறை வேதியரே பரந்துதடுப் பதுநோக்கிப் பரிவி
லீர்காள், பின்னுமதிச் சடையாகரும் பெருந்திகிரிப் படையாகரும்
பேதம் யாதோ, மனனுருபத் தவதாரத் தநுக்கிரக நிக்கிரக மறந்தீர்
கொல்லோ. (௮௮)

களபமெதிர் காத்தபிரான் கண்ணிடந்து சாத்தியநாட் கயிலை யாளி
யளவறுசீர்ச் சலந்தரனை யடர்த்தபடை கொடுத்தவரு ளறிந்தி லீரோ
தளவநிகர் குறுமுறுவல் விருந்தைமயற் பிணிநீங்கத் தம்பிராட்டி
துளவநறும் பச்சிலைமா மருந்தளித்த மாறறியதுந் தோறறி டாதோ.()

பாரோடும் விண்ணோர்கள் பரந்தோடப் புரந்தரனார் பதிவிட் டோடத்
தேரோடுங் கதிரோட மதியோட விதியோடத் திருமான் மேனி [டா
காரோடத் தொடர்ந்தோடுங் கடலவிடத்தைப் பரமனுண்டு காவா விட்
லாரோடு நீரிருப்பீ ரெங்கோடி யுயிர்பிழைப்பீ ரறிவி லீர்காள். (௯௦)

ஒன்றுபல நூலுணர்ந்து முணர்விலீ ருமக்குவிரித் துணர்த்தி னாலு
மென்றுமுணா ரீருமது நேமியா னறிவனெங்க ளிறைவன் சீர்த்தி
யன்றியுட லுயிர்போல மாலுமீ சனுமிருப்ப தறியீ ரீண்டு
மன்றுளா ரடியரையோ தடுக்கின்றீர் மாயனையே மறுக்கின் றீரால். ()

கோதமன்கண் ணுவன்பிருகு துருவாசன் புரந்தரற்குக் குலிசமீந்த
மாதவனே முதலோர்கள் சாபத்தாற் பகுத்துணரீர் மடவீ ரென்று
போதமிலா மறையவர்கள் கடைதடுப்பப் புறம்போனான் புவன மூன்றி
லாதிபரா மமரரொரு தட்டுநிற்பத் தானொருதட் டமைய நிற்பான்.()

ஆக்குதவ நிட்டைகளில் வலியரே யெனினுமர னடியார் தம்மை
நீக்குமவர் தமைமுழுது நீக்குவனென பதுகருதி நீங்கிப் போந்தான்
காக்கரிய வைம்பொறிநாற் கரணமுந்தன் வசத்தடக்கிக் காக்கு மேலோ
னாக்கமுடை யவனொடுக்கந் தாக்குதகர் பின்வாங்கு மொடுக்கம் போல.()

குத்திரமாம் பரசமையக் குறும்பெறிந்து சிவசமையக் கொளு கொம் பாகிச், சத்திவடி வேல்பிடித்த சரவணசம் பவனிருக்குந் தலம்வி ளுவிச், சித்திரக்க காந்தியா முத்தரவா கினிகமலத் திரைக்கை காட்ட, நத்திரைந்து மணிகொழிக்கும் பொன்னிலஞ்சித் தென்னிலஞ்சி நகர் மேற் செல்வான். (௬௪)

மல்லிகையும் பித்திகையு மாதவியுந் தாதகியு மகிழு மாவுங், குல்லைகளு முல்லைகளும் பாதிரியுந் தாதிரியுங் குரவுங் கோங்கும், வில்லுவமுஞ் சந்தனமும் புடைசெறிந்த தனவனங்கள் விபுலந்தோறும், பல்லவமென் கரங்கூப்பித் தொண்டர்போன் மலர்சொரிசெண் பகப் பூங் காவில். (௬௫)

வச்சிரத்தின் கானிமிர்த்து மரகதத்தின் கழுத்துவைத்து மடன் முத் தீன்று, நிசசவயி டூரியமும் புருடரா கமும்பூத்து நீலங்காய்த்து, முச்சிமிசைக் கோமேதம் விளைந்துபவ ளம்பழுத்து முழுத்த பூகம், பச்சைபணி வேய்ந்ததெனப் பாசடையால் வெளிமேய்ந்த பந்த ருடே. (௬௬)

சுற்றுற்றின் வரிக்கயல்கள் சோலைதொறுங் குதிபாயத் துமிந்து வீழு முற்றுற்றின் கனிமுருக்கச் சடவுள்சரம் பாயசுரர் முடிகள் காட்ட மற்றுற்றி னிரிந்தேகும் பவளவாய்த் தூவியனம் வன்கூ ரிட்ட பற்றுற்றுஞ் சிறைவிடுப்ப வானுற்றி னமரர்குழாம் படர்தல் காட்ட. ()

மீனவா ளைப்பகடு வெடிதாவப் புடைபோழ்ந்து வீழ்மாங் கொம்பு தானவா ரணத்திளைய நம்பிவேல் சூர்மாவைத் தடிதல் காட்டக் கானவா ரணமுமெழிற் கார்மயிலுங் கலந்துவருங் காட்சி யாட்சி மானகே தனமொருபா லேனவா கனமொருபால் வருதல் காட்ட. ()

மந்தமா ருதந்தவழ்ந்து வழிகாட்ட வுபசரித்து வருகென் பார் போற், சந்தவிசை குயில்காட்டக் கிள்ளைகளா றெழுத்தோதிச் சமை யங் காட்டச், செந்தளிர்கள் கைகாட்ட மந்தார மலர் பொதுளித்

தீபங் காட்டக், கந்தவேலை விடமிதுவென றுறுபாய் திரைக்கயல்கண் காட்டச் சென்றான் (௯௯)

விண்படர்சண் பகச்சோலை விண்கிழிப்ப விண்ணிழிவி மானம் போந்து, வண்புவனத் திருநதனைய சிகரசின கரதது றையும வானோர் தேவைத, திணகொடிவா ரணமுயர்தத சேவகனைக் குறமடநதை தெய்வ யானைப், பெணகொடியா மிருநிதிகது நடுவளாசிந தாமணி போற பிரஙகு வானை. (௧௦௦)

தானவர்கு லாநதகனைச சைவநெறி வைதிகததின றுய்போல் வானை, வானவர்கற பகக்காவை வானரச மகுட சிகாமணியை மானக், கானவர்கள் சிறுகுடிச்சம் பந்தனைககந தனைவேதக கனியை முக கண், ஞானமால் வரைததோனறு ஞானவாரியைககருணை ஞான வாழ்வை. (௧௦௧)

பன்னிரண்டு பெருங்கதிரு மொருங்குதிக்கு முதயபருப் பதங்கள் போலத், தன்னிரண்டு பொறகுழைமேற குண்டலங்கள் குலவுதடம் புயததி ருனைப், பொன்னிலங்கு சிமையவட பூதரததி லுறுவிய ன்ன புரிநூ லானைத, தெனனிலஞ்சிப பெருமானைச சகலகலைக் கொருபெருந்தே சிகனைக் கண்டான். (௧௦௨)

வாகைவேல கணைகுலிச மஙகு சங்கே தனமபயம் வலங்கோ தண்ட, மேகமா மணிமழுத்தண் டிலஙகியவங் கியம்வரத மிடப்பா லாக, யோகமா மலர்ககரங்க ளீராறு மவுலிகளோ ராறுந் தேன்றத், தோகையா மணிவரைமேற பரிதிநிகர் பரஞ்சுடரைத் தொழுது வீழ்ந்தான். (௧௦௩)

விண்குளிர்செய் மதிமுகங்க ளோராறுங் கருணைபொழி விழியீ ராறும், பண்குளிர்மா மறைபழுதத சனிவாயு பரிபுரச்செம் பதுமத் தாளுங், கண்குளிரக் கண்டுகனி வாய்குளிர வாழ்த்திமலர்க கரங்கள் கூப்பி, யெண்குளிரத் தமிழ்முனிவ னிதயமெலாங் குளிரமகிழ்ந் தேத்து கின்றான (௧௦௪)

வேலைநெடுங் கடல்குடித்து வீரனெடுங் குன்றிடித்த வேலி ஞனே, காலைவரு செஙகதிரே மாலைமதி யேகயிலைக் கடவுள் வாழ்வே,

வாலசவுந் தரிகவுரி திருவயிறு வாய்த்தமுழு மணியே யென்பாற்,
பாலையுந்தே னையுமதூரப் பாகையும்போன் மறைப்பொருளைப் பாவித்
தானே. (௧௦௫)

விஞ்சையர்க்கு விஞ்சைபொழி மேகமே யவுண்ணிருள் விடியக் கூவுஞ்
செஞ்சேவற் கொடியுயர்த்த சேவகனே தெய்வமடப் பிடியோ டாடுங்
குஞ்சரமே வள்ளிபடர் குன்றமே சூர்பெருங் குலத்தை மாய்ப்ப
வஞ்சமுக மமையாதென் றாறுமுக மாகவெழுந் தருளினானே. (௧௦௬)

வேறு.

செங்கைவே லுழவா போற்றி தேவர்தந் தலைவா போற்றி
கங்கையாள் புதல்வா போற்றி கார்த்திகை சிறுவா போற்றி
பங்கயத் தடஞ்சூழ் செம்பொற் பணிமதி லிலஞ்சி மூதூர்க்
கொங்கலர் கடப்ப மாலைக் குமரதே சிகனே போற்றி. (௧௦௭)

போற்றியென் றிறைஞ்சி ரோமம் பொடிப்பமெய் துடிப்ப மேனி
மாறறிலாப் புளகம் போர்ப்ப வாய்தழூ தழுப்பப் பாடல்
சாற்றிநின் றேதது ஞானத் தமிழ்க்குறு முனியை நோக்கி
யேற்றமாங் கருணை கூர்ந்தா னிலஞ்சிவாழ் குமர மூர்த்தி. (௧௦௮)

துதிநல முவந்தோ மிந்தத் தோத்திரம் பயில்வோர்க் கென்றுங்
கதிநலப் பொருள்பே றின்பங் கருதின வருளிச் செய்வோ
மதிவலோய் நினக்கு வேண்டும் வரமினிக் கேண்மோ வென்னப்
பொதியவிழ் கடப்ப மாலைப் புங்கவ னருளக் கும்பன். (௧௦௯)

வேறு.

உடல்பொரு ளாவிகட் குடைய தேசிகக்
கடவுளே கண்ணுதன் மணஞ்செய் காட்சியு
நடநவில் காட்சியு நயந்து காணநான்
வடவரை மிசைத்தவம் வருந்தி யாற்றினேன். (௧௧௦)

ஆற்றுறு தவத்தினா லகில மீன்றருள்
கோற்றொடி பெருமணக் குழாத்தி லேகினேன்
போற்றுமுன் புவிமகள் பொறாமை யாலெனை
யேற்றுடைப் பரமர்தென் றிசையி லேவினார். (௧௧௧)

ஏவிய காலையி லிறைவர் நன்னகர்
மேவிய மாயனை விமல னுக்குப்
பூவினற் பூசனை புரிந்து மாமணச்
சேவையு நடன்முந் தெரிசிப் பாயென்றார் (கக௨)

அன்னவா றுலயத் தடையுங் காலையிற்
சன்னிதி மறையவர் தடைசெய் தார்தனா
நின்மலன் றிருவரு ளஞ்சி நீங்கினே
னின்னதற் குறுதிநீ யருளென் றேத்தினன். (ககங)

வேறு.

தஞ்சமென மாமுனி தயங்கிமொழி போதி
லஞ்சலிது கேண்மதி யமைந்தவுப தேசம
வஞ்சமறை யோரையவா வஞ்சவுரு வாலே
செஞ்சமுற வேறல்செய மென்றமரர் தேவன். (ககச)

கூறுமவர் கோலமொடு கோயிலிடை யேகி
வீறுதமி ழாலரியை வேதமனு வாலே
யாறுபுனை வேணியரு னுதலபுரி பூசை
யேறுமகு டாகம மெனுவருள்செய் தானால். (ககரு)

அத்தகைய யிற்கடவு ளற்புத முரைப்ப
வித்தக முனித்தலைவன் மெய்ப்புளக முற்று
முத்தனை யருச்சனைசெய் முறைகலை யனைத்து
முத்தம வெனக்கரு ளெனத்தொழு துரைத்தான். (ககசா)

தீதறு முனிக்குயர் சிவாகம மனைத்து
மோதுகலை மற்றுமுப தேசமுணர் வித்தா
னாதிபரன் வைத்தருளு மப்பொருளை முன்னாண்
மாதுமை கையிற்குழவி யாயுணரும வள்ளல். (ககஎ)

ஒத்தவயன் மாலுமுண ராதவுப தேச
மத்தனரு ளுகேசனறு பூதியொடு பெற்றான்
மத்தமலை யாசல மகாமுனிவ னம்மா
மெய்த்தவ மலாலுலகின் மிக்கபொரு ளுண்டோ. (ககஅ)

நாதனரு பூதிகலை ஞானநிறை வேறி
மாதவ புராதன மகாமலைய யோகி
யாதியுப தேசகுரு வானபுருகேசன
போதனைய தாடொழுது பூசனைசெய் வானால். (௧௧௯)

வேறு.

ஐவகையாஞ் சுத்திமுறை கந்ததயி லுகவிய மமுதைந் தாட்டி
நெய்பொழிநது தயிர் தேனபால்கன்னல்கனிச் சாரமிளநீர்தண் சாந்த
மெய்வளாமந் திரகலச முதலாய வபிடேகம் விதியாற் செய்து
கைவருமந் திரபுட்ப மந்தரான நிறைவேறறிக் கலைகள் சாத்தி. (௧௨௦)

பொருததுபுரி நூலபுனைநது மானமதமகுங் குமஙகலவைபுமூகுசாத்தித்
திருத்துமணிப் பூணணிநது தார்சூட்டிச் சுத்தான்னஞ் சிறப்பவூட்டிக்
கருப்புரதீ பஙகொடுதது பண்ணியஙகண் முக்கனிகள் கருணைதீமபால்
வருககவகை யமுதேற்றிச் சோடசத்தாற் பணிமாறி மலர்க டுவி. (௧௨௧)

வேறு.

எந்தாய் போற்றி பரங்கிரியி லிறைவா போற்றி செந்தூர்வாழ்
செந்தா போற்றி பழனிமலைத் தேவே போற்றி தேவேசன்
மைந்தா போற்றி யோகததில் வாழ்வே போற்றி சோலைமலைக்
கந்தா போற்றி திருவிலஞ்சிக கடவுள் போறறியெனத தொழுதான். ()

தொழுது வணங்கித துதிததுருகுஞ் சுருதித் தமிழ்மா முனிககிரங்கி
முழுதுங் கருத்து நினைத்தவெலா முடிக்கும் படிக்குவரங் கொடுததா
னிமுதுங் குடருந் தசைநிணமு மிமைஞ்சா வவுண ருடல்குடைந்து
கழுதும் பருந்தும் விருந்தருந்தக் கைவேறுரந்த குகப்பெருமான். (௧௨௩)

குருவாங் குகவே ளருள்பெறறுக் கும்பமுனியன் றிரவிலொரு
திருவா லுகத்தாற சிவபூசை செயது மறுநாட சிறுகாலை
யொருவா லுகத்தாற பூசனைசெய் துபய வடிவு மொன்றாக்கி
யிருவா லுகநா யகனெனவே யியறறி யாரா தனைபுரிந்தான். (௧௨௪)

வேறு.

வாலுக மிருவ ராரூர் வடிவினை யொருவ ராக்கிப்
பாலுகந் தருச்சித தேத்தும் பானமையே பரிவா யுன்னி

மேலுக மயன்மா லான விமலனை விமல ஞக்க
நாலுகம் படைத்தான் மைந்த னளிவிடை கொண்டு போந்தான் (கஉ௫)

நாதனே திரிகூ டதது நான்முகன் முகுந்த ஞெ
ஞுதலா லவனைப் போறறு மன்பர்கக்கும் வழசகா மென்று
வேதமா மறைக ளெலலாம் விரித்தருள் விரிஞ்ச னீனற
மாதவன் கணத்திற கொணடான மாதவன் கணததர் கோலம் (கஉ௬)

மட்டவிழ் துளப மாலை பவித்திர மாலை பூண்டு
பொட்டணி நுதனமே லூர்த்த புண்டரங் துலஙகச் சாத்திப்
பட்டவர்த் தனர்கள் சூழப் பரமபா கவத ஞகி
யெட்டெழுத் தோதி யுள்ளே யுண்மையெட் டெழுத்தையுன்னி.(கஉ௭)

காதிடைத் துளவ வேடங் கனக தண் டலஙகள் சாத்தி
யாதியச் சுதனகோ விந்த ஞலமர் கடவு ளென்ன
வோதிய பொதுநா மங்க ளுரைத்துநம் பெருமான் சஙக
வீதியிற புகுவான் போந்தான் வேதியர் சங்க வீதி (கஉ௮)

வரநதி படிந்து சநதி வந்தனை புரிந்து தேவை
விரைவொடு பணிது வான்போன் மேவலும் பனவ ரெல்லாங்
குரவனென் றெழுந்து வீழ்ந்து குடுமியஞ் சென்னி தாழ்த்துப்
பரவுவார் பணித லெல்லாம் பகவற்கே யாக வென்பான். (கஉ௯)

பொருவிலோ யாண்டு நின்று போந்தனை யென்பார்க் கெல்லாந்
திருமலை முளரிக கண்ணன் றிருப்பதி யிருந்தோ முனசெய்
பரிவுறு தவத்தா லீண்டுத திருமுறறம பரவ வநதோ
மருவுபூ சனைககு வேண்டும் வகையெலாங் கொணர்மி னென்று. (க௩௦)

அருமறை பயில்வோர் வீதி யகன்றுநம் பெருமான் வெறறித
திருநெடுங் கொடிநின் றூடுஞ் செயத்தம்ப மிறைஞ்சி யேத்தி
மருமலர்க் கரங்கள் கூப்பி வயிணவர் கணங்கள் சூழ
வொருநெடு வசநத வீதி யுயர்வலம் புரிந்து போந்தான். (க௩௧)

வேறு.

பொருவில்சின கரங்கடவுள் வடிவாக வாயிலைந்தும் பொறிக ளாகத்
திருநெடுமால் வலம்புரியே மறுகாகத் திகிரிமணிச் சிகரமாக

மிருதிபதி னெடுமூயர் திருவாயிற படியாக விளம்பு மூலச்
சுருதிகுறும பலவாக விளங்குமதி சயமபரவித தொழுது போந்தான்.

வடபெருஙகோ புரவாயில் புகுந்துவயி ரவிருகனை வணங்கி
மேருக, தடவரைசூழ கதிரவனபோற கோயிலவலம புரிந்துசன்னி
தானம போறறிக, குடைதிசைவா யிலுககிறைவன வீறறிருப்பும் பிற
தெய்வக குழாமும போறறிப, படலைமதி புனைசடிலச சோமீசற்
பணிநதுபரை பீடம் போறறி. (௧௩௩)

வேறு.

பொருவரு மாடக கோயில் புகுதலுந் துவார பால
ரொருவர்நேற் றடைநதா ரென்ன வொருவர்நா மறிமோ மென்ன
விருவரை யமைதது ள் போகி யிணைவிழி களிபபக் கண்டான்
றிருவளர் துளபமார்பிற செம்பொன மா மவுலி யானை. (௧௩௪)

கருணையங கடலாய் மேனி பாசடைக் காடாய்க கண்வாய்
திருமுகங கரஙகா ளுந்தி பங்கயத் திரள்கள் பூப்ப
வொருகரம பணில மேந்தி யொருகரந் திகிரி தாங்கி
யிருசுட ருதய நீலத தடவரை யெனநின் றானை. (௧௩௫)

கண்டுதன் மனமுங் கண்ணுங் களிபெறப் பரவ முன்ன
ரண்டர்தம் பெருமான் பூசைக கந்தணா கொணர்ந்த யாவுங்
கொண்டன னகக்துள் ளாககிக் குழுவெலாம் புறத்துப் போக்கித்
திண்டிறற் கோயிலவாயி றிருககடைக் காப்புச் செய்து (௧௩௬)

பச்சைமால் வரைபோன் மேனி பவளமால் வரைபோ லாக
விச்சைகூர் மனத்தாற கூர்ம வேட்டுவத தியானஞ் செய்து
செச்சைவெண் ணீறு சாத்தித் திருவக்க மாலை சூட்டி
யிச்சையி லொருமை கூர விருமையால் வழுத்தல் செய்வான். (௧௩௭)

முத்தனே முளரிக் கண்ணு மூலமென் றழைத்த வேழப்
பத்தியி னெல்லை காக்கும் பகவனே திகிரி யாளா
கத்தனே யருள்சூற் கொண்ட கந்தரக கறுப்பி னானே
நத்தணி செவிய கோல நாடுதற் கரிய நம்பி. (௧௩௮)

அண்டர்தாம் பிழைக்குங் கட்டா லமர்கறைக் கண்ட மேயா
யண்டர்தாம் பிழைக்குங் கட்டா லமர்கறைக் கண்ட மேயாய்
வண்டுளை வலங்க லார்க்கு மருமத்தே னிதழி யுள்ளாய்
வண்டுளை வலங்க லார்க்கு மருமத்தே னிதழி யுள்ளாய் (கஙகூ)

ஆழியும் வளையு மேறபா யணிமணிப் பணிகள் பூண்பா
யாழியும் வளையு மேறபா யணிமணிப் பணிகள் பூண்பாய்
வாழியந் தரங்க மாக மருவுமா திரையை யாவாய்
வாழியந் தரங்க மாக மருவுமா திரையை யாவாய் (கச0)

முத்தலை வரையாய் போற்றி முண்டகக் கண்ணு போற்றி
யத்தனே போற்றி யென்றென் றங்கையைப் பங்க சாதக்
கொத்தென முடிமேற் சாத்திக் கும்பியங் கயிலைக் குன்றி
லுத்தம னருளிச் செய்த வுண்மையைக் கருத்தி லுன்னி. (கசக)

வேறு.

முறுகுவலம் புரிக்கரத்து மானகுறுகப் பெரியதுழாய் முடியின் மீது
சிறியமதிக் கலைகுறுகத் திலகநுதல் விழிகுறுகச் செழும்பூண் மார்பி
னிறையரவப் பணிகுறுக நிகிலவுலக முநிறைந்து நீண்ட மேனி
குறுகுகுறு கெனப்பரவித் திருவடிக்கீழ்க் குறுமுனிவன் குறுகுங் காலை.

தவம்பெருக வறம்பெருகப் பொருள்பெருகத் தெருள்பெருகச் சைவ மோங்கிச், சுவம்பெருக மனுநீதித் துறைபெருக நிறைபெருகச் சுருதி வாய்மை, நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்கணனிபெருக ஞால மெல்லாநு, சிவம்பெருகக் குறுகியருள் பெருகினன் குற்றாலத் தேவ தேவன். (கசங)

வேறு.

சித்தினுற் கரும்பொன் மேனி செம்பொனும் படிபோற் கும்பன்
பத்தியா லுருகி மாலாம் படிவனை பரம னுனன்
சத்துட னசத்து மாகிச் சதசத்து மான ஞான
நித்திய நிமலா னந்த நிட்களச் சகள மூர்த்தி. (கசச)

ஆர்த்தன சுருதி வேத மதிர்ந்தன தெய்வப் பேரி
தூர்த்தனர் சுரர்பூ மாரி தொழுதன வடியார் சங்கந்

சீர்த்தன வுயிர்க ளெல்லாந் திரிகூடப் பெருமானச் சீர்த்தி
போர்த்தன வுலக மூன்றும் பொலிந்தது திருவெண் ணீறு. (௧௪௫)

கடுக்கையஞ் சடிலக் குன்றைக் கருணையங் கடலைக் காணூஉ
நடித்தன முனிவன் பாத நயனத்துக் கூசச் செறிந்து மேராமம்
பொடித்தன புளக மேனி போர்த்தன புயமு மாரப்
ததித்தன மனமும் வாக்குந் தளிர்த்தன தமிழ்ச்சொல் வேதம். (௧௪௬)

ஆனந்த வாரி மூழ்கி யநுபூதி விபூதி சாத்தி
ஞானந்தன் வடிவ மான நஞ்சனகாச சிவபி ரானைப்
பூநந்த வனத்திற் பூவாய பூவிறை புனித நீரான்
மோனஞ்செய தியான பூசை முனிவரன் முடித்துப் பின்னும். (௧௪௭)

அங்கையா லருச்சித் தேத்த வந்தணர் கொணர்ந்த வெல்லாஞ்
செங்கையாற் கரக நன்னீர் தெளித்துநற் சுத்தி செய்து
கங்கைநீர் செழுந்தேன் கன்னல் கனிகளுஞ் சுரபி யைந்துஞ்
சங்கைசே ரமுத மைந்துந் தமிழ்தரு மலயச் சாந்தும் (௧௪௮)

தக்கவா ரமுத மாதி சதவுருத் திரத்தி னாலே
முக்கணா ரமுதை யாட்டி முருகுமான் மதங்கற் பூர
மிக்கபூங் கலவைச் சேறு மெழுகிவெம் புலித்தோ லாடை
திக்குடை கழித்துப் பொன்னந் திருவுடை மருங்கிற் சாத்தி. (௧௪௯)

பன்னகமா பணிகள் பூண்டு தலைமாலை பரித்த தாற்குக்
கனகமா பணிகள் பூட்டிக் கடிமலர் மாலை சாத்தி
யனகமா மனுவா லட்ட பாலமு தருத்தி யைந்தா
மினமுறு வாசஞ் சேர்த்திப் பாகிலைச் சுருள்க ளேற்றி. (௧௫0)

செழுமணிச் சங்கக் கோயிற் றிருக்கடைக் காப்பு நீக்கி
யெழுமணிச் சங்க நாத மியம்பல முழங்கி யார்ப்பத்
தொழுமணிச் சங்க மெல்லாந் துதிசெய்து பரவி யேத்தக்
கொழுமணிப் பஞ்ச வாசங் குயிற்றிய தூப மேற்றி. (௧௫௧)

உய்வகை யியற்றுந் தீபஞ் சோடச வுபசா ரங்கள்
செய்வகை முறையி னாற்றி யைவகைச் சைவச் செந்தீ

நெய்வகை புரிந்து பூசை நிரப்பியா யிரதெண் வில்வ
மெய்வகை விளங்கும் வேத விதிதரு மனுவாற சாததி. (கருஉ)

நீலமென் மலர்க ளேவி நிமலனை யுவப்பச் செய்து
சாலுமஞ் சனத்தாற் பூவாற் சாத்துமந் திரதி னாலும்
பாலமார் விழியார் கையிற் பூசனைப் பயனை நல்கி
மேலைகங குழையக் கண்கள் களிப்பமெய் விதிர்ப்ப நின்றான். (கருங)

கானமார் பலவின் முக்கட் கனிதனைத் தேனைப் பாலைத்
தேனொடு நெய்பா லாட்டித் தெரிசிக்கத் தித்தி யாதோ
மோனவா னந்த யோகி முழுங்கியேத கெடுப்ப தானன்
வானமு மடங்காக கீர்த்தி மனங்கொண்டு வாய்கொள் ளாமல். (கருச)

பராபரா பரம யோகி பராங்கதா பரசு பாணி
நிராமயா நிமலா நித்தா நின்மலா திரிகூ டத்திற
சராசர மனைத்து மீன்ற தற்பரா சிற்ப ராவென்
றோராயிர கோடி நாம மெடுதெடுத் தோதி யோதி. (கருரு)

பிரமனே போற்றி போற்றி பிரமனு மாலுங் காணாப்
பரமனே போற்றி போற்றி பண்ணவா போற்றி வானோர்
சரமச ரங்க ளான சண்பகா டவியாய் போற்றி
மரகதக் கொடிசேர் முக்கண் மாணிக்க மலையே போற்றி. (கருசா)

அன்பருக் கன்பா போற்றி யயனுமா யரியு மாகித்
தென்புலக் குறைவு நீங்கச சிவமென நிறைந்தாய் போற்றி
முன்பிலா நடுவு மில்லா முடிவிலாப் பிரம மான
வின்பமே திருக்குற் றாலத திறைவனே போற்றி போற்றி. (கருஎ)

போற்றியென் றேத்தி யேத்திப் புகழ்ந்துசாட் டாங்க மாகத்
தோற்றிநின் றிறைஞ்சு வானைச் சூழ்ந்தமா மறையோ ரெல்லா
நீறொளி பழுத்த மெய்யு நீண்டபொற் சடையுங் காணா
மாற்றல னிவனோ சோர்வு வந்ததென் றுள்ளே போந்தார் (கருஅ)

பருவனை யாழி யேந்திப் பங்கயக் காடு பூத்த
கருணையங் கடலைக் காணார் கனவரைத் திரிகூ டத்தி

லருளொரு வடிவாய்ப் பூமி யநதர சுவர்க்க மூன்று
மருவுபே ரொளியா மூக்கண் டாணிக்க மலையைக் கண்டார். (கருகூ)

வரதனே கரிய மாலாய் வளர்நதுசெம் பவள மேனிப்
பரமனே யாதல் கணடு பணிந்திலர் மறையோ ரெலாங்
குரவனு முனிமேற் கோபங் கொண்டன ரிருளே யன்றிக
கரவுசோ மனதகி னாககுந கதிரொளி பகையே யன்றோ. (ககூ0)

மந்திர வடிவாய் நின்ற மாயனை யிலிஙகமாக
விந்திர சாலஞ் செய்தான் யார்கொலோ வெனபார் யாது
தந்திரம் விளைத்தா னென்பார் சைவனபோனே றறு வந்த
வநதண னிவனே யென்பா ரறிந்தில மச்சோ வென்பார். (ககூக)

நாமமோ குறியோ விட்டு ஞானமோ நெறியோ பேசித்
தாமமோ துளவஞ் சூடிச சாாந்ததும் புணர்பபோ வென்பார்
காமமோ குறுகிற றெலலாங் கள்ளமோ வென்பார் பூசை
யோமமோ செபமோ பாரி ருண்மையி லானுக் கெனபார். (ககூஉ)

திருமலை முளரிக் கண்ணன திருப்பதி யிருந்தோ மென்ன
விருமலை வாகக் கூறி யெதநிது னெம்மை யென்பார்
கருமலை யனைய மாலைக் கண்ணுத லாக்கி நம்பாற்
பொருமலை விளைத்து நின்றான் பொமமலைப் பாரீ ரென்பார். (ககூ௩)

நறுமணித் துளவ மாலை நம்பியை நம்ப னுக்குந
கறுவுகொண் மனததி னூனைக் கடைகடந் தேகா முன்ன
மிறுதுறப பிணிப்போ மென்ன வெழுந்தண்டு பாசத் தோடு
குறுகினர் வலியான் முன்னர்க் கொக்கினத் திரள்போற் கூடி. (ககூ௪)

ஒல்லென வருகை நோக்கி யொருகையிற் றருப்பை வாங்கிச்
செல்வனைத் திருகருற் றலத தேவர்நா யகனை யுன்னி
யல்லெனத் திரண்ட காக மாயிரங் கோடிக் காங்கோர்
கல்லென விடுத்தான் முந்நீர்க் கடலினை யடக்குங் கையால். (ககூரு)

விடுத்ததோர் தருப்பை போந்து வேதிய ரடர்ந்து தாக்கும்
படைக்கெதி படையாய் மோதிப் படர்தலும் பனவ ரோங்குந்

தொடிக்கரம வியாதன் மேனுட் டுளுறுங் சமயமோ னிறப
வடைக்கலம் பரம யோகி யருளுனக கபப மெனறா (௧௬௬)

போககிலா தலமந தோடிப புகலெனறாக சநச லெனறு
தாக்குமந திரததால ிட்ட தருபவைபசை சாந்தி யெனனு
நோககுமந திரததா லாறறி நூல்புனை மறையோர் தமமைக
காககுமந திரத்தாற காத்தான கடவுண்டு மலையங காததான (௧௬௭)

அனகாதாள் பரவி யேததி யாடகச சஙகக் கோயின
மனவுரைத் தமைத்தா னென மதிறபுறம் வலைஞெசய் காலைப்
பனவர்தங் குழாஙக ளெல்லாம் பணிமதி தொடர்[illegible]கோரத
தினமெனப் பினசெல் வாரை யியறறமிழ முனிவ னேநகி (௧௬௮)

நாதனூர் சங்க வீதி நயந்துறை தெனமேல் பாவின்
மாதவன் றனைப்பூ சித்து வாழுமின் வாழுங் காலைச்
சீதரன் சமைய மெனறுஞ் சிவபிரான சமைய மென்றும்
பேதகீர் புரிவீ ரல்லீர் பெருமறை வல்லீ ரெனறான். (௧௬௯)

அன்னதே புரிது மென்ன வந்தணர் பரவிச் செல்ல
நன்னகர்ப பரமர் மாலாய் நண்ணிய நாளி லீச
னென்னவு மீசா னததி லிருந்தருள் கூத்த னெம்மான்
செநநெறிப பூசை செய்யுஞ் சிவமறை யவரைக் கூவி (௧௭0)

ஆங்கவர் மகார் சிறார்க ளனைவாககும் வேத நூல்கள்
பாஙகுற வுணர்த்தி நாலே ழாகமம் பயிறறிப் பண்பா
லோங்குறு சிவபு ராண முணர்விததுச் சைவ பூசை
தாஙகுசீ ரொழுக்கஞ் சொல்வான் றத்துவ முதலா மன்றே. (௧௭௧)

மூன்றாவது திருமால் சிவபிரானுனை சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௮௫.



## நான்காவது சிவபூசை விதியுரைத்த சருக்கம்.

குதமேலங் குலியிரண்டி லடப்பம் பூப்போற் குலவுமூ லாதாரங் குறிசேர் நாற்கோ, ணிதமுறுசு வாதிட்ட நாபித் தானத் திளம்பிறை போன் மணிபூர மியையு முககோண், விதமுறும நாகதமே மார்பு கண்

டம் விசுத்தியாக் கினைபுருவ நடுவில வட்ட, மதகயமா முகன் முதலோ
ரறுவர் தேவர் மண்முதலாம பூதமிவை யாறு தாரம் (க)

சோதிசிவஞ் சத்திசதாக கியமே யீசஞ் சுத்தவித்தை யெனச்
சிவதத் துவமைந் தாரு. மாதிகலை காலம்வித்தை நியதிமாயை யராகமே
புருடனென வித்தை யேழாம, பூதமைந்து பொறியைந்து புலன்க
ளைந்து புகலகருமேந் திரியமைந்து கரணநானகும, பேதவுயிர்த் தத்து
வமா மிவையா றாறும பிறங்கியவுட கருவியெனப பேசு நூலே (உ)

வானிடமாய் நின்றுசெவி யறியுஞ் சத்தம் வளியிடமா யுடல் பரி
சந் தெரிக்கும் வனனி, தானிடமாய் விழியுருவந் தன்னைக்காணுந் தண்
புனலா லருந்துசுவை தெரிக்குந் தாலு, நானிலத்தால் வருமணத்தை
யறியு நாசி நணணுவாக் காதிகள்வா ஞதி யாலே, மேனிரலே வசன
மொடு கமனந் தானம் விசர்க்கமா னந்தமிவை விளைக்குந் தானே. (ந)

நினைப்பொடுசஞ் சலமருத்தாற் புரியு நெஞ்ச நிகழ்கரும நிச்சயிக்
குங் கனலாற் புத்தி, புனற்செயலாற் சித்தநினைத் தழியும் பாராற்
புடைத்தெழுமாங் காரமிவை போகய காண்டம், வினைச்செயலின் மிகு
திகலை வித்தை ஞான மிகுதிநிசஞ் செயுநியதி யராக மிச்சை, கனத்த
பலஞ் செயுநகால மறைகரு மாயை கருவிசுற்றும் புருடனிவை போக
காண்டம். (ச)

சுத்தவித்தை சததமுதல் விடய மூட்டுந் தொழின் மூட்டு மீசுர
னேர் செயுஞ்ச தாக்யஞ், சத்திய து ருசிப்பிக்குஞ் சிவமே யான்மாத் தற்
செயல்செய் விகருமிவை பிரேர காண்ட, மொத்தசிவ முதலைந்துஞ்
சுத்த மாயை யுயர்கலா திகளேழுஞ் சுத்தா சுத்த, மொய்த்தபார் முத
லறுநான் கசுத்த மாயை முந்துபதி பசுபாச முறையிற் காண்மினை. (ரு)

தோலெலும்பு நரம்புமயிர் தசைபார்க்கூறு சோரிவிந்து மேதை
மச்சை நீர்நீர்க் கூறு, மாலுறுநித திரைபயமா காரஞ் சோம்பு
மைதுனம்வன் னியின்கூறு நடத்த லோடல், சாலுநிலை யிருத்தல்

கிடை காறறின கூறு சலமதமாற் சரியமொடு மோக லோப, மேலு யர்வான கூறிவைக ளிருபா னைநதும வியனபூத காரியமென் றியமபு நூலே. (௬)

பததியெபூத துவளொளிநூ குமைதி யானம் பைசந்தி யுரை யாம ஞுரைததல பாினை, மததிமையாம் வைகரிமற றெவரும கேட்ட வசனிதத லிவைநானகும் வாகசா மததம, புகதிமே டணையுலகே டணைமூன ருகப புகலரிய சாததுவித மிராச தததோ, மொததுதா மதபூமெனக குணமூன் ருகு மூத்தமமத திமமதம மூறையி னுமே. ()

உதானனன நிறைக்குமெஙகும் வியானனவியா பிக்கு முறுசமஞ்ச மானன்மலம் விடும பானன, சதாவுயிர்கரும் பிராணனிவை தெய்வ வாயுத் தகுதேவ தத்தனவியர்ப போடல்கோபம், விதானகிரி கரன்றும்மன மயிர்புளகங் கூரமன மிகநீட்டன் மடகருதல் கொட் டாவி நாக, னதாவுயிர்போய்த் தனஞ்செயன்மேல வெடிபபித தேகு மைந்து கன்ம வாயுவென வாயுப் பததாம. (அ)

வலப்பாலின் சுழுனையைபுய்த் திடப்பான் மாறி மண்டலமூன றிடையிடைமா றுடி மேலேத, தலத்தேறிச் சிரத்துநின்று வலப்பா னுசித் தலத்துறும்பிங் கலையிடையு மிடப்பா லறசற, தலைப்பான்மை மூலநடு நாடி யாகிச் சடாதார மூடுருவி மேலா தார, நிலத்தேறிப் பிரம ரந்த ரததை முட்டி நெடுநாசி யிரண்டிலுறுஞ் சுழுனை நாடி. (௯)

மூலமுதற் கண்ணளவாம புருடன காந்தாரி முதுசெவியி னளவாகு மததியலம் புருடன், றலுவிற்சிங் நுவைநாடி நாபியிடைத் தோன்றிச் சங்கினியே குய்யமுறுங் குகுகுதத்தி னளவா, மேலுமிவை தசநாடி தச வாயுக் குணமூன றேடணைகண் மூன்றுபூ தியமிருபத தைந்து, போலு நால் வாககுவச ஞுதியைந்தோ டறுபான புறககருவி யாகவுந்தத் துவந் தொண்ணூற் றுமே. (௧0)

நரம்புதிரந் தோலெலும்பு விந்துமூல நாறுதசை யெனவோதுந் தாது வேழாம், வரம்பறுமோ கங்காம மதங்கு ரோத மாற்சரிய முலோ பமென்றுட் பகைக ளாறு, மருந்து மன்னம் பிராணன் மனம் விஞ்ஞா

னத்தோ டானந்த மயமெனவுங் கோச மைந்தாம், புரந்தவன்சே
னையைக்கடைத்தோ றிருததி யுள்ளே புகுதல்போற புகும்புருட னவத்
தை யைந்தே. (கக)

மாத்திரைகள் பத்துடனிந் திரியம் பத்தும் வாயுவீ ரைந்துமந்தக்
கரண நான்கு, மேத்துபுரு டனுறுதலின முப்பத தைந்தா வியைவது
சாககிரங்களததிந் திரியம பததுங, தீாததது சொப் பனமனததிற புரு
டன வாயு சித்தமுறல் சுழுத்தி சித்த மொழித்திரண்டோ, டார்தத
வுந்தி நிலைதுரிய மவைவிட டேகி யனுமூல மலததுறல தீத மாமே. ()

அவ்வகைய தத்துவங்க ளனைத்து மாயை யருஙகனம மிரண்டாகு
நன்மை தீமை, யெவ்வமுறச் செய்பிலுறு களிம்பாய் முன்னே யிய
லறிவை மறைததலா ணவமா மந்தத, தவவனுறு மும்மலததி னழுந்து
மானமாச சகலஙசே வலஞசுததவ வததை யெய்தும், வவ்வனுறுங் கருவி
யெலாங் கடந்து மூல மலத்தழுந்தித் தனியுறல்கே வலமா மனறே.(கஙு)

கருவிகர ணங்கள்சில பிரிந்துஞ் சேர்ந்துங் கவனமுறறு நரக
சொற்க புவன மூன்று, மிருவினைப்போ கம்பொசிததல் சகலா வததை
யினையிரண்டும் பிறவிகடகு விததே யாகும், பொருளரிய திருவருளா
லவததை யைந்தும் பொருநதியதீ தததுறுதல் சுதத மாகும், பெருகிடு
மிவ் வழியரனைப் பூசிப் பார்கடகே பிறங்கியிடும் பூசைவிதி பேசக கேண்
மின். (கச)

வேறு.

பத்தியும் பயமு மன்புநன் னெறியும் பண்புமா சாரமு மொருமைப்
புத்தியுஞ் செனன வாசனை யுடையார் பூசனை புரிவதற் குரியார்
சித்திரப் பொதுவி லாடுமெம் பெருமான சேவடி யருச்சனைக் கமைந்த
சுத்தியைந் துளவா மவையினிற பூத மானத சுத்திதத் துவத்தால். ()

கடிகையோ ரைந்து விடிவதற கெனவாங் காலைவை கறையினி
லெழுந்து, சடுதியி னியன்ற சுத்தியா னீறு தரிததுருத திரன்சதா

சிவனை, வடிவுற நினைந்து தொழுதெழீஇப் புறம்போய் வடகுண பால
லாத் திசையி, னெடியபொற் சிகரந தெரிகலா விட்டது நீக்கரை பசு
நிலை மடங்கா (கசு)

விளைநில மறுகம பூமிநன் னீழல விடுத்ததுமேற் சுத்தமே மயா
ணங, களர்நில மகனுறு மதிபசு மறையோர கதிர்திசை பிறவுநோக
காது, ஈளர்தரு நாசி நுதியினை நோக்கிக் கீழொரு திரணமிட டொலி
யல், படர்சிரஞ் சேர்த்தித் தெனறிசை யிரவும் வடதிசை பகலும்பார்த்
திருந்து. (கஎ)

கருத்துரை யகற்றி மலங்கழித தேமணா செஙகலகொட் டாதியாற
சுத்தி, வருத்திநின றிடக்கை குறிநிறீஇத நீர்தத மலர்தசீர்க கொரு
முழம் வதிந்து, பொருந்ததுசா ரல்லா விருதுவி லெடுத்த பூவினமண்
குதத்தினி லைங்கா, லுரைத்திடுங் கோசத் தொருதர மிடக்கைக் கொரு
பதின் காலென வுரைத்து. (கஅ)

இரண்டுகைக் கெழுகா லிரணடுதாண மூலத் தொருதர மெணக
கொடு கழுவி, யொருஙகுறச சவுச முடித்தபின பேன முறுப்புனல்
கொண்டுநன் னிலத்து, எருந திசை வடக்குக குணக்கிவை நோக்கி யாசம
னதொழில புரிந்து, நரந்தமா விருப்பை கடுமகிழ் கடுககை நாவல்பூ
விறலிநா யுருவி (ககூ)

சங்குமா தவியே தாதகி செயலை சண்பகம் வன்னியீங் தழிஞ்சில்
பொங்கெழிற கடம்பு முதலவும் பானமுட் பொருந்திய தருவுமா
மவையிற், பங்கமா நற்பான மரத்தொடு தில்லை பராய்முதற கழிப்ப
ராண் மரத்தி, லங்குல மெட்டுத துறவியேற கிருகிக காறிரண் டொரு
விரற பருமை. (உ0)

அறுதொழி லாள ரல்லவர்க கொவ்வோ ரஙகுல முறையினிற்
குறைததுத், துறவியர் வடக்குங் கிருகியர் கிழக்குஞ் சொல்லிய திசை
கள்பார்த திருந்து, முறுவன்மா சொழிப்பா நவமிசங் கிராந்தி முறறிதி
மூவிரண் டுவாக்கள், பெறுவிதி பாதங் கழிப்பர்மா ணாக்கர் பிறர்தராக்
கொள்வர்பற் கொம்பு. (உக)

தந்தகாட் டாதி தருபவரில்லாத் தலத்திலும் விலக்குறு தினத்து
மந்தமார் புனிதத் தழையினால் விளக்க வன்றெனி லுதகம்வாய் வார்த்து

வந்துபன் னிருகா லுமிழ்ந்திட வதனை மணிநகை சுத்தியா மதற்பின்
மூந்தியா சமன முடித்துநல விதியான முறைபெறத் துறையினீ ராடி ()

சந்திவந் தனைகள் புரிந்துநீ றணிந்து தக்கசீ ரக்கமா மணியைக
கந்தரத் தறங்கள் கைக்கணி யருகர் கமோரடிகை தத்துவ மார்பிற
பைந்தொடை யரிபூா வடவெழுத் தாசப் படிகந்துப் பாரமூ வகை
பொன், வந்தகோத தணிக சிரதநிணி மேலக மணிகுழை யங்குலி சுமை
யம். (உரு)

சந்திர மவுலி விழிமணி யதிகந தரிப்பதிற் சகத திரம் விசேடஞ்
சிந்தியா வைநது பதஞ்சொலிப் புனைநது திருக்கடை துறந்துபொற்
கோயில், சுந்தரத தூபஞ் சுடாவிளக்கியறறிச் சுத்திசெய் தெமபிரான்
பூசை, மூந்நூறு தருப்பை சமிதைமஞ் சனம்பூ முதற்றிர வியமெலாங்
கொண்டு. (உச)

வேறு.

நித்தியநை மித்தியஙகா மியமாக மூன றினுநித் தியமாம் பூசை
யதிதியே தினம்வாரம் பிரதோட மயனம்விழுச் சங்கி ராந்தி
யொத்திருமண் டலமெனவோ ரொன்பதுநை மித்தியநான் குணர்த்து
வைத்தசா னித்தியம்வற் சரபூசை மாதவிழா மாத பூசை. [ங்காலை

தவனபூ சனைகிருத்தீ காதீபந் தீபவளி சங்கபூசை
நவநைவே தனமெனவுங் காமியமோ ரைவகையாய் நடப்ப தாகு
மிவைகளின்ம காசந்தி காலையுச்சி மாலையுடன் யாம நான்கா
முவகால மருணசந்தி யுழக்காலஞ் சிறுகாலை நிசியோர் நான்கே. (உரு)

இன்னவையிற் பூதசுத்தி யிலிங்கசுத்தி மானதமுன் னியற்றும் யாவு
மனனதினீ ரத்திரததாற் புரோக்கித்துக் கயமுகனை யருச்சித் தேத்தி
முன் னுறவாசாரியன்சொன மந்திரத்தாற்சங்கற்ப முறைமைபோ றறிக்
கொனனுறுசந் தனதமேதாயங் கங்கைமுத னதியேழாற் குடம் பூரித்து.

மந்திரததாற் புண்ணியயா கம்புரிந்து நவகலச மருங்கு சேர்ததுக்
கந்தநீர்க் கும்பமுதன முறைசெபித்து நறியபஞ்ச கவியங் கூட்டி
யந்தமுற நெய்தயிர்பால் சர்க்கரைதே னைவகையா லமுதஞ் சேர்ததி
யுந்துசிவ மந்திரத்தா லுமைத்துவிதி முறைசாந்தி யோமஞ் செய்து. ()

காதலிபா கஜைப்பரவிச் சந்தனு தித்தயிலங் சவிய மாட்டித்
தீதறுமை வகையமுத நறுநெய்பா லினியதயிர் செழுந்தேன கன்னல்
மீதுபல கனிச்சார மிளநீர்சந் தனதசோயம விந்நீரக் கும்ப
மாதியபி டேகமிவை யாறிரண்டு மனுவினுவந் தாட்டுங் காலை. (உ௯)

கந்ததயி லத்தின்மிசை நெல்லின்மாக் கவியமிசை சணிச்சம் பீர
மைந்தமுத மீதுநெல்லி துப்பின்மேல் வெந்நீரக் காரம் பான்மேற
பைந்தயிர்பின் சிறுபயறு தேன்மீதிற் புட்பசலம் பரிவாங் கன்னற
பிந்துகழு நீர்க்கொட்டம் பஞசவில்லம் பலோதகத தின பின்ன ராகும்.

இன்னவகை மாவிலங்கு நொச்சிவிளா வில்வமறு கிவையா லாட்டி
யன்னதற்பின் பாயசமா மமுதேற்றி யருமபுகைகர்ப் பூர தீப
நனனெறிநீ ராஞ்சனதீ பங்கொடுதது நனிபெருகு நாளி கேரப்
பின்னர் கந்த தோயமதிற் பினனரன்ன வபிடேகம் பெரிதி னட்டி. ()

தூபமொடு கருப்புரதீ பஙகொடுகது வில்லுவநீர் சொரிந்து பின்னர்
மாபணில நீராட்டி நவகும்ப வபிடேக மனுவாற் செய்து
மீபொலிமந் திரபுட்பஞ் சாததிமநதி ரானமுயர் வியபபா லூட்டித்
தாபனப்பூந் திருமேனி சூழ்ந்துதிரு வொத்தாடை சாத்தி மாதோ.()

பொன்னுடை யுத்தரிக மிசைச் சாத்தி யுபவீதம் புனைந்து சாந்தம்
பன்னீர்குங் குமக்குழம்பு புழுகுமான் மதமெழுகிப் படீரந் தூவிக்
கொன்னுரு மணிமகுடங கேயூரங கணடிகைகுண் டலம்பொற் கோவை
முன்னுர வடம்பலவு மணிந்துமரு மலர்மாலை முறையிற் சாத்தி (௩௩)

பொருட்கலத்திற் சுததான மமைத்துநிவே தனமுறையிற் புரிந்துதீபங்
கருப்புர ததா வியற்றியபின் பண்ணியங்கண் முக்கனிகள் கருனைதீம்பால்
வருக்கவகை யமுதேற்றிச் சுருளெடுத்து மணித்தூப தீப மேற்றி
யருட்கவிகை கண்ணடிசா மரைமுதல பல்லியஙக ளார்ப்ப வேந்தி.(௩௪)

முற்றுமறை தமிழ்ச்சுருதி பாடலொடு திருச்சின்ன முழங்கத் தேவி
சிறபரைக்கு மிவ்வாறே யருச்சனைசெய் தாலயஞ்சூழ் தேவுக்கெல்லாம்

பறபலவாற பூசனைக ளியறறிவினி யோகமிடல படிமைப் பூசை
மறறனவி சேடபூ சனையுமா கமததுரைதத வகையாற் செயமின. (௩௫)

அசமகிழ்ந்து சுததசல மபிடேகந் தொறுமிடையி லாடட வேண்டு
நிகழமதுக குளவளவை ததிபாலிவ விருமடங்கு நெய்நாற் பாகந்
திகழுறச்சேர்த் துவதமிாத மைந்தாகு மூயாதிருமஞ் சனமெந் நாளும்
பகலெடுதத திரவினுமா மிரவெடா ரெடுப்பர்கனல பசும்பொன்காட்டி.

வேறு

முருகல ரலரி வில்வ மூவிதழ் வில்வம் பற்ப
முருவமுறற றிதழ்ச்செங் கஞ்ச மூயர்ந்தநா யுரீஇ தருப்பை
சுருள்விரி தளவஞ் சாதி தும்பைவெண் காக்க ணஞ்சீர்
பெருகும்வெள் ளெருக்கம வாசப் பெருந்தும்பை கழுநீர் நீலம். (௩௭)

உரைததமு வைந்தி லொவ்வொன றாயிர முயர்ச்சி நீல
மருததமா மலர்போ லென்றுங கழுவியுஞ் சாத்த லாகுந்
தரித்தபத் திரஙகட் கெல்லாஞ் சதமடங் குயர்ச்சி சானு
மருக்கொழுந ததன்மேல வில்வ மாயிர மடங்கு மாதோ. (௩௮)

காமியம் பதங்க ணைககால் யோகச மசிதஞ் சானு
வாமங்கா ரணநதீ பததங் குறஙகுகூக் குமம்வாழ குய்ய
மாமியற சிந்தி யந்தா னங்குலம் விமல நாற்கை
தூமுது கஞ்சு மாமீன சுபபிர பேத முந்தி. (௩௯)

விசையமே வயின்சு வாயம் புவந்தனம் வீரங கண்ட
நிசுவாசந் துண்ட மார்பு சந்திர ஞான நெற்றி
யிசையறு சித்தம் விம்பம் வதனங்க ளாகுகி னைய
மிசைபுரோற கிதமே நாவு ரவுரவ மிலங்கு கன்னம். (௪௰)

கிரலளி தங்க போலஞ் சென்னியே மகுட மேலைப்
பரமேசந் தாள மாலை பரிவட்டம் வாது ளஞ்சீர்க்
கிரணமா பரணங காலோத் தமங்கிளர் சாந்த மௌபர்
தருசரு வோதத மநதான் பூணூல்சந் தானங்கன னபபூண் (௪௧)

எங்குமே நிறைந்தோர்க் கிவ்வா றுக மிருபத் தெட்டு
மங்கமே யவைகட் கெல்லா மகுடமே யுத்த மாங்கஞ்
சங்கமே மறுகு சூழுகுற் றாலமே நலங்கட் கெல்லாந்
துங்கமே மகுட பூசை தொன்றுதொட் டமைந்த தன்றே. (௪௨)

பரவுமா வாக னந்தா பனமுயர் சன்னி தான
நிரோத னமவகுண் டஞ்சீர் முத்திரை நிசமுபாத் தியம்
பொருவிலா சமன மேயர்க் கியமவிரி புட்பந் தூபம்
வரதனைப் பூசை செய்யுந் தேசிகர் வகையீ ரைந்தே. (௪௩)

வேறு

தயிலமா ரோக்கியமாத் திருமகளைக் கம்விசையந் தருஞ்சம்பீர, மியன்மகப்பே றுச்சியமைந் தமிர்தமிரா சதநெல்லி யினிதாஞ்செல்வம், பயமதுசத் துருநாசந் தத்திக்குமகப் பெருக்குமவெந்நீர் பல்கும் வாழ்நா, ளுயர்குளோ தகம்பாபறறின் பொடிக்கிராச் சியத்தோட மொழியு மாதோ. (௪௪)

தேனிரா சதங்கருப்பம் பாலினுக்குத் திருமடந்தை சேருஞ் சீதப
பானீயஞ் செங்கழுநீர்க் கொட்டமிவை பிறவிதெறும் பலோதக் கங்க
வீனபா தகந்தீர்க்கு மியல்பெறுசந் தனதத்தோய மிளநீர் தமமா
லானராச் சியத்திடுங்கு மரசருக்கும் பெரிதுசுக மாகு மன்றே (௪௫)

அன்னமபி டேகமன்ன சமித்திரு விளத்தோய மதனு லென்று
நன்னாபெறும புத்திமுத்தி யுண்டாகுந் சருவசித்தி நத்தின் றேயஞ்
சன்மலிசீா நவகும்ப மிராசசுகம் புவனிசுகஞ் சாந்தி யோம
மென்மலாபக திரபுட்ப மந்தரானங் கொள்ளைபதி விருட்டி நீங்கும். ()

வத்திரம்வத் திரலாப மலர்மோகக முபவீத மகத்தின் பேறு
முத்தமசந் தனக்குழம்பு பெருஞ்செல்வ மமுதேறற லுயர்சா ரூப
மெய்த்தூப மாசமன மருக்கியஞ்சா னித்தியமாம் விமல மூர்த்தி
மொய்த்தமணி யொலிக்கிராக் கதநிவிர்த்தி தீபமுயர் மோகக மாகும்.()

அக்கரா லத்தியுயர் சித்திதரு மமலகருப் பூர தீபஞ், செகககமலை நோக்குறுநீ ராஞ்சனஞ்சத் துருநாசந் திருவெண ணீறு, தொக்கபுவி

யாடசிதரும் பூமடந்தை யருள்பெருகுஞ சுருள்கொண் டேத்த
முககணனமுன னுறநடிப்பன சததிரஞ்சா மாஞனருதி முதறபா
டறகே. (௪அ)

மததனந்தா னியவிருதததி காடிசயம் வளர்படகம் பாவ நாச
மெய்ததிமிலை தொடர்காமி யமபலவு நல்விருத்தி விதிதத யாவு
நித்தமௌனி லொருமடமகு பிரமோதாட்ர் சதமடங்கு நிகழத்துங் காலை
யிதததுணையுந் திரிகூடத நியறறலா யிரமடங்கென றிசைககும் வேதம்()

வேறு.

என்னவா கமங்கள் யாவு மியன்றிசி ரொழுக்கம் யாவு
முன்னுற வுணர்ததி மூன்று தீக்கையு முறையின முற்றி
யன்னவர் தமைப்பொற பீடத் தமைத்தபி டேகஞ் செய்து
நன்னகர்ப் பெருமான மூல நாமமந் திரங்க ளோதி. (௫0)

நித்திய முதல மூனறு நிகழ்சரி யாதி நானகுஞ்
சுததியோ ரைந்தும பூதி சாதனநு தொடர்புந் தொண்டர்
பத்தியெண வகையு மைநது பதமூநாற கதியு மேலை
யத்துவா வாறுங் கூறி யருச்சனை புரிமி னென்றான் (௫க)

மன்பெருந திரிகூ டத்து மாயனைப் பரம னாக்கித்
தென்புவிக் கோட்டந் தீர்த்துத் தேவர்மா முனிவர்க் கெல்லாங்
கொன்பெருந் தகைமை பூண்டான குறுமுனி யம்ம வீச
னனபர்தம பெருமை தனனை யாவரே யறிதற் பாலார். (௫௨)

புரிசடைத திரிகூ டதெதம் புனிதனை யின்ன வாறே
தெரிவுறப் பூசை செய்யுஞ் சிவமறை யவருட் டானு
மொருவனென் றிருந்து பூசித் தோங்குசீ ரவை றைநி
வரிசிலைத் திங்க ளீரு வதிந்தனன் மலைய யோகி. (௫௩)

இதுதமிழ் முனிவன் செய்கை யென்னனு மவனுக் கோது
மதிசயப் பரம கீதை யெட்டினு ளசலந தீரத்தம்
பதிசிவம் பரைப லாவும பகர்நதனை யிரண்டி லேனக்
கதிதொடர் வேடன் செய்கை கழறெனக் கழறுஞ் சூதன். (௫௪)

நான்காவது சிவபூசை விதியுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருததம் ௩௩௧.



# ஐந்தாவது நதிவிழ் வேடன்கதிபெறு சருக்கம்.

மருவி மாலை யிருகத்தை வாரணம
வெருவி மாலைமென காந்தளைத நியென
வொருவி மாலைவிண மேறப்பிசைந்த துறநீ
ரருவி மாலை யணிதடங குன்றமே. (க)

சூரல வேலிசெ சிறுகுடித தோகைமார்
வேரல் வேலியில வேட்டஞ்செய் வேடர்மென
மூரல் வேலியிட் டாலென முத்தமார்
சாரல வேலியங் கொலவிச சயிலமே . (உ)

வேறு.

அத்த லைபபெருங கிரியின ரரியின முறமுவோர்
மைதத லைககருங் கடல்புரை மேனியர் வடவைக
லொத்த லைததன குஞ்சியர் கொடியபா தகங்கள்
வித்த லைபபுரி வினைப்பெருஞ் சிலைககைவே டுவரே. (ங)

ஐவ னத்தினை யரிதல்போ லகிலொடு சாந்த
மொய்வ னத்தினை யெறிந்தனர் முறைமுறை தெளித்துக
கொய்வ னத்தினை யழித்திடுங் கிளிகுலந் துரப்பத
தெய்வ நத்தினைப் பொருகளைக கிளியினஞ் செறிந்தார். (ச)

மருமலர்க்கொரு தாளென நீத்தவரு சியரை
யருநிலத்திரு தாள்பெறு மிதணினமே லமைத்துப்
புருவ விறகளும பொருவிழிக கணைகளும் போதா
திருக ரததினிற கறகளுங் கவணைகளு மீந்தார (ரு)

இருளுசெ விககிடை யெனலங கொடிச்சிய ரிசைத்தே
னருந்தி டத்திரி வாரமு தாசன ரவாககு
மருந்தி டததினந் தேடுவ ரம்பையா வரைமேல்
விருந்தி டததினந் தேடுவர் வேள்விவே தியரே. (சா)

குனறின மேற்சரு கருந்தியும் வருந்தியுங குகைவாழ்ந்
தென்று மேயினா யாரெனு முனிவரோ வினையார்
மனற லோதியர் கிளிகடி மழலைவாய் மொழியி
னெனறு தேனிசைக குருகியே யினைததன ருடலம். (எ)

கனத்த னத்தியல் சிவந்தவாய்க் கருங்கணீ வியரை
வனச ரப்படா வளாபுனஞ் சாகலோ வைகுதார்
புனம ழிக்கவும் பொருப்பில்வாழ் முனிவர்தந் துறவு
தனைய ழிக்கவுந் தவத்தினை யழிக்கவு மன்றோ (௮)

கொங்கை யார்நரி நடையிறை பிடிகுளிர் புனத்து
மங்கை யார்விழி யாறபிணை சாயலார் மயில்கள்
பொங்கு மின்னிசை யார்குயி லெனமென புகுந்த
செங்கை வேடரவர் கலவிலர் யிசைபிறை நிறைந்த (௯)

கூன லங்குர மதிநுதற் கோதைய ரோசையும்
பான லங்குர லோசையே பசுங்கிளி யழைப்ப
வேன லங்குர லழிந்தன விழுந்தன புனமுங்
கான லங்குர லடிகளும் பிடிகளுங் கனல (௧௦)

விருப்பு றும்புன மழிதலு முழிதர விரவிப்
பொருப்ப ரானவர் கானவர் கணத்தொடும் பொதுளிச்
செருப்புந் தோல்களுஞ் செறித்துவார் சிலைகணை பிடித்து
நெருப்புங் காலுமொப் பாமெனத் திசைதொறு நிறைந்தார். (௧௧)

வேறு

கொம்பு கோடுடை வேடுவர் கூர்வலை
யம்பு வில்லெறி வல்லைய மாடல்வாள்
பம்ப மூசினார் பைம்புனப் பாவைமார்
வெம்பு ரூரம் விழிப்படை மொய்த்தல்போல். (௧௨)

மானை யுங்கட மானையுந் தாக்குவா
ரானை யும்பிடி யானையுஞ் சூழுவா
ரேனை மாக்கள் சுவடெடுத் தேகுவார்
பூனை போலவர் புலியெனப் பாய்வரால். (௧௩)

வேறு.

வெடிகு ரற்குல மதகய மெதிர்தலும் வீர
ரடிவ யிற்றிடை மலைமுழை யசனிபோ லுழைந்து
துடிய டிக்கிடை யோடுபு மருப்பினைத் துமித்து
நெடிய மாலெனக் குத்துவர் மத்தக நெரிய. (௧௪)

கொல்லு குதகிர வேங்கைமேற் குதித்தலுங் குதியார்
விலலு குதகிடு கொடுங்கணை விடுத்தனவாய கிழித்துப்
பல்லு குதருகிர் காலொடுந் துணித்துடல் பதைப்பச்
செல்லு குதலெனச் செறிபடை வாளிறை சிதைப்பார். (கரு)

கரடி யைப்பெருங் காரெதிர் சூறைபோற கதையான்
முரடி ருத்திய முகண்டியாற் சிரமதின் முருக்கி
யொரடி முற்புகுந் தீரடி பின்னிழுத் துலைத்துப்
பரடி ருத்திவெங் காலினு லுதைப்பர்மெய் பதைபப. (கசு)

பனறி யைப்பிறை மருப்பொடுங் கிழிடும் பார்வை
துன்றி நிற்றலி னெதிர்செலா திடம்வலஞ் சுலவி
வென்றி வட்டமு நீளமுரு சிலம்பங்கள் விளைத்துச்
சென்றி ருட்கிருண் மலைந்தெனச் சாரிகை திரிவார். (கஎ)

தடறு ரீஇக்கொடு வாள்விதிர்த் தெதிர்தலுந் தரியா
மிடறு டைத்ததிர் குரலொடு திசைதிசை விரவக
கடறு கட்டினர் கைவலை வீசினர் கலந்தா
ரிடரு பட்டொரு புவனமுன் குதித்ததோ ரெறுழி. (கஅ)

குடபு லத்தினர் வடபுலத் தினர்குண புலத்தோ
ரிடம்வ லத்தினும் விலகினர் விலகுறு திவனே
வடபு லத்தெழு கனலியைத தென்றிசை மறித்தான்
கடவு மருசினைப் பஞ்சவன் வளைத்தமை கடுப்ப. (ககூ)

புண்கி ளைத்திடப் பல்படை யோச்சினன பொருவான்
மண்கி ளைத்தெதிர் வருதலும பொருதல்பின வாங்கான்
விண்கி ளைக்கினும் விடானெனச் சூகரம் வெருவிக்
கண்கி ளைத்திடாத திசைதொறு நுழைந்துபுக கதுவே. (உ0)

மலைந்த சாரியிற் சரியையர் போல்வலம் வருவா
னலங்கு பூச்சரு சொரிதலிற் கிரியைய ராவான்
சிலம்பு கர்ன்புகுந் தொளித்தலிற் பொறிபுலன சேர்த்தி
யுலைந்தி டாதொளி யிருத்தலின் யோகிய ரொப்பான். (உக)

வேறு.

காணுமுன் சகலரைப்போற சுவடுகண்டாற் பிரளயா கலர்போற கண்டுஞ, சேணுகில் விஞ்ஞான கலரைபபோன மலந்திரியத் திரிய வேடன, மாணுக்க னெறிபார்க்கும் பாவனையாற பரிசத்தால் வனகட் கேழல், கோணுாந்த குணடமணட லாதிகளா னெறிவருந்தனுங் குரவன் போனும (உஉ)

இனமானின சணவகூடிப் பிரியுமிடந் தொறுமபிரியா தேகும் வேடன்
வனமானை தசதுவமவிட டகனறு மகலாத மலமே போலாறுன
புனமேறிக காலவரைதாய்த திரிகூடம புகுமேனம புகுதாச சுத்த
நனவேறிக கனவகனறு சுழுத்திபோய்த துரியமதைநணுகுவான்போல்.

வேறு.

தாவு நீர்ச்சிவ மதுகங்கை சணபகத தடாகம்
வாவி மேறறடா கததுலாய் மநதமா ருதஞ்சூழ்
காவி லெங்கணுஞ சுலவுற கமழ்திரி கூடத்
தேவர் தேவனைத் தேடுமோர் சூகரஞ் சிவனும் (உச)

நிலைய ழிந்துபோய்ப் பள்ளியங் கானிடை நெரிந்து
வலைசு ழிந்துகை வாள்விசை மடுத்துவல் வேடன
சுலையி லம்பொரி இவனைதடி பிழைத்தொரு செழுங்கா
ரலைப டிநதென வருவியந தடத்துவீழந் ததுவே (உரு)

வெருவி வீழ்தலும வேடனுங் கயத்திடை வீழநதா
னருவி யந்தடம் புகலென வுடைதலா லதுவே
செருவி லேற்றெனச் சென்றெதி ரேறறதோர் வன்மீன்
பொருவில் சூகர நீந்திநீர் கடந்துபுக் கதுவே. (உசு)

வால றைந்தெதிர் வாய்மடுத திடஙகர்மா வலிபபக்
கோல வெஞ்சிலைப புனவனுஞ் சினவிமேற் குதித்தா
னோல வெங்கர வாளினாற் கிழிகருமுன் னிவன்றன்
மூல மேனியை யெயிற்றினாற் கிழித்தது முதலை. (உஎ)

நிலத்தி லோடுதேர் நீர்புக லரிதுநீள் கயமாஞ்
சலத்தி லோடமுந் தரைபுக லரிதெனுந் தகைத்தால்

வலத்து வேடுவ னிடங்கராற் புனலிடை மாய்ந்தா
னிலகு ளாராத்மை யெளியநம் வெலவரே யிடத்தால். (உ௮)

கொலைசெய் பாதக னாகியு முயாதிரி கூடத்
தலைசெய் சித்திர நதியினின் மாக்க ளடைந்த
தலைமை யாளுயர் வானமேன மானமேற றுவிச
சிலைசெய் வில்லியார் கயிலைமால் வரையினமேற் சேர்ந்தான். (உ௯)

மந்த மாருதந் தவழ்திரி கூடமும் வரதன
சந்த வார்பொழிற் கயிலையும் வேறென்த் தகுமோ
விந்த மால்வரைத் தடத்துவீழ்ந் திறந்தவ னியல்போ
யந்த மாலவரைச் சிகரமே லமாந்தன னாதலால். (௩௦)

நிந்தை யாரகொலை வேடுவ னருவிநீர்த் தடத்து
வந்த யாவொழி மகிமையை யுரைத்து மாதவாகாண்
முந்தை யோதுசித்த திரப்பொது மகிமையை முனிசகா
வெந்தை யார்நடங் காட்டலிற் காட்டுது மெனறனே (௩௧)

வேறு.

என்று முனிவர் வாழ்த்தி யெழுபவக் கலைகண் மாய்த்
தென்றலம் புலிபாய் சாரற் சிவதிரி கூடத் தானை
மன்றன்மா மலர்த்தாள் போற்றி வரங்கொண்ட வானோர் பூசை
நன்றுறப் புரிந்த வாறு நவில்கென நவிலவான சூதன் (௩உ)

ஐந்தாவது நதிவீழ் வேடன் கதிபெறு சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் ௬௭௧

---

## ஆறாவது வானவர் வழிபடு சருக்கம்.



நறுமலா விரிஞ்ச னாகி நாரண னாகி வெண்கோட்
டுறுவிடைப் பரனு மான வொருவனை யிருவர் தேடிக்
கறுவினாற் காணகி லானைக் கனிந்துபூ சனையிற காணப்
பெறுபொருள் கருதிப் போந்தார் பெரியவன் றிரிகூ டத்தில். (௧)

தம்பெருஞ் சிவத்து ரோகந் தவிர்த்துவான் பதங்க ளீந்த
நம்பனைத் திருக்குற் றால நாதனைப் பூசித் தேத்த

விம்பரில் வரம்புனை வேண்டு மெனாடிசைக் கடவு ளோரு
முமமரும் விசும்பா ருக்க வொருவழி விரவிப் போந்தார். (௨)

கோலமால் வடிவாய நின்றார் குறுமுனிக் குருகி மேனு
ளாலமா கடவு ளாகக் குறுகுமா புத்தனைக் காணபானக்
காலமோ முனிவர் சித்தர் கருடர்கிம் புருடர் யாமோர்
மேலையா புவன மூன்றில் விபுதரு மெழுந்தார் மன்னோ (௩)

அரவணைத் துயிலு மாய னமபுயத் துறைவோன் வானோர்
புரவலன் முதலோ ராய தலைவரும் புலவோர் யாரும்
விரவிமுச் சிகரத் தாலை விதிப்படம் விண்டு லோகஞ்
சுரருறை சுவர்க்க மூன்று மொத்தது சுருதிக் குன்றம். (௪)

விணபக வெழுமுக் கோட்டு விமலவே தண்ட மேவி
யொணபக லுதிக்குங் காலை யுயாமது கங்கை யாடிச்
செணபகத் தடாக மூழ்கித் தேனிருல கிழியக் கோட்டால்
வண்பக டுழக்குஞ் சாரல் வடமுகத் தருவி தோய்ந்தார். (௫)

அருவியந் தரங்கக் கங்கை யாரமு மகிலும் பொனனுங்
குருமணித் திரளு முந்துங் குவைகளாக் கொழித்து வீசத்
திருவல கிடுவார்க் கென்றுந் திருப்பணி யிடைய றுத்த
பொருவருஞ் சங்க வீதிப் புறம்வலம் புரிந்து போந்தார். (௬)

அகமதி லுருவா வாயி லைந்துமைம் பொறிக ளாகச்
சிகரிநாற் கரண மாகச் செழுந்திரு வீதி மூன்றுந்
தகுதிமண் டலங்கண் மூன்றாத் தரணியம் பதும பீடந்
திகழ்பரஞ் சோதி யான சிவலிங்க வடிவங் கண்டார். (௭)

துதித்தனர் பாடி யாடித் துள்ளினா வெள்ளிக் குன்றா
மதித்தனர் திரிகூ டத்தை மணிமதிற் கோயில் வாயில்
குதித்தனர் கருணை மூர்த்தி குரைகழ லடிக்கீழ்ச் சென்னி
பதித்தன ரின்ப வாரி படிந்தனர் வானோ ரெல்லாம். (௮)

சேண்மிசைக் கங்கை நீருந் தேவதா ருத்திற் பூத்த
நாண்மலர்த் தொடையுந் தாரு நறுஞ்சினை வீசுந் தூசும்

பூண்முதற காம தேனுப் பொழிதரு பாலுந தெயவ
நீணமணி வடமும வாரி நெடுநதிரை யமுதும வாரி. (௯)

மருததினுக் கிறைவன் றார்பப வருணனீர தெளிப்ப வீதி
யருக்காபல விளகக மேநத சமீரணபூ மாரி தூவத
திருககிளர் திசைக டோறுந் தேவதுந துமிக ளாரபப
விருககினல் வசுககள் வாழதத விநதிர னேவல கேட்ப (௧0)

மற்றுள திக்கு வேந்தர் மாபினுல வாயில் காப்பக்
கற்றையங் கவரி தெய்வக கன்னிய ரிரட்ட வேதர்
முற்றுள சாந்தி வேள்வி முறைமுறை யியறறச செஙகண
வெறறியந திகிரி யானே விமலனைப பூசை செயதான (௧௧)

சீதர னருச்சித தேத்தத் திசைமுகத தவனுந தெயவப்
போதினு லாரா திப்பப் புரந்தரன முதலோ ரெண்ம
ராதவர் வசுககளாதி யமரரே முதலா யுள்ள
மாதவர் புரிநதார் பூசை வரதனைத் திரிகூ டத்தில். (௧௨)

தெளிதரு பசும்பொன னூட்டுத தெயவதப் பொருளால் விண்ணோர்
களிதரு பூசை செய்து நாள்பல கழிதது மீசன்
வெளிவரா வகையாற பணடு வேழமபூ சிதத காவி
லளிபடாப் பூவா னீரா லருச்சனை புரிவ தானார். (௧௩)

பூசனை திருக்குற் றால புரந்தனிற் பொருளாச் செய்து
வாசவ னயனமால் வானோர் வழிபடா நினற காலைத
தேசமர் திருவெண் ணீறுஞ செஙகைமான மழுவும பசசைத்
தூசணி மருங்குந் தோனறத தோனறினன மறைகளுந் தோன்றான் ()

கையிலஞ் சலிகள் பூப்பக கருத்தெலாங் குளிர்ப்ப வானோர்
மெய்யெலாம் புளகம் போர்ப்ப விழிதுளி பொழிய நோக்கித்
தெய்வநீர்த் திரிகூ டத்துத் திரைபொரு சஙகக கோயிற்
சைவமா மணியைக் கணடு சரணெனச் சரணம் பூண்டார். (௧௫)

பூண்டுமா லயனும் யாஙகள் புரிதரு செயல்க ளோர்ந்தோ
நீண்டநின் மவுலி பாதந் தேடநீ டூழி கால

மீண்டுநீ படைத்துக காததா யெமக்குமோ காட்சி தந்தா
யாண்டகை கருணை வாழி வாழியென றருளிற போநதார். (கசு)

வந்தனை புரிந்து வானின மாலயன போன பின்னார்ச்
சிநதனை யமரர் பூசை தினஞ்செயப் பணியபா யெனன
நந்தணி குழையா ஞெகக நனபகற புரிநதீர் நீவிர்
சந்ததங் கங்குற காலந தமிழ்முனி புரிக வென்றுன. (கஎ)

பன்னக ரியககர் சிததர் படிவர்விஞ் சையாமற றுள்ளோ
ரிந்நகா விடைமேற காட்சி யெமககரு ளென்ன நாதன்
மனனுயிா விழாகக டோறும் வநதென வருளிச செயதா
னனனவர் பரவி யேக வருசசனை தொடுததார் விண்ணோர். (சஅ)

வேறு.

தையயனம் வேட்ட வுவாத தருபூச மகமாகச சிவனி ராத்ரந்
துய்யபாற் குனத்திருநாண மேடவிழுப் பரணிதுவட் டாநாட்பௌவம்
வைகாசி மாகவிழா வளராானி முககனிநனா மாத பூசை
செய்யபிர தோடமுவாச் சஙகிரமந திதிவாரந் தினங்கள் யாவும். (கக)

தெறும்பலா தவன்மறுகித தேரோடும் வழிவிலங்கத் திங்கண் மேனி
கறும்பலா வுயர்குவடு முகடுதொடுந் திரிகூடக் கடவுட் சாரற்
குறும்பலாச் சுருதிநிழ லுறைவானைச் சுருதிமொழி கொண்டு பூசை
யுறும்பலா கமவிதியான மதியாறும் புரிந்தமா ரும்பர்ப் போந்தார். ()

வேறு.

அராவடம் புனைந்தார் பூசை யமரர்செய் முறையி தென்று
பராவட நிழலி லெம்மான் பாலுணர்ந் தவன்பாற் பெற்ற
விராவட கலை நூல் வல்லான் வியாதன்மா ணுககன் கூறித்
திராவட முனிசெய் பூசை செப்புவான் முனிவர் வேண்ட (உக)

ஆருவது வானவா வழிபடு சருக்கம் முற்றிற்று
ஆகத திருவிருததம சகூஉ.

# ஏழாவது குறுமுனி வழிபடு சருக்கம்.

சந்தனத்தென் பொதியமுனி சண்பகததினபசுந்தாது ததைந்து திங்கள்
கந்தரத்தி னரமகளிர் முழைதோறு நுழைதோறுங் கலவி கூடி

யந்தரத்தி னுடுமகளி ரிரிதலபோன் மணிசொரியு மருவிச் சாரன்
மந்தரத்து மேருவினும் விரிகூடத் திரிகூட வரைமேற் சென்றான். (௧)

வேறு

உம்பரம் ரேசாடு நாமூ நாடிபாபுக வானமேற
கொம்பரம ராடல்செய் குறும்பலவில் வாழு
நம்பரமா பூசைசெய் நனமலைய யோகி
யிம்பரமர் மாதவ ரெழுந்துதொழ வந்தான். (௨)

சிந்தைகளி கூர்தர வணங்கியெதிர் சென்ற
வந்தணர்கள் சைவரொடு வந்தருவி யாடி
மந்திரவெண ணீறுசிவ சாதனம ணிந்து
நந்துமுக வீதியுயா கோயிலவல நண்ணி (௩)

மூன்றுவடி வானவன்முன ஞானமறை முழங்கத்
தோன்றியுப ரைந்துவகை சுத்திகள் வருத்தி
யேன்றநெறி யாறுணரு மெண்வகைசெய் பத்தி
யானறமறை யோருட னருச்சனை தொடுத்தான. (௪)

பூந்துமகு டாகம மொழிந்தமனு வாலே
கந்ததயி லங்கொடு சொரிந்துகளி கூர
வைந்துகவி யங்களொடு மைந்தமுத மாட்டி
யுந்துமூவர் வாரிதி யடக்குமொரு கையால. (௫)

மேயகட லாறையு மடக்கிவிடு மாபோ
னேயமோடு பாறயிர் மதுக்கணிறை கனனற
ரேய முமவிதிப்படி சொரிந்துபல சார
மாயசுவை யிறசுவை விளைக்குமூறை யாட்டி. (௬)

மூவகைய சீதவிள நீர்முருகு சாந்தம்
பாவனைசெய் தண்ணளி பயிறறுமுறை பெய்து
தேவநதி கண்டுவட தேசநதி யேழுங்
கோவொடு மணிந்தபடி கும்பசல மாட்டி. (௭)

மாலையா ருக்குமவன் வாழ்பரனை மாமால்
கோலமமை வித்தபடி பொனனுடை குயிறறி

நால்வகைய சாந்துபணி நாணமலாகள சாத்திப
பாலமுத மேறறிநிறை பல்விய முழுங்க. (அ)

பேரொளி முன் னினறுபல பேருவொளி யெல்லாரு
சீர்பெற நடிகரும்வகை தீபமுறை யேந்தி
மூரிமறை நாறுமுயா முதசபி பூரான
வாரிபடி கின்றவென வந்து துதி சாத்தி. (கூ)

வேறு.

திருவாடி யயனமுவாப் பூரரு சோதி சிறபபைநதா வணிமூலம் பானு வார, முருளோணஞ் சதுர்த்திபுரட் டையிறகே தார முயாநவ ராத திரந்தசமி திருவி ழாககள், பெருமானை பசிவிழுத்து லாஞ்சேர் மாகம் பிறிதுளநித தியமுதலா வருச்சித் தேதத்தி, வருகாலை குறுமுனி செய் தொழுமபு மன்புமவள்ளலார் திருவுளதத்தி னிறைவு தோனறி. ()

இடப்பாலி னிறைவிதிரு மூலட் டானத் தெழுந்தருளித தவவடிவா யிமையோர் போற்றக, குடப்பாலிற பவித்திரஙகொண டருளிப் பூரங் கொண்டபெருந் தவககோல மூவந்து வெறபின, மடப்பாவைக் கருள்புரிந்து வலப்பால வைதது மலர்வேதன சடங்கியறற வந்தி பூததோன, கடபபாலிற புனலவார்ப்பக கருணை மூர்த்தி கடமுனிககு மணககோலக காடசி தநதான (கக)

வேதவிருக் கந்திருக்கா வணமாம வேதன விதிச்சடங்கு விதிப்பவனு முதகஞ் செய்வோ, ஞதியுல களந்தவனு முலகுக்கெல்லா மாக்கூமாணவள்வரிசை யியற்று வாளா, நீதிநகர் நன்னகராந் தெய்வக காவு நிதியிரண்டும் பணிசெயுமாங் கும்ப ஞதி, மாதவரு மமரருங்காண் பவராமிந்த மணககோலக் காடசியெவர் வழுதத வலலார. (கஉ)

பொன்னூசல் பாராடடுநெ திருவா ராட்டும் பொங்குதீ பாவளியும் பூசித் தேதத்த, தொன்னூலோர் கார்த்திகையிற சோமவாரக் துலங்குவிருச் சிகச்சுடாகார்த திகைமா நீப, மன்னேஙகு திருப்பள்ளி யெழுசசி பாவை மார்கழிவி ழாததிருவா திரைவி சேட, மின்னூசல் விளககாதி வருட மாத விசேடமுத னித்தியபூ சனைகளெலலாம். (கங)

வேறு.

மனமுதற் பொறிகண் மூன்றும் வழிபடக் கடக மாதி
தனுவெனுந் திஙக ளீறாத தருநிசிப் பூசை யாற்றிச்
சினகரம் வலஞ்செய் தேகிச் செண்பகச் சோலை சேர்கி
முனிவரன் றென்பாற் சென்றான் முதுகதிர் வடபாற் செல்ல. (கச)

மேவிய கடவுட் சோலை விரிமகச் சாலை யாக
வாவியே குண்ட மாக மடன்முறுக கவிழ்ந்த பூகந்
தூவிய பொறிகள் போர்ப்பத தூமலர் நறுநெய் வார்ப்பக்
காவியே புகையாக கஞ்சஙக கனலெரி காட்டக கண்டான். (கரு)

நின்றவர் பாவச் செந்து நிலையறக் கரிந்து வீழ
மென்றருச் சோலை நீழல் வெயிலெனக காய்தல் கண்டான்
மன்றல்யோ சனைமூன் றுள்ளோர் வல்வினைத தளிரெல் லாமோர்
தென்றலங கன்று மென்று தினறுதின் றழித்தல் கண்டான். (கசு)

நனிவரை யருவி நன்னீ ரொருதுளி நனையப் போநது
பனிவரை யனைய பாவம் பறிகொடுப பவரைக கண்டான்
மனிதரைத தேவர் கண்டு வணங்கிய தானங் கண்டான்
முனிவரை யினிதிற கூவி முதுமகத் தானஞ் சார்ந்தான். (கஎ)

அன்னதோர் காலை தென்ன னணிபெறும வெள்ளிச் சாலை
தென்னணி சம்புத தீபஞ் சிறிதெனப் பெரிதாச் செய்து
பொன்னணி யூப மேருப் பொருப்பென நிறுவி யாஙகண
மன்னுறு திரைகள் போல வரைகள்போற பொருள்க ளுய்த்தான். ()

மேனவில் பொருள்கண் முற்றும் விண்ணவர் தருக்க ளீய
வானவர் துதிப்ப வோம மறையவ ரியற்ற மேலோ
ரானவர் பிரமத் தான மமைவுற முனிவர் போற்றத்
தானவர் குலங்கள வாறச் சதமக னிறும்பூ தெய்த. (கஅ)

ஓதிய சோதிட் டோம மதகிய மங்கிட் டோமஞ்
சோதிசேர் வாச பேய மத்திராத திரகஞ் சோமஞ்
சாதுரங காட கஞ்சீர்ச் சிவகாமந் தரும யேந்தர
மாதிய சவிதத தி ரஞ்சே ரணிமணிப் புண்ட ரீகம், (உ०)

அச்சுவ மேத மாதி நரமேதம் பிரம மேதம்
விச்சுவ ஜிதமே தோடங்கி சசவ்மிரு மிராச சூய
மெச்சமிப் பதினெட் டுள்ளு மியன்மறை விதியோர்ந் தோங்கு
முச்சகம் புகழ வைஞ்ஞா றியாகமு முறையிற் செய்தான். (உக)

கொழுமக முகத்துத் தோன்றுங் குறுஉப்புகை யண்ட மூலத்
தெழுபுகைப் படலம் போலும் வலஞ்சுழித் தெழுந்தீ யாங்குக்
கெழுமுதீச் சுடர்கள் போலுங் கிளர்தவச் சுரம்ப னென்பா
னெழுகுதீ வினைகட் கூழி யுருத்திரன போலு மாதோ (உஉ)

சோலைவாய்த் திரிகூ டத்துச் சுருதிவேள் வியரு ளாவுஞ்
சாலைமு விருகாற் றோர்க்குச் சாய்ந்தன்றே வொற்றை யாழிக்
காலைவாய்க் கதிரோன் றேருங் கடல்புகு மலையில் வீழு
மாலைவாய் மதியின் றேரும் வானமேன் மான மாமால். (உ௩)

வேறு

ஒருமகம்வா னவர்போகஞ் சதமகமிந் திரபதமா முணராத் தக்
கன், றருமகமொன் றினிறகழிந்தான் சகரர்தொண் ணூற்றென்பதுஞ்
செய் தவர்நூ றுனர், பெருமகமைஞ் ஞூறியற்றித் திரிகூடத் தரன
ருளே பெற்றான் சும்பன், பொருமகந்தை யற்றார்க்கு முற்றாத கரும
முண்டோ புவன மூன்றில். (உச)

வேறு

குறைவறுதெக் கணவயன மதிக ளாறுங் கும்பமுனி பூசித்து
வேள்வி யாறறிப், பெறலருஞ்சீரத் தவம் புரியுஞ் சாலை சேர்ந்தான்
பேணினருத் தரவயனப் பூசை வானோர், முறைமையிதுவா மென்றுணர்த்
திச் சவுன காதி முனிவர்குழாம் புகழ்ந்துநனி வேண்டச் சூதன், விறல்
கெழுசித் திரப்பொதுவந் தரங்கக கூத்து வெளியரங்கம பெற நடித்தல்
விளம்பல் செய்வான். (உரு)

ஏழாவது குறுமுனி வழிபடு சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம ருகள.



## எட்டாவது வாசுகி தவம்புரிந்த சருக்கம்.

போதவடி வாகியொரு பூதரறி யாத
நாதவெளி வீடுதனி லாடுமொரு நாத

றாதிபரை காணவரு ளாசநட மாடுந
றீதில்பர மானசபை சிற்சபைய தாமால். (௧)

ஆழிதிரை மணிபுன லணடமிசை தாவ
வூழியுல கொககளு மொழிநூறுமொழி யாத
வாழிதிரி கூடவரை மன்றிலர ஞடல
விழியிதழ் மாதலைது மேவெருருவா காஞா. (௨)

ஆதலின் மகாப்ரம ராசியமட தன்றே
காதன்மறை யோதுமது காணவெரு மாலாய்
மாதவனு நானமுகனு மாதவ முயனறா
தாதளவு போதுகமழ சணபக வனத்தில (௩)

மாமகர மாதிமதி யாறுமுயா வானோ
பூமக வருச்சனை புரிநதுதம தீசர்
தாமகவு சித்திர சபைக்கிரு நடதமே
யாமக விருப்பட னருநதவ முயன்றா. (௪)

வேறு

உந்திபூத தவனும் பூமே லொருவனு மகவா ஞதி
யந்தரத தவருங குமப முனிமுக லறவோா யாரும்
புந்திசோ தவததி லாசை பூண்டனர் திரிகூ டத்தி
லெந்தையார் நடன பாதத தியாவசே யாசை பூணா. (௫)

சிவமது கங்கை மூழ்கிச் செண்பகத் தடாகந் தோய்ந்து
நவமது கஙகை வேய்ந்தார் நணிவட வருவி யாடிப்
பவமது வண்டு வீழாப் பசிபசெண் பககா வெங்குந்
தவமது வண்டு போல மொய்ததன தவதோர் சஙகம். (௬)

அன்னவா றயன்மா லாதி யருந்தவக குழாங்க ளெல்லா
நன்னகர்ப் பரனை வாழ்ததி நற்றவம புரியு மெல்லை
பனனவில் காள கூடப் பஃறலைப் பருவாயப் பாந்தள்
மனனவர் பரவு மன்னன் வாசுகி யென்பான் மன்னோ. (௭)

மதுகையி லறிவின் மிகக மணிமுடி யனந்த னென்னு
முதுதவத் துணைவன் மேனுண் முக்கணர் தொல்லைத் தில்லைப்

பொதுநடம் பணிந்தா னென்றும் பிலமுறை தானும் போற்றுங்
கதியினை விழைந்து சென்றான் கயிலைமால வரையின் மீதில். (௮)

பொன்னுயர் பொருப்பு நாதன் புயவரை தனக்கு நாணக்
கொன்னுபர் புரங்கண் மூன்றுங் கோபிப்பக் குணம தானான்
பின்னுமோர் கடலில் வெற்பைப் பிணிசெய்து மருந்துஞ் செய்தான்
மன்னுசீர் வெள்ளிக் குன்றில் வரதனை வணங்கி யேத்தி. (௯)

பொறியுடற் பசைவை செய்து புலன்கள்சூத் திரங்க ளாக்கிக்
கறுமனப் பாசம் பூட்டிக கலாதியேழ் தாளந் தாக்கி
யறிதரு பிரேர கங்க ளாந்திற லசைத்துப் பேதக்
குறியிரு தருவா லாட்டுங் கூத்தனை சரண மென்றான். (௧௦)

வேறு.

பணியும் பணியின் குலவேந்தைப் பணியின் பணியா ரருணோக்கி
மணிவெஞ் சூட்டுப் பிலவேந்த வரலா றென்னை யெனப்பிறவிப்
பிணியின் மருந்தே யுனைக்காணும் பெற்றி யதனுள் மற்று மொரு
தணிவில் காத லொடும்போநதே னருளாற் சாற்றத் தகுமென்றான். ()

நாத னுரையா யென்றருள நடுங்கி யொடுங்கி வாய்புதைத்துப்
பூத நாதா கங்காளா புனித மறைகள் காணாநின்
பாத நடனந் தனைக்கண்டு பணிந்தா னந்தக கடலாடுங்
காத லுடையே னெனவுரைப்பக கவுரி முகம்பார்த் தெம்பெருமான். ()

சடைமேல் இருக்கும் பிறைக்கொழுந்து தளிர்த்த தெனப்புன் னகைகூர்ந்து, கடைநோக் கருளி னமுதொழுகக் கனிவாய் மலர்ந்தங் கருள்செய்வார், விடைமேற் காட்சி யடியவர்கசு வேண்டும் வகையாற் புரிந்தருள்வோ, நடமேற் புரியும் பெருங்காட்சி நவில்வோ ஞான கார ணத்தால் (௧௩)

அனந்த னென்பா னெமைநோக்கி யனந்த முகங்க ளருந்தவங்கண்
மனந்தன் வயமாப் புரிந்தமையான் மற்றோ ருகத்தில் வந்தெய்துஞ்
சனந்தன் முதலோர் புகழ்தில்லைத் தலத்து நடனந் தொழப்பெற்றான்
கனந்தங் கியமெய்த் தவமவன்போற் புரிநீ யூழி காலமென். (௧௪)

பொருப்பின் சிலையா ருரைப்ப வந்தப் புனிதச் சிலைக்கு நாணுனன்
பெருக்க யுகங்கள் பலவுமுனைப் பிரிந்து தவங்கள் புரிந்தாறமேன்
றிருக்கண் கண்டார் தீவினையுங் காணபார் கொல்லோ சிவபெருமா [ன
னருட்கொண் டடிமை படைத்தனையா லாளக்கடனே யெனப் பணிந்தா

கிட்டாப் பதவி நடங்காணக் கிடைக்க வேண்டு மெய்ப்பெருமா
னெட்டாக் காலந் தவமியற்ற வியலா தெனபான றனக்கிரங்கிக்
கட்டா நிறைந்த பலகருப்பு கழியா வண்ணஞ் செறிபாகின
வட்டாத் திரட்டி வழங்குதல்போற் றிருவாய் மலர்ந்து வழங்குவார்.

பாடும் பூதம பணிசெய்யப் பயில்பாண் டரங்க மன்றினிடத்
தாடுங் கூத்துங் காளிமத மடக்குங் கூத்துங் கொடுமுயலைச
சாடுங் கூத்தும பிறாறியந் தக்க கூத்தா மனைத்துலகுந்
தேடுங் கூத்து நன்னகர்நந் தேவி யறியுந் திருககூத்து. (கஎ)

அந்த நடனங் காண்பதற்கா வரியு மயனும் வானோருங்
கொந்து சடிலப் பெருமுனிவர் குழாமும் பொதியிற் குறுமுனியு
முந்தை யுகங்கள் பலதலத்து முயன்றார் முயன்று முறமும
லிந்த யுகத்துந் தவம்புரிந்தா ரெமது திரிகூ டத்தணைந்து. (கஅ)

பற்று யிருந்து பிறதலத்துப் பல்லா யிரம்யாண் டியற்றுபலன்
குற்று லத்தி லோராண்டிற் கொடுக்கு மெனுமா மறைமொழியா
லுற்று ரயன்மான் முதலோர்க ளூலப்பில குளிகை கனவிவிட்டு
வெற்று யலைந்த வாதியாகள் வேதிக் குளிகை யடைந்தாறபோல். (கக)

சந்து மகிலுந் திரைசுருட்டித் தரள மெறிந்து பொனகொழிக்கு
நந்து திரட்டுஞ் சித்திரமா நதித்தண் கரையி லிருபாலும்
வந்து தவழசெண் பகச்சோலை மருவி யிருந்து தவம்புரிவார்
சிந்தை நினைந்த வரமெல்லாஞ் சித்தி யாகுஞ் சத்தியமே. (உ0)

பனக வேந்தே தென்கூடற் பதியின் முதிய வெள்ளிமன்றுங்
கனக சபையாம் வெளிமன்று மாலங் காட்டின மணிமன்று
மனக நிறைதாம் பிரபபொதுவு மார்க்கும் பொதுவாந் திரிகூடச்
சனகர் புகழ்சித் திரமன்றந் தனிநம் பரம ரகசியமே. (உக)

வேறு.

ஞாலமே னதிகளெலாம் படிந்தபலன சித்திரமா நதியே நலகுந
தாலமே லுயர்புனிதத் தலங்களெலாந தரும்பேறு தருங்குற மூல
மூலமா ரிலிஙகமெலாம் பரவுபலன் றிரிகூட மூர்த்தி நல்கும்
வாலிதா மததலத்தை நோககிவரி லடிககடியோர் மகப்பே றெய்தும். ()

வேறு.

உருகன் புடையா யறிந்தறியா தொருநா ளவ்வூர் வைகிடினும்
பொருகண் டகமாம் வினைநீங்கப் புகுவார் கயிலை யெனப்புகன்று
மிருகண டுவின்சீர்க் குலமகற்கா வெங்கூற் றுதைத்த பெருமானார்
வருகன் டகசே தனனசரிதை வாக்கா லருளி விடைகொடுததார். (உரு)

நஞசங களிககும விழிபாகர் நலஞ்சேர் கருணைக் குருகிமன
நஞ்சங் களிககும் விடைபெறறு நயப்பா லேகி நதிதடநீ
ரஞசங களிக்கு மணிகருவா வானபால பிறிதுண் டைகிடக்கு
மஞ்சங் களிககுந திரிகூட புரத்தி லணைந்தா னரவேந்தல் (உச)

இந்து முடிசோ திரிகூட மீசா வடிவென றேபணிந்தா
னுந்தி பூததும் பாரிடந்து முயர்வா னளவு நீண்டதனு
லந்த நெடுமா லெனத்தொழுதா னலர்பூ மேலாய்த் திசைமுகத்து
வந்து மறைகண் முழங்குதலான் மலரோ னென்ன வணங்கினான். (உரு)

கூட முயர்வா னகடுரிஞசுங் குவட்டி லிருநது குதிபபதனு
லாட லருவிந தேனுறு வானு றெனவே யதிசயித்தா
னீட லரவப் பஃறலையா னிரைத்த மணியா லருவிதுணைச் [ன்.
சேட னெனவே சிறிதயிர்ததான் சிலையான் மகவா னெனத்திகைத்தா

அண்ட ரகலா துறைவதனு லளியாப் பொருளு மளிப்பதனுல்
வண்டு படாத செணபககா வளாகற பககா வெனமருண்டான
பண்டை யறங்கள் வளர்ப்பதனுற பசசை நிறத்தாற பரைவடிவாக்
கணடு பணிநதான் றவப்பள்ளி முனிவா கணத்தைக் கண்ணுற்றான. ()

வேறு.

தொழுதகை பணைக ளாகத் துணர்ச்சடை வீழ்து வீழ்த்துய
யழுமா மெனநிற பாரும பரந்துசெல் லெடுப்ப மேனி

முழுதும்வன் மீக மாகி வான்மீகி முனியொப பாரு
மொழுகுடல் பங்கி போரப்பி வுரோமச னெனநிற பாரும். (உஅ)

ஒருபத மூனறு காலா வொருபத மெழுகா லாக
வருபத மூனறு மோரந்து மாதவம் வளாக்கின் றாருந்
தருபதந் தலைமே லேற்றித் தரையினமே லிருககின றாரு
மிருபத நிலையே யன்றி யியககமற் றுறைகின றாரும. (உசு)

ஊசிமே லொருதா ளேற்றி யொருவிரன் மேனிற பாரு
நாசிமேற பிராண வாயு நடைதப விருக்கின றாரும்
வாசிமே லேறி வீதி வலம்புரி மகிமை யாருங
கூசிமேற சுடரு மஞ்சக் கொழுஞசுட ரெழுபபு வாரும் (௩௦)

சருகிலை யருந்து வாருந் தண்புனல் பருகு வாரும்
பரிதியின் கதிருண் பாரும் பவனனைப் பொசிககின் றாரும்
வருகனி காய்தின் பாரும் வனத்திடைக் கிழஙகு மூல
மிருபொழு தொருபோ தூணடு மின்றியு மிருககின றாரும். (௩௧)

தருக்களாய் நிற்கின் றாருந தழலிடை சரிக்கின றாரு
முருக்கள்போ னிறகின் றாரு மூணுட னுறகக மின்றிச்
செருக்குற வடஙகிக் கல்லாய்ச் சிலைகளா யமாக்ன் றாருஞ்
சுருக்கிய வுண்டி யன்றிப் படிவமே சுருஙகா தாரும். (௩உ)

மேருவி லிமயந் தன்னின் மிககுள கிரிக டமமிற்
பாருள வனங்க ளாதி பறபல தலங்க டம்மி
லோருகந் தவஞ்செய் தாருஞ சதுர்யுக முஞற்றி னாரு
மேருறு மனுவின வாழ்க்கை யெழுபத்தோ ருககின் றாரும். (௩௩)

மாயிரும் புவனங் காக்கு மனுககளீ ரெழுவர் வாழ்ககை
யாயிரஞ் சதுர்யு கஙகண டயன்பகல் கழிததிட டாரு
மேயினர் திரிகூ டத்து விரிதவம் புரிகின றாரைச்
சேயுயா பாந்தள் வேந்தன் கண்டனன் றிகைத்து நின்றான. (௩௪)

இன்னணம் புரிவார் முன்யா னெத்தவம் புரிகேன் புககண்
மூன்னவன பணியாற செய்வேன் முற்றினு முறறு தேனு

நன்னகர் வனத்துப் புல்லாய் நனிமா மெனநின் றூறும்
பன்னகப் பிறவிப பாவம் பறிபடு மெனறு தோர்ந்தான். (நரு)

அந்தமா வனத்து மேவி யருந்தவ வேள்வி யாற்றுஞ்
செந்தமிழ் முனிதாள் போறறிச செம்மையஞ் செழுத்தும் பெறறுச்
சந்ததந் திருவெண் ணீறுஞ் சைவசா தனமும பூணடு
நந்தணி குழையார்ப் போறறி நனிதவக கிழமை பூண்டான. (நசு)

வனமிசைப் பாந்தள் வேநதன வருடமா யிரததி ரட்டி
யனிலமா கார மாக வாயிரத் திரட்டி யாணடு
புனலிலா யிரத்தி ரடடி பொருப்பிலு மவவா றூறறிக
கனலிலா யிரத்தி ரட்டி கடுந்தவம புரியுங் காலை (நஎ)

தேவாதந் தேவர் தேவன திருவுள மிரஙகி மைதோய்
மாவடு வனைய வுண்கண் மலைமகள் வதன நோககிப்
பூவலா திரிகூ டத்தெம் பொ நநடங காண வேண்டி
மேவருந் தவஞ்செய கின்றார் விரிஞ்சனமா லாதி விண்ணோர். (நஅ)

கன்மலை மரமாய்ப் புறறுய்க கழிந்தனர் முனிவர் வானோர்
சன்மவி பாந்தள் வேநதுந தவித்தனன் வேள்வி யாற்றித
தென்மலை முனியுந் தீராத் தவஞ செய்தான் வாரா யென்ன
நின்மலை யுடனே வெள்ளித திருமலை நீங்கிப் போந்தான. (நகூ)

எட்டாவது வாசுகி தவம்புரிந்த சருக்கம் முற்றிற்று.
ஆகத திருவிருத்தம் ருருகூ.



## ஒன்பதாவது திருநடச் சருக்கம்

அற்பினு லுறையும் போது மகலுறும் போதும் வெள்ளி
வெறபினை யகலா னென்ன விடையின்மேற் கொண்டு நாதன்
முற்பெறு தனையன் பின்னு முருகவேள் முன்னு மேகச்
சிற்பரை யுடனே போந்தான் சிவகிரி கூட நோக்கி. (க)

நடித்தரு ளெமபி ரானார் நன்னகர் நணுகுங் காலைப்
படித்தல மிருள்போய்ச் சோதி பரந்தது தவத்தோர்க் கெல்லாந்
துடித்தது வலப்பாற றிண்டோ டொழுதன சிரமேற செங்கை
ரடித்தன வுரோம மேனி போர்த்தன புளகப் புள்ளி. (உ)

ஞானநா யகனுா தோனறு நறகுறி யிதுவென் றேர்ந்து
தானமால் வரவு பார்ககுஞ சாதகத் திரள்கள் போலும்
பானுவி னுதயம் பார்ககு நேமியம் பறவை போலும
வானவர் முனிவர் நின்றா வடபெருந் திசையே நோககி. (ரு)

கருமணி மிடறு மூன்று கண்களும் புயஙக ளானகுங
குருமணி வடமுஞ செம்பொற கொனறைமா லையுமுந நாலு
மருமமும பணிலத தோட்டு மாசுணக கம்பிக காது
முருவமும பொலிந்து தோன்றத் தோன்றினு னுமையோர் பாகன. ()

உருகினார் விடைமேற றேன்று மும்பாதம பிரானுா னானத
திருக்கிளா வடிவங் கண்ணிற் காண்டலுந் திரளா னந்தப
பெருகெனும் வாரி தாவிப பிறவிவேர் மறிந்து வீழுந
தருகுலம போல வீழ்ந்து பணிந்தனா தவததோ ரெல்லாம். (ரு)

இறைஞ்சினா பணிவார் தம்மை யெழுகவென றருளா னோககி
நறுஞசினை மலர்ப்பூஞ் சோலை நன்னகர்த திரிகூ டததுக
குறிஞ்சியஞ சூரற் சாரற குறும்பலாச சுருதி நீழற
பிறங்குமுத் தரபாற செனறான் பிரணவத துருவாய நினறான். (சு)

தரங்கநீ ருலகுக் கெல்லாந் தவமலாற் பொருள்வே றுண்டோ
புரந்தர னயனமா லாதி புலவர்மா முனிவர் காணத்
திரம்பெறு திருககுற் றாலச் சித்திரப் பொதுவாந் தெய்வ
வரங்கினி லாடப் போந்தா னகிலமு மாடல் காண்பான். (எ)

வேறு.

துங்க வாணனே ராயிரங் கரங்களிற றுவைக்குமண் முழவோசை
கங்கை மாநதி யாயிர முகம்பொரு கனைகட லெனவார்ப்பச்
செங்கை யாயிரத் திரட்டிபா னுகம்பனுர் திரட்டியூ தியசங்கம்
வங்க வாரிதித் திரைகரத் தாயிரம வலம்புரி முழககேய்ப்ப. (அ)

திவவி யாழ்பயி லிருவரே ழிசைதிருச் செவிதொறு மமுதூற்ற
நவவி யாபகச் சுருதிக ளாயிர நாமஙக ளெடுததோத
வுவவி வாழ்புனற் சுரநதி திரையலைத் தூககநீ கரந்தூற்றத்
தவவி யாளமுந் தமிழமுனிச் சநகமுந தனிததுனி களிதூங்க. (கூ)

ஒருக ரந்தனிற படர்கனல் சுடாவிட வொருகரந் துடியார்ப்ப
விருக ரங்களில வரதமு மபயமு மெவ்வுல கமுங்காப்ப
வருள்ப ரந்தெழு திருவுளக் கருணையா லகிலமுங் குளிர்தூங்கச்
செருகு கொனறையங் கண்ணிதே னூறிடச் செழுமதி நிலவூறற. ()

மங்கை யாமளை யிருவிழி களிப்புற வொருபத மலர்தூக்கிக்
கங்கை வாய்விட வொருபதங் குறளனமேற ககிகொடு சதிதாகஙிப்
பங்கை யாசனன றுதிசெய நெடியமோற கதிசயம பரந்தேறச்
சங்கை யேந்திய குழைநிலாப் புயவரைத தடந்தொறுந் தவழ்ந்தேற ()

வேறு

புவன நாயகி தாளமாம் பொறகலம் பிடித்துத்
திவளம் பாணியாற் பண்ணொனுந திரளமு தாக்கிய
பவள வாயினு ளினனிசைச் சுவைபரி மாறந்
தவள வாணிநாற கவிவள நவரசந் தளிர்பப. (சஉ)

கருணை மேனிநா ருயிரம் பகலொளி சனுல
வுருவ வாணமுகச் செழுமதி நகைநிலா வொழுக
விருபெ ரும்பொழு துணர்கலா தியாவருந திகைப்பக்
குரும ணிக்கழ லடியவர் வினையறக் குமைப்ப. (சஙு)

திருவி ழிககரு ணைக்கட லருண்மடை திறந்து
கருது வார்மனக காலவழி கரைபுரண் டேறிப்
பருவ முறறவர் பகருவ முறைமுறை பாய்ந்து
சருக சிதநுலர் தவமுனிக் காடெலாந் தழைப்ப. (கச)

இடம்வ லங்களுந் தெரிந்தில ரிமைப்பிலா விமையோர்
நடமு கிறறலுங் குறித்தில ரட்டமா யிரத்தோ
னடைவு சாரிபார்த் தசைவிலன் றிசைமுகத் தவனுங்
கடவு ளோவியப் பொதுவில்வே ருேவியங கடுப்ப. (கரு)

வேறு.

கண்டலப் பொலிவான் மண்டல மூன்றே கடிமலர் தழைகெழு முடியாற, றண்டலைத் திரளோ சஙகணி குழையாற றண்மதி மானமோ மிடற்றுற், கொண்டலைத் தரித்த மேருவோ புயத்தாற குலவரைத் திரள்களோ வெளியால், விண்டலத் திந்தர சாலமோ வெனவும் விண் ணவர் மண்ணவர் திகைப்ப. (கசு)

அலர்மதிப் பிளவுந் தும்பையந் தொடையு மறிகலா தளியினஞ் சுழலப, பொலிதிருச் சாநது புயல்பொரப் புரிநூல் பொன்னொளி மினனொளி பொதுள, விலகிவில லுமிழுந் தொடியணி புயத்தில் வெண் டலை மாலைகள் மிளிரக், கலைமதித திரளென் றெழுநதுசெங் கரத்துக் கணபண கஙகணங கலிபப (கஎ)

ஏண்டவ ரிருவர் சிவசிவ சிவவென் றேத்திட விருவரி லொருவன் காண்டக வரிய சரணறு புரங்கள் கலினகலின கலினெனக் கலிப்ப வாண்டகை யமரர் சயசய சயவென் றார்ததிடச் சித்திர சபைக்கே தாண்டவம் பணிவார் தமக்கெலா முகநி தருந்தருந் தருமென நடித தான். (கஅ)

அடித்திர ளமரர் துந்துபித் திரளாஞ் சோபனக் கவுரிபொற் றாளம், பிடிப்பளாஞ் சுருதி சுருதியா யிரமாம் பேரிசை வாக்குநா மகளே, படிப்பளா மயனமா லிமையவர் பரவிப் பார்ப்பரா மகிலநா யகனே. நடிப்பனும் பொதுவோர் சித்திரப் பொதுவா நடநவில் காட் சியார் நவில்வார். (கக)

வேறு.

அஙக ணுவுன ததிசயத திருநட மனந்தமாம் விழிவேண்டு
நஙக ணுந்தற கெளிவரு காட்சிநீ நவினறரு ளெனப போற்றிச்
செங்க ணுன்முதற றேவரேத் தெடுததலுந் தெரிதர நடங்காட்டி
யெங்க ணுயக னெழிலரி யாசனத் தினிதுவீற றிருந்தானே. (உ0)

கவரி யேந்தின ரரம்பையர் சனகருங் காசிபன் முதலோரும்
பவரி ருஞ்சடைக் கும்பனும் புயங்கனும் பங்கயத தயன்மாலு
மெவரு மேபிராற் பரவினர் திருப்பலாண் டிசைத்தனர் திசைத்தேவ
ருவரி போறபரந தார்ததனர் தூர்த்தன ரும்பர்மா மலர்மாரி. (உக)

வேறு.

ஈசனை யயனு மாலு மிமையவர் முனிவர் யாரும்
பூசனை புரிந்தார் மன்னோ புடார்ச்சுன புரத்து மூன்று
யோசனை யிடமும் வீரி காத்திட வுயற்பொற் கோயில்
வாசமாம் விசையை காப்ப மணிமதில் வடுகன் காப்ப. (உஉ)

அம்பிகை யிசைமா தங்கி யாதியம் பரனே கூத்தன்
பைம்பணி யாசு மம்பொற் பாதல வாசல் பேரான்

கும்பனே பொதியில் வாசனா குரவர்மால் பிரம னுவா
ரும்பர்தந் துபியி னோசை யொலியறாத் தெய்வ மன்றம். (உங)

சயிலநீர்த் திருக்குற ளூந தனனிலற புதங்கண் டாழித்
துயிலநீத திருக்கு மாயன் றென்மைதா னுணரான போலக்
கயிலைநீத திருக்கு மாறு கழறெனக் கருதிக் கேட்ப
மயிலைநீத தரியாப பாகன டணிநகை துளக்கிச் சொல்வான். (உச)

மாதுமை யிடத்து மீன்ற மழகளி றிடத்தும் வைவேற்
காதல னிடத்தும் வெள்ளிக சயிலையி னிடத்து மிக்கா
வாதரந திரிகூ டத்தி லமைந்தன முகுந்தா விந்த
வேதரா சியத்தைக கூறே னுனக்கினி விளம்பக கேண்மோ. (உரு)

அண்டமு மகண்டம் யாவு மழிவுற வொடுக்கி நாளும்
வணடணி துளவத் தாரோய் வரன்முறை வகுக்கு நாளு
மொண்டொடிப் பரையும் யாமு முறையிட மாத லாலே
தண்டலி னுலகுக கெல்லாந் தாயகந் திருக்குற் றாலம். (உசு)

பாரினுக் காதி யானாற் பாரொடு ககனந் தாவு
நீரினுக் கரிய தானா னெருப்பொடு சண்ட வாயுப்
போரினைக் கடந்த தானாற் புரையிலா வெமக்கு மெம்பா
னூரியாம் பரைககுந் தான நன்னக ரல்லா லுண்டோ. (உஎ)

ஆதலா லூழி தோறு மானந்த நடஞ்செய் தானம்
போதருஞ் செயல்கண் மூன்றும் புரிதரு மூலட் டானங்
காதலா யுறையுந் தானங் கயிலைபோற் சிவலோ கம்போ
லீதலாற் பிறிதொன் றில்லை யிதுரக சியமே யாமால். (உஅ)

புலந்தரு தலங்கட் கெல்லாம் புடார்ச்சுன புரமே மேலா
நலந்தரு தலமா மென்று நவிற்றலுங் கமலக கண்ண
னிலங்குனிற காசி யாதி நிகழ்த்திய தலங்கள் யாவும்
பலந்தரா துளவோ வென்னப் பகர்தலும் பரம மூர்த்தி. (உகூ)

அருணைகே தாரந் தில்லை காளத்தி யாரூர் காசி
திருமறைக் காடு காஞ்சி செஙகாடு வெண்கா டாதி

யொருதலத் தோரோர் கூறே யுறைதரு திரிகூ டத்து
நிருமல வடிவாய் ஞானக் கலையெலா நிரம்பா நிற்பேம். (௩௦)

மெய்வளர் நதிகட் கெல்லாஞ் சித்திர நதிவி சேடஞ்
சைவமா தலங்கட் கெல்லாஞ் சண்பக வனிய மேலாந்
தெய்வமூர்த் தலைவ ரெல்லாஞ் சிவலிங்க வடிவ மேந்தக்
கொய்யமலர்த் தருவுந் தேவர் குறும்பலா வேத மூலம். (௩௧)

வேறு.

ஒருதலத்தி லாயிரம்யாண் டுதவுபல னோராண்டி னுதவுங் காசி
யருணைதரு மோராறு திங்களினு மத்திங்களி லருளு மாரூ
ரிருமதியிற் கேதார மொருமதியிற் கோகருண மேழு நாளிற்
றிருவளர்நெல் வேலிதரு மொருநாளிற் கொடுத்தருளுந் திருக்குற்றாலம்.

பொங்கேறு சுருதிபயில் குற்சரகோத் திரத்திலொரு புதல்வனா
மேனை, யிங்கேறி வடவருவி படிந்தொருநாட் பலனளிப்ப வீன்ற
தாதை, பங்கேறிய பவர்க்கமெலாங் கடந்தேறிச் சுவர்க்கமெனும் பதம்
பெற் றனர், சங்கேறு தடம்புயத்தாய் சித்திரமா நதிப்பெருமை
சாற்ற லாமே. (௩௩)

பூவுலகில் வாழ்ந்திருக்குங் காலமெல்லாம் பாதகமே புரிந்தா ரேனும்
பாவனையா லச்சத்தால் விளையாட்டா லெங்கிருந்தும் பரவி யோர்காற்
றேவரக சியமான திரிகூடத் திசைநோக்கிச் செங்கை கூப்பி
நாவினா லுரைப்பாரேல் வினையொழிந்து நமதுபத நண்ணு வாரே. (௩௪)

அப்பரிசு திசைநோக்கிப் பணிந்துபுட்ப கந்தமென மதருகிறசோந்
தான, செப்பரிது நெடுமாலே திரிகூடத் தலமகிமை செகமே லெங்கு
மிப்பதிக்கோ ருவமையிலை யெனப்பவாமன் பதைக்கிறையா யிமையோ
ராவ, ரொப்புளதென் றுரைப்பவர்கள் கருப்பமவிழ்த்தினர் பாவத்
துறுவா ரன்றே. (௩௫)

ஒப்பரிய திரிகூட வுயர்தலத்துக் கொருதலத்தை யுவமை யாகச்
செப்புவோ ரித்தலத்துச் சிவனின்மா லியமிகழ்ச்சி செய்யுந் தீயோ
ரிப்பதியி லென்று மெமையப் பூசிப்பார்க் கிடர்புரிவோர் யாவ ரேனுந்
தப்பிலா தவனிதனிற் புலையராய்ப் பிறந்துழலத் தகுவா ரன்றோ. (௩௬)

விரிவாக முதறெொழிலும் புரிநதுா மினிதிருககும் விமலத் தானம்
பரிவாகக காண்பார்கள் பணிவாாகண மகிமையினைப் பகாதற பாறரே
வரியாரா யெதகலகநி லுறைவாரூக துயிலெழுகா லொருகா லேனுந்
திரிகூடமு குறறால மெனநாவி லுரைதநெழுவாா சிவமே சேர்வாா ()

இன்னணமித தலமகிமை யாதலாற கயிலைவிடுத் தெந்த நாளு, நனனகர்சசின மபபொதுவி னணனு துமயா மெனபபரமர் நவினறு ராகப், பனனகசா யியுமயறுமம பணியாசுங குறுமுனியும் பணிவிட் டேகாா, பொனனகரின முரசொலியுரு சுரர்கணமுந திருநடமும் பொலிவா மெனறும (௩அ)

ஆதியாம பரையலது நன்னகாச்சிற பொதுநடன மாரும் காணுர்
காதலாற் சுரமுனிவர் பலகாலந் தவம்புரிந்து கண்ட வாறறுற
போதினுன முகனமூலப் பரைபரம ணியநதிரஙகள் பொறித்தா னனறே
வாதரா யணனமுதலோர் சிததிரமன றெனுநாமம் வழங்கி னூரால. ()

வேதநாத தமிழ்முனிக்குத் திரிகூடக்கிரிமுதலா வெள்ளி வெறபின
பூதநா யகருரைத்த வகைகளொடுந் திருநடமும் புகன்றே மென்று
சூதன்மா தவர்க்குரைபபக் கணடகசே தனன்சரிதை சுருதி வாக்கா
னுதாவா புகிக்குரைதத கதைவிரித்து நவிலுகென நவில்வ தானுன். ()

ஒன்பதாவது திருநடச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ருகூ௯.

## பத்தாவது கண்டகசேதனச் சருக்கம்.

கந்தநறுங் குழல்போலுங் கமழ்சோலை காசினிமான்
வந்தனஞ்செய் மருங்கேய்க்கும் வல்லிசா தங்களெலாம்
பைந்தனமே நிகராகப பணைதேோஙகிக் காரகிலுஞ்
சந்தனமுங் குஙகுமமுந் தண்பொதியுந் தென்பொதியம். (௧)

திரையமுதம் வானுடு சேர்ந்ததெனச் செந்தமிழ்த்தேன்
வரைநெடிய குடுமியினுல் வான்கிழிப்ப வதன்வழியே
தரையின்மிசைப் போந்ததெனச் சாய்ந்தருவி பொன்கொழித்துக்
கரைகிழிப்பப் பொருதுகடற கண்பொருந்துந் தண்பொருந்தம். (௨)

கரகமா முனிகரத்துக கமண்டலோ தகமாகிப
பரமர்வாழ் முககளவிற பாவவிநா சமபுரிநது
முரகரிக யேநதிரறகு முத்திதருந தடந்தாவி
விரவெறிந்த சித்தனுக்கா மெயசாய்ந்தார் பதிசூழ்ந்து. (௩)

விளஙகுதச ரதராமன் பூசனைசெய மெயததலமு
மளஙகுதவறு சிவசயிலமு வளர்வனனி யிச்சுரமுஞ்
செஞ்சவா லீச்சுரமுஞ் சேர்கடனை யொருபாங்காய்ப்
பஞசவிஙகம் பொலிந்தோஙகுய பச்சாறு மொருபாஙகாய் (௪)

சிவகயிலா யபபெருமான் செஙகணன் பதிபிறவுஞ
சுவகயிலா யங்குளிக்குந் துறையாகி நிறையாழி
யுவகையினர் திருபபதிக ளொனபதினு நமபருறை
நவகயிலா யங்களினு நடைபெறுந்தாம் பிரபன்னி. (௫)

வேறு.

பொருனைமா நதிப்பூம் பாவை வலம்புரிக குழிசி பூசி
யுருமணி யரிசி வாரி யுலைப்பெய்து துவர்ததீ மூட்டிக்
கரைகெழு சிறுசோ றாக்கிக் கனைதிரைப் பாவைக் கூட்டித்
திரண்மணற சிற்றிலாடுஞ் சிநதுபூந் துறையின் பாஙகர் (௬)

நிச்சநீர்ப் பொருனை யாறு நெடியபாற் கடலா வெறபு
நச்சர வணையாச் சென்னி நனிவைத்துக் கடற்கா னீட்டிப்
பச்சைமால் கிடந்தா லன்ன பசியதண் பழனச் சாலி
யிச்சைசேர் கமலச செல்வி யிருக்கையாந் திருநெல் வேலி. (௭)

கீற்றொளி மதிபோ னெறறிக் கெவுரிகூ றலது மறறைக்
கூற்றொளி கரந்தா லென்னக் குலவுபச் சுருவாய் மேனி
நீற்றொளி தனைப்போல் வேணி நிலவொளி தனைப்போற் கங்கை
யாற்றொளி தனைப்போன் முததி னழகுவேய் நிழலில் வாழ்வோன் (௮)

பரசமை யங்க ளென்னும் பகைதடிந் துலகிற் சைவத்
திரசமை யத்தை நாட்டுஞ் செயவிடைக கொடிநின் றாட
முரசுகண் டுயிலா வாயின் முகிலினந் துயில்பொற் கோயி
லரசுசெய் முக்கட் பெம்மா னுளுங்கீழ் வேம்ப நாட்டில். (௯)

